## சில பிரச்னைகள் ; சில வார்த்தைகள்!

# ஜன்னலை மூடாதீர்கள்!

மஞ்சுளா ரமேஷ்

'கதைப் புத்தகம் படிப்பதே பாவம்; வீட்டில் எந்தப் பத்திரிகையோ புத்தகமோ வாங்கக் கூடாதுன்னு எங்கப்பா 'கண்டிஷனா' இருந்தாரு. கல்யாணத்துக்கு அப்பறமாத்தான் நான் உலகத்தையே பார்க்கறேன்';

என்று சொன்ன பல பெண்மணிகள் உண்டு. சென்ற தலைமுறையில் மட்டுமல்ல இன்றைய தலைமுறையில் கூட பலரும் குழந்தைகளை அப்படித்தான் வளர்க்கிறார்கள்.

''அதையேன் கேக்கறீங்க, இப்ப புஸ்தகம் ஒண்ணும் தொடறா மாதிரியா இருக்கு? வீட்டுக்குள்ள ஒண்ணு நுழைய விடறதில்லையே. ஸ்கூலுக்குப் போகட்டும், வரட்டும்'' என்கின்ற தாய்மார்கள் இன்றும் உண்டு.

இப்படி வளரும் குழந்தைகளே தப்பித் தவறி டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டுக்கோ, முதன்முதலாக இருபாலாரும் படிக்க, பழக நேருகின்ற இடத்திலோ செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படும் போது தடுமாறுகிறார்கள்.

அதேபோல இன்னொன்று இன்று நிறைய தாய்மார்கள் தங்கள் குழந்தைகள் படிப்பில் முதலாவதாக இருக்க வேண்டுமென்பதில் வெகு கண்டிப்பாக இருக்கிறார்கள். அவர்கள் வாயிலிருந்து வருகின்ற பெரும்பாலான சொற்கள்....

''படிச்சியா, நாளைக்கு என்ன டெஸ்ட்?, ஹோம் ஒர்க் பண்ணியா, மிஸ் இன்னிக்கு என்ன லெஸன் எடுத்தாங்க?''

இதேதான். குழந்தைகள் நன்றாகப் படிக்க வேண்டும் என்பதில் தாயாருக்கு மிஞ்சிய அக்கறை கொண்டவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள், உண்மைதான். அதே போல தன்னுடைய குழந்தைகள் மட்டரகமான கதைகளை படித்துவிட்டுச் சீரழிந்து போய்விடக் கூடாதே என ஆதங்கப்படுவதும் மிகச் சரிதான்.

ஆனால் இவர்கள் எல்லாம் ஒன்றை நினைவு வைத்துக் கொள்ளவேண்டும். வெளிச் சூழ்நிலை சுத்தமாக இல்லைதான். ஆனால் அதற்காக நம் வீட்டு ஜன்னல்களை இறுக்கமாக மூடி வைத்து விட்டால் பிரச்னைகள் தீர்ந்து விடாது. வெளியில் இருந்துதான் காற்றும், வெளிச்சமும் வரவேண்டும். அதேபோல வாழ்க்கைக்குத் தேவையான சகல சாமான்களும் வெளியில் இருந்துதான் வந்தாக வேண்டும்.

'தாய்ச்சி' என்ற விளையாட்டு அந்தக் காலத்தில் உண்டு. ஒளிந்து கொண்டு விளையாடும் விளையாட்டு. அந்தக் 'தாய்ச்சியை' போய்த் தொட்டுவிட்டால் அவர்கள் 'அவுட்' கிடையாது. அதேபோல தாய்மார்கள் தாங்கள் 'தாய்ச்சி'யாக அன்பைக் கை நிறைய வைத்துக் கொண்டு குழந்தைகளை உலகின் உண்மைகளை உணர்ந்துகொள்ள விடவேண்டும். இந்த அன்புக் கயிறு எப்போதும் அவர்களைத் தடுமாறாமல் பார்த்துக் கொள்ளும். அது ரக்ஷையாக அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கும்.

வெளியுலகில் அசிங்கமான திரைப்படமும் உண்டு, வாழ்க்கையின் மகத்துவத்தைச் சொல்லும் சினிமாக்களும் உண்டு. கதை



களும் அப்படித்தான். இவைகளை இயற்கையாக குழந்தைகள் பார்க்க நேரும்போது, படிக்க நேரும்போது தடைசெய்யாதீர்கள். அதற்காக அவர்களை இழுத்துக் கொண்டு போய் படுக்கையறைக் காட்சிகளைக் காண்பிக்க வேண்டிய அவசியமில்லை.

உங்கள் வீட்டு ஜன்னல் திறந்திருக்கட்டும். அதில் தெரிகின்ற காட்சிகள் தெரியட்டும். பின்னாலே உங்கள் அன்பான அரவணைப்பு, உங்கள் வீட்டின் பெருமை, தாய் தந்தையரான நீங்கள். குழந்தைகளைச் சிறந்தவர்களாக வளர்க்கப் படுகின்ற பாடு, போரடிக்காமல் 'காஷுவலாக'ப் பேசும் போது நம் கலாசாரப் பண்பாட்டின் சிறப்பு இவற்றை இளம் நெஞ்சங்களில் விதையுங்கள். உங்கள் குழந்தைகளுடன் நீங்கள் முடிந்தவரை ஒன்றாகச் சாப்பிட, ஒன்றாகப் பேச நேரத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அறி வார்ந்த பேச்சுக்களை ஆரம்பித்து வைக்கலாம். அந்தக் குழந்தைகள் மனதில் நம் நாடு, நம் கலாசாரம், நம் குடும்பம், நம் பெற்றோர் எனப் பெருமை வரும். அசிங்கங்கள் எதிர்ப்படும்போது விலகிப் போக அவர்களுக்கு ஆத்ம பலத்தைக் கொடுக்கும்.

அதை விட்டு விட்டு சமூகத்தில் வளர்ந்து வரும் அவலங்களை அவர்கள் பார்க்கக் கூடாது என மூடிவைத்து விட்டோமானால் அது என்ன என எட்டிப் பார்க்கத் தோணும். சிறுவனும், சிறுமியும் காதலிக்கும் அமரகாதல்கள்(!) உலவிவரும் நாட்கள்தானே இவை. இவற்றைத் திருட்டுத்தனமாக பார்க்கும்போது, யாரேனும் ஆளைப் பார்த்தால் மனசு படபடக்கும். தெய்வீகக் காதல் என பேசத் தோன்றும். காதல் போயின் சாதல் என முழக்கமிடும்.

அதே போலத்தான் படிப்பும்-

'முதல் ரேங்க்' வாங்காமல் போனால் தோலை உரித்து விடுவேன் என மிரட்டும் தாய்மார்கள் நிறைய .

புத்தகப் படிப்பு மட்டுமே படிப்பல்ல. மற்ற கலைகளில் அவர்கள் வளரும்போது தான் 'பளிச்'சென்று உயர்வார்கள்.

எவ்வளவோ நீதிபதிகள் நம் நாட்டில் இருக்கிறார்கள். ஆனால் இலக்கியம் பயின்று, மேடைகளில் பேசும் நீதிபதிகள் பிரபலமாகிறார்கள். அல்லது மக்களோடு பேசுகின்ற நீதிபதிகள் தங்களின் சிறந்த கருத்துக்களைப் பரப்ப முடிகிறது.

அதே போல மருத்துவர்கள்-

இவர்கள் தங்களுக்குத் தெரிந்த மருத்துவக் கருத்துக்களைச் சொல்லும்போதோ, எழுதும்போதோ பிரபலமாகிறார்கள். இவர்களை விட மிகச் சிறந்த மருத்துவர்கள் இருக்கலாம். ஆனால் மக்களோடு அளவளாவும் 'மக்கள் மருத்துவர்களே' எல்லோரையும் கவருகிறார்கள். வெற்றிகரமான மருத்துவர்களாவும் ஆகிறார்கள்.

ஒரு மிகச் சிறந்த விஞ்ஞானிக்கு நிறைய விஷயங்கள் தெரிந்திருக்கலாம். ஆனால் அதை ஒரு விஞ்ஞானிகள் மாநாட்டில் எப்படிச் சொன்னால் ஏற்றுக் கொள்வார்கள் என தெரிந்து தன்னுடைய 'நீஸிஸை'க் கொடுக்கும் போதுதான் வெற்றி பெறுகிறார்.

ஒரு பெரிய கம்பெனிக்கு நாளை உங்கள் மகனோ, மகளோ ஜெனரல் மானேஜர் ஆகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். தன்கீழ் வேலைபார்க்கும் பணியாளர்களோடு எப்படிப் பழக வேண்டும் எனத் தெரிந்திருக்க வேண்டும். அவர்கள் குடும்ப விவரங்களைக் கேட்டு 'உங்க குழந்தைக்கு இப்போ உடம்பு தேவலையா' என ஒரு வார்த்தை கேட்டால் உருகிவிடுவார்கள். அவர்களின் சொந்த ஊரைப் பற்றிப் பேசலாம். இன்னும் எத்தனையோ. அவரே வெற்றிகரமான 'பாஸ்' ஆகிறார்.

எனவே தாய்மார்களே - படிப்பு என்பது 'ஃபர்ஸ்ட் ரேங்க்' வாங்குவது மட்டுமில்லை.

இவ்வளவு ஏன், வீட்டில் ஒருவருக்கொருவர் பழகும்போதே எவ்வளவோ நெளிவு சுளிவுடன் பழகினால்தான் காலம் தள்ள முடிகிறது.

மிகக் கூர்மையான படிப்பறிவு மட்டுமே இருந்தால் வாழ்க்கையில் எதிர் பார்த்த வெற்றி கிடைக்காதபோது 'மிகப் பெரிய தோல்வி'யாக அதை எடுத்துக் கொள்கிறார்கள். தீவிரவாதிகளாக, வன்முறையாளர்களாக மாறின பலரின் வாழ்க்கையை ஆராய்ந்தால் மிகச் சிறந்த அறிவாளிகளாக அவர்கள் இருப்பார்கள். சிலர் சிறிய ஏமாற்றத்தைக் கூடத் தாங்க முடியாமல் தற்கொலையே செய்து கொள்கிறார்கள்.

எனவே, உங்கள் குழந்தைகளை-

நல்ல அறிவாளிகளாக வளருங்கள். அதே சமயம் மென்மையான கலைகளைக் கற்றுக் கொடுங்கள். அவர்கள் மனம் சமனப் படும். நிறைய மற்ற விஷயங்களையும் அவர்கள் கவனிப்பதற்கு வழி செய்து கொடுங்கள். வாழ்க்கையை இரு கண்கள் திறந்து பார்க்க துணையாயிருங்கள்.

உங்கள் அன்பு எப்போதும் அவர்களுக்குப் பக்கபலமாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தை நாளை பெரும் வெற்றியாளனாக, வெற்றியாளியாக வருவார்கள்.

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25.
புதுதில்லி-110016

TS McCann/NESTLE/M/1492 TM

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்

**18** வயது சுமதி தன்னைக் கண்ணாடியில் உறுத்துப் பார்த்தாள்-

''ம்?வெகு சுமார்...குளித்து நறுவிசாய் உடுத்தி யிருக்க சுமார். கல்லூரியிலிருந்து களைத்துத் திரும்பிய பின்னோ, தூங்கி எழுந்த கையோடோ பார்க்க, ஏறக் குறைய மோசம் என்னுமளவில்தான் அவள் தோற்றம் இருந்தது! இப்போது ஏன் இந்த ஆராய்ச்சி?''

அடுத்த வீட்டு வத்சலாவிற்கு திருமணம் நிச்சயமா யிருந்தது. 25 வயது வத்சலாவும் இவளைப் போலத் தான் - பெரும்பாலும் யாரும் மறுமுறை திரும்பிப் பார்ப்பதில்லை! அவளுக்குச் சிறப்பான சம்பந்தம் எனப் பேசிக் கொண்டார்கள்.

வத்சலாவின் குரல்...குயில்தான்.

சாரீரம் சுத்தமாயிருப்பினும் வயலினும் கற்றவள், அதனோடு இழைந்து பாடுகையில், கேட்கப் பரவச மாயிருக்கும். சிறு கச்சேரிகள் போக நாலு பாட்டு டியூஷன் கூட அவளுக்கு உண்டு.

அது சரி. அத்தனைப் பெண்களுமா ரதி?

ஏதோ ஒரு மகுடம் அவளை ராணியாக்கிக் காட் டும். நல்ல மாப்பிள்ளை தேடி வருவது ஒருபுறம் இருக்க, பெண் தலை நிமிர்ந்து நிற்க, தெம்பாய்

# இரும் பறவைகள்

சிரிக்க, உற்சாகமாய் வாழ ஒரு கிரீடம் அவசியம்.

குணம், கலை, காசு, வேலை, அழகு, படிப்பு... தனக்கு எது?

சுமதி யோசித்தாள்.

உட்கார்ந்து படிக்கும் பாய் தேய்ந்து நைந்தும் படிப்பு சுமார் ரகத்தில்தான் சேர்த்தி!

கலை காத தூரம்!

கிழிசலை கொடூரமாய் புழு போலத் தோன்றும் விதமாய் தைப்பதோடு தையல் சரி.

குணம் கூட பிடிவாதம், தாழ்வுணர்ச்சி என்று... பெருமைப்படும்படியில்லை. பிரத்தியேக ஆர்வம் எதிலுமில்லை. ஆர்வமில்லாத துறையில் சாதனை எப்படி...? அம்மா ரசம் தாளித்த மணம் வீடு முழுக்கப் பரவியதில், வயிறு குழைய, கத்தினாள்.

''அம்மா சாப்பாடு ஆச்சா?''

''இன்னும் பத்தே நிமிஷம்''

பனிரெண்டாவது நிமிடம், அன்னாசி ரசம், துவையல், வெண்டைக்காய் பொரியல் என ருசித்து சாப்பிடுகையில் நுனி நூல் சிக்கியது!

சமையல் ஒரு கலையில்லையா என்ன?





குருவாக வீட்டிலேயே தாய் இருக்கச் சுலபமாகக் கற்கக் கூடியது; அன்றாடம் பயன்படும், பாராட்டப்படும் கலை. புதுக புதுசாய் கிளறிக் கரைத்து... பத்திரிகைகளுக்குக் குறிப்புகள் அனுப்பலாம்.

'சுமதியின் சுவைமிகு சமையல்' என புத்தகம் கூட வெளியிடலாம்- அடடே, சாதனை கூட சாத்தியம்!

அவளுள் உற்சாகம் கிளம்பியது.

அன்று தன்னுடன் நின்று பாத்திரங்களைக் கழுவி கவிழ்த்த மகளை ஆச்சரியமாய் பார்த்தாள் அம்மா-

''என்னடீ புதுசா?''

''தட்சணைம்மா. குரு தட்சணை''

காய்களை வெட்டுவதிலிருந்து பயிற்சி ஆரம்பமாயிற்று. அடுத்து, தாளிக்க, பொரிக்க என்று வளர்ந்து சாம்பார் வைக்க அவளைத் தயாராக்கியது. இப்போது சுமதிக்குப் பார்த்த மாத்திரத்தில் காய்கறி முற்றலா சொத்தையா என்பது பிடிபட்டது.

''சாம்பார் புது மணமா ஜோராயிருக்குது'' பாராட்டலில், ''அம்மா அடுத்தது இனிப்புச் செய்யலாம்'' என்று குதித்தாள்.

''ரவா லட்டு செய்.''

''சே. எனக்கு மைசூர் பாகுதாம்மாப் பிடிக்கும்.''

காஞ்சனா ஜெயதிலகர்

''பதம் சரியா வரணும்.''

''அதெல்லாம் வரும்''

காசைக் கொட்டி, நெய்யையும் கொட்டிக் கிளறியும் பாகு பதம் வரத்தானில்லை.

உதிர்ந்து பொடியாகவே கிடந்ததை அள்ளி ஒரு டப்பாவில் போட்டு மூடினாள்.

''இது பேரென்ன சுமதி?'' என்று வீட்டார் சிரித்தபடி அள்ளி வாயிலிட்டுக் கொண்டனர்.

சமையல் அப்படியொன்றும் சுலபமில்லை என்பது புரிந்தது. மாமா ஊரிலிருந்து கொண்டு வந்த தேங்காயில் மிட்டாய் செய்தாள். இம்முறை துண்டு போட வந்தாலும், தேங்காய் தனியாய், நொறுநொறுவென சீனி தனியாய், நாக்கில் தட்டுப்பட்டன. மறுமுறை அவற்றைச் சற்றுத் தட்டி, சிறிது பாலும் சேர்க்க,

''ம்... பிரமாதம் சுமி'' என்று சான்றிதழ் வந்தது!

அம்பாசமுத்திரத்து சின்னப்பாட்டியிடம் 'அந்த கால' மணம், ருசி மாறாத தேன்குழலும் அதிரசமும் செய்யக் கற்றுக் கொண்டாள். குல்நாரிடம் சிநேகமாகி, நான் ரொட்டி, ரசகுல்லா, மட்டர் பனீர், என்று கலையை விஸ்தரித்தாள்.

இத்தனைச் சிரமப்பட்டுத் தயாரிப்ப வற்றை அசிரத்தையாகப் பரிமாறுவதா எனத் தோன்ற மேஜையில் அலங்காரமாய் வைத் தாள்.

''நீ கொண்டு வரச்சேயே நாக்கில் எச்சில் ஊறுதக்கா'' என்றான் தம்பி.

சாப்பாட்டு அறையைத் தொடர்ந்து வீடு முழுக்க அவள் பராமரிப்பின் கீழ் வந்தது.

அந்தத் தெருப் பெரியவர்களும்,

'இன்னைக்கு மைசூர் பாகு போடணும் கமலி. ஒரு எட்டு வந்து பார்க்கறியா?' என வேண்டினர்.

'நெய் வேண்டாம். வெண்ணையா வாங்கிடுங்க. உருக்கிச் சூடா கலந்தா சரியா யிருக்கும்' என்றாள்.

தினம் காலை சமையலறையில் இருந்த தால், பால் பாத்திரத்து ஆடையை எலு மிச்சச் சாறுடன் கலந்து, உடல், முகம் எனத் தடவி ஊறவிட்டாள். தலைக்குத் தயிர் தடவி னாள். சனி ஞாயிறில் காரட் சாறு, வெள்ளரி என முகத்தில் அப்பினாள்.

சருமம் பளீரென பொலிய, அவள் தலைமுடி கைக்குள் அடங்காது மின்னியது. விடுவிடுவென வேலை செய்ததில் இடுப்பு சிறுத்து ஒடுங்கியது.

எல்லாவற்றையும் விட அவள் சிரிப் பில், தோள் நிமிர்வில் தெறித்த தன்னம் பிக்கையும், நிறைவும் அவளைப் பேரழகி யாக்கிக் காட்டின.

அன்று டாக்டர் சித்தி வந்திருந்தார் கள். ''கமலி அவ சித்தியைக் கொண்டு பிறந் திருக்கா'' என குடும்பத்தார் சொல்கையில் முன்பு எரிச்சலாயிருக்கும்.

சித்தி அழகில்லை- ஆனால் படிப்பு கொடுத்த களை, கம்பீரம் உண்டு.

சாப்பாடு முடிந்து அனைவரும் ஹாலில் வந்து அமர்ந்தனர். சாப்பாட்டு மேஜையை ஒதுங்க வைத்த கமலி, ஆளுக் கொரு இனிப்பு பீடா சுருட்டி நீட்டினாள். சித்தி, தன் நோயாளி ஒருத்தியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்-

''தற்கொலைக்கு அந்தப் பெண் சொல்ற காரணம் என்னான்றீங்க?''

''ஊர் பிராக பொண்ணுன்ற. பண்ணை யாளைக் காதலிச்சுட்டாளா?''

''ரொம்ப சினிமா பார்க்கறீங்க அத்தான். அவ பார்க்க அழகாயில்லை யாம்''

''அடக் கடவுளே!''

''படிக்க அனுப்பலை. வீட்டு வேலை யும் செய்யறதில்லை. சாப்பிட்டு, தூங்கி தடிச்சிட்டா. முகம் அத்தனை லக்ஷண மில்லை...''

''ஆனா, இது ஒரு காரணமா? பறவை எல்லாம் பறக்குதா என்ன?'' அம்மா சொன் னார்கள்.

''நம்ப அத்தை சொல்ற அதையேத்தான் நானும் அவளுக்குச் சொன்னேன். பென் குவின் பறக்காது போனாலும் அபாரமா நீந்தும். கோழி ஏதோ எம்பி சிறகடிச்சுக்கும். வான்கோழிக்கு அதுவும் முடியாது. மூளையும் மட்டு. ஆனா அது பறவைகளி லேயே பெரிசு. மானாட்டம் ஓடும். ஒண் ணில்லாட்டா இன்னொண்ணு சொன் னேன்''

''புத்தி வந்துதா?''

''வந்தா நல்லது. அவங்க வீட்டாருக் கும் வரணும்.''

முடிச்சிட்டிருந்த முடியை விரித்துக் கோதியபடி கமலி பேசினாள்-

''ம்? முதல்ல அந்த பொண்ணுக்குத் தோணணும் சித்தி. மற்றதெல்லாம் பிறகு.''

வெற்றிலை மென்றதில் அவள் உதடுகள் சிவந்து, முகம் தனி சோபையாயிருந்தது.

''அதும் சரிதான். முன்னே நீ என்னைப் போலன்னு வாங்க. இப்ப நீ அழகு கூடிப் போயிட்ட பெண்ணே''

-சிரித்தார்கள் சித்தி.

''பறவையெல்லாமா பறக்குது? சரி நாம ஓடுவோம்னு ஓடினேன். அப்படியே கொஞ்சம் சிறகடிக்க, பறக்கவும் வந்தி டுச்சு,'' சந்தோஷமாய் கமலி சிரித்தாள். அவள் அழகு சிரிப்பில் மேலும் கூடித் தெரிய, மொத்த குடும்பமும் அவளைப் பெருமையாய் பார்த்தது!

---



பொரியல் மீந்துவிட்டதா? ஸ்லைஸ் பிரெட்டைச் சிறிது நீர் விட்டு ஊற வைத்துக் கறியுடன் சேர்த்துப் பிசைந்து கொண்டு சிறுசிறு உருண்டைகளாகச் செய்து, இதை உப்புமா ரவையில் புரட்டி எடுத்து கட்லெட்டாகத் தட்டி தோசைக் கல்லில் வெண்ணெய் விட்டு டோஸ்ட் செய்து தக்காளி சாஸுடன் சாப்பிட்டால் மிகவும் ருசியாக இருக்கும்.

- சுந்தரி

## உங்கள் லாக்கருக்கு எத்தகைய பாதுகாப்பை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?




★ உங்கள் தேவைக்கேற்ப பல அளவுகளில் லாக்கர்கள். ★ தன்நிகரற்ற சேவை ★ உயர் பாதுகாப்புள்ள பெட்டக அறை. ★ நகரின் மையப் பகுதியில் சிறப்பாக வடிவமைக்கப்பட்ட அலுவலகம். ★ வசதியான வேலை நேரம் - காலை 9.30 மணி முதல் மாலை 6 மணி வரை. ★ அலுவலகக் கட்டிடத்திலேயே கார் நிறுத்த இடவசதி.

இயக்குநர் குழு: திரு. B.L. அஸ்வதநாராயண செட்டி, மேனேஜிங் பார்ட்னர், விவேக் & கம்பனி, டாக்டர் P.C. ரெட்டி, சேர்மன், அப்போலோ மருத்துவமனை. திரு. T.T.வாசு, இயக்குநர், டி.டி.கே. நிறுவனம். டாக்டர் நல்லி குப்புசாமி செட்டி, பார்ட்னர், நல்லீஸ். திரு. B.A. கோதண்டராம செட்டி, பார்ட்னர், விவேக் & கம்பனி. திரு. B.A. சந்திரசேகர செட்டி, பார்ட்னர், விவேக் & கம்பனி. திரு. B.A. ஸ்ரீநிவாசா, பார்ட்னர், விவேக் & கம்பனி.

மேற்கொண்டு விவரமறிய, வருகை தருக:




129, ராயப்பேட்டை நெடுஞ்சாலை, மயிலாப்பூர், சென்னை 600 004. தொ.பே. 845983.

Promoted by **VIVEK & CO**

ஜாலியாக சுற்றுலா போவது தற்போது மிக அவசியமான விஷயங்களில் ஒன்றாகி விட்டது. சென்னையில் பல நிறுவனங்கள் வெளிநாட்டு டிக்கட்டுகள் வாங்கித் தரும் வேலையுடன், சுற்றுலாவும் அழைத்துச் செல்கின்றனர். தியாகராயநகர், காசி ஆர்கேடில் உள்ள ''மலர் டிராவல்ஸ்'' நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டர் திருமதி விஜி வாசுதேவன் அவர்களில் ஒருவர்.



# சிங்கப்பூர் செல்வோமா?

''என் தந்தை திரு.கே.ஆர்.கிருஷ்ணசாமி, 1948ஆம் ஆண்டு டிரான்ஸ் வேர்ல்ட் ஏர் லைன்ஸ் என்ற வெளிநாடு சம்பந்தப்பட்ட முதல் டிராவல் நிறுவனத்தைத் தொடங்கியவர். நான் ஆங்கில இலக்கியம் படித்தாலும் ரத்தத்தில் என் தந்தையின் தொழில் ஊறிவிட்டதால் அதன் பக்கமே ஈர்ப்பு இருந்தது.

வெளிநாட்டு டூர் பொதுவாக வயதானவர்களை விட, இளைய தலைமுறையினரே அதிகம் செல்கின்றனர். அங்குள்ள பூக்கள் கண்காட்சி, பார்க்குகள், மாலை நேர வாழ்க்கை இவற்றை மிகவும் ரசிக்கின்றனர். ஷாப்பிங் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

மே 1990ல் இருபத்தி இரண்டு பேர் அடங்கிய குழு ஒன்றை அழைத்துக் கொண்டு முதன்முறையாகச் சீனாவுக்குப் போனது மறக்க முடியாதது. டெரகோட்டா வாரியர்ஸ் என்ற மியூசியத்தில் இருந்த மண் பொம்மை வேலைப்பாடுகள் ராணுவ அணிவகுப்பினை தத்ரூபமாகக் காட்டியது. பல ஆயிரக்கணக்கான வருடங்கள் ஆகியும் பிரமாதமாக இருந்தன. 'சியான்' எனும் இடத்தில் இவற்றைக் கண்டோம். நதியில் படகில் போன அனுபவம் அற்புதமானது. கெய்லின் எனும் இடத்தில் மலைப் பாறைக்கு (உயரமும், குட்டையுமான) இடையே படகுப் பயணம். 'பீகிங்' என்ற இடத்தில் இருந்த கொள்ளை அழகான அரண்மனையை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை. சர்க்கஸும் அப்படித்தான். மிகமிகப் பிரமாதமாக, நேர்த்தியாக நெஞ்சம் ஆஹா என்று விம்மித் தணியும் வண்ணம் இருந்தது. 'கிரேட் வால்' பார்க்கக் கூடிய மிகச் சிறந்த இடம்.

''சிங்கப்பூர் மலேசியாவுக்குச் சுற்றுலா பயணம் செய்ய முறைப்படி எப்படி அணுக வேண்டும். உதவியில் உங்கள் பங்கு என்ன?'' என்கிறோம்.

''முதலில் பாஸ்போர்ட் தேவை. இல்லாதவர்களுக்கு நாங்கள் ஏற்பாடு செய்து தருகிறோம். டூர் போவதற்கு என்று விண்ணப்பித்தால் நாற்பது நாட்களுக்குள் கிடைக்கும். குழுவினர் குறைந்தது பதினைந்து பேராவது இருக்க வேண்டும். டிக்கட் போக வர சிங்கப்பூருக்கு 13 ஆயிரம். மலேஷியாவுக்கு சாதாரணமாக விசா கிடைப்பதில்லை. டூர் போவ தால் அனுமதி கிடைக்கும். ஹாங்காங், பேங்காக் போக வேண்டுமானால் மேலும் 5 ஆயிரம் ரூபாய் டிக்கெட் செலவு ஆகும். பத்து நாட்கள் சென்று வரலாம். 250 டாலர் மதிப்புக்கு இந்தியப் பணம் சரியாகக் கிடைக்கும். பயன்படுத்திக் கொள்ளலாம். ஒரே இடத்தில் சிலர் சேர்ந்து தங்கினால் செலவு குறையும். தங்குமிடம், டிராவல் போர்ட், இவற்றுக்குத் தனியாகப் பணம் கட்ட வேண்டும். பதினைந்து டிக்கட்டுக்கு ஒரு டிக்கட் இலவசமாகக் கிடைக்கும். அதில் குரூப் லீடர் போகலாம். கைடு தேவையென் றால் அந்த டிக்கட்டில் அனுப்பு வோம்.

டிராவல் ஏஜென்ஸியை நம்பித்தான் செல்ல வேண்டும் என்பதால் அவர்களை நம்பிக்கையான, நேர்மை யானவர்களாக தேர்ந்தெடுப்பது மிக அவசியம். வெளிநாடு செல்லும் ஆசையில் ஏமாறி விடக் கூடாது. வெளி நாட் டினரின் நல்ல பழக்கங்களை, தூய்மையை, காலந்தவறா மையைக் கற்றுக் கொள்ள வேண்டும். இந்தியர்கள் என்றால் மரியாதை, மதிப்பு வைத்துள் ளனர். புடைவையைப் பார்த்த வுடன் மரியாதையாக இருப் பதுடன் அதிக தூரமில்லாத இடங்களுக்கும், இந்திய டிரைவர்கள் நம்மிடம் பணம் கூட வாங்கிக் கொள்வதில்லை. தெரிந்தவர்கள், உறவினர்கள் சேர்ந்து போவது பல பிரச்சனைகளைக் குறைக்கும். பாதுகாப்பாக, குதூகலமாக இருக்கும். தொலைபேசிக் கட்டணம் தனிப்பட்ட ஷாப்பிங் பில்களை ஏஜென்சி தலையில் சுமத்தாமல் தாமே பணம் கட்டி விவேகமாக நடந்து கொள்ள வேண்டும். மொழிப் பிரச்னையும் இருக் காது. கைடாக வருபவர்கள் இடங்களை, மொழிகளை அறிந்தவராக இருப்பார்'' என்கி றார் விஜிவாசு.

– ஆதித்யா

## வாரியார் வாக்கு



பார்த்துக் கெட்டது பிள்ளை.
- பிள்ளைகளைக் கண்டித்து வளர்க்க வேண்டும்.

இட்டுக் கெட்டது காது.
- சதா காதில் குச்சி போட்டுக் குடையக் கூடாது.

இடாது கெட்டது கண்.
- கண்ணுக்கு மைவிட்டால் குளிர்ச்சியாக இருக்கும்.

கேட்டுக் கெட்டது குடும்பம்.
- பிறர் சொல்லும் கோளுக்குச் செவிசாய்த்தால் குடும்பம் அழிந்துவிடும்.

கேளாது கெட்டது கடன்.
- கடன் கொடுத்தால் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும், அடிக்கடி.

உண்டு கெட்டது வயிறு.
- அளவோடு உண்ணாவிட்டால் வயிறு கெடும்.

உண்ணாது கெட்டது உறவு.
- உறவினர் வீடுகளுக்குத் தனக்கு எத்தனை பெருமையிருந்தாலும், உற்றார் ஏழ்மையாக இருப்பினும் சில சமயங்களில் சென்று உண்ண வேண்டும்.

தொகுப்பு : எஸ். விஜய சீனிவாசன்




# ஏதாவது ஒரு விஷயத்திலாவது நீங்கள் மாஸ்டரா?

கபில்தேவ். இன்று இந்தப் பெயர் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும், ஏன் கிரிக்கெட்டே தெரியாதவர்களுக்கும் கூடத் தெரிந்த பெயராகி விட்டது. உலக சாதனை நிகழ்த்திய இந்திய வீரர் கபில்தேவ். கிட்டத்தட்ட பதினாறு ஆண்டு உழைப்பின் வெற்றி அல்லவா இது!

உலகப் பத்திரிகைகள் அனைத்திலும் செய்தி. பல இடங்களில் பாராட்டு விழா, கோடிக்கணக்கில் பணம். பரிசளிப்புகள். இன்னும் எத்தனையோ. இந்தப் புகழுக்கு என்ன காரணம்? 432 விக்கெட்டுகள் எடுத்து ரிச்சர்டு ஹாட்லி சாதனையை முறியடித்து புதிய சாதனை படைத்ததுதான்.

ஏன் வேறு எவராலும் செய்ய இயலவில்லை? கபிலால் முடிந்திருக்கிறது. திறமை. ஆமாம் திறமை இருந்தால் முடியும்தான். ஆனால் திறமை மட்டும் இருந்த பலரால் சாதனை நிகழ்த்த இயலவில்லையே! ஆமாம். அதுவும் உண்மைதான். அப்படியென்றால் வேறு என்ன விஷயம் கபில்தேவை இத்தனை பெரிய சாதனையாளனாக்கியிருக்கிறது?

அவர் தொலைக்காட்சிக்கு அளித்த பேட்டியைக் கேட்டவர்களுக்குத் தெரிந்திருக்கும். தனது ஆரம்பகால கிரிக்கெட் நாட்களை நினைவு கூர்ந்தார். ஹரியானா மாநிலத்தில் ஒரு சாதாரண வசதியுடைய குடும்பத்தில் பிறந்தவர்; இந்திய அணியில் விளையாடத் துவங்கிய பொழுது கிடைத்த சின்னத் தொல்லைகளும், பெரிய தொல்லைகளும் அவரைப் பாதிக்க விடாமல் பார்த்துக் கொண்டார். அவர் இலட்சியமெல்லாம், சாதனை நிகழ்த்துவதிலேயே இருந்திருக்கிறது.

அவருடைய தனித்தன்மை இதுவெல்லாம் இல்லை. அதற்குப் பிறகு சின்னச் சின்ன சச்சரவுகள் காரணமாக தலைவர் பதவியை இழந்தார். ஆயினும் தொடர்ந்து விளையாடினார். ஒரு டெஸ்ட் பந்தயத்தில் விளையாடவே தேர்வு செய்யப் படவில்லை. என்ன அநியாயம்?

இங்குதான் அவர் வெற்றியின் இரகசியம், தனித்தன்மை இருக்கிறது எனலாம். ஆத்திரப்படவில்லை. அவசரப்படவில்லை. சின்னத் தொந்திரவுகள், பெரிய சிரமங்களைப் பொறுத்துக் கொண்டார்.




அன்றும், அதற்கு முன்பும், ரோஷம், பழிவாங்கல் என்றெல்லாம் தன் கவனத்தை சிதற விட்டிருந்தாரானால் - அவரை இன்று 'living legend' என்று பாரதப் பிரதமர் பாராட்டும் சந்தர்ப்பம் வந்திருக்குமா?

கபில் போல் பல சாதனையாளர்களின் வெற்றிக்கு இந்த 'ஒருமுகப்படுத்தப்பட்ட முயற்சி' (CONCENTRATED EFFORTS) காரணமாக இருந்ததை நாம் தெரிந்து கொள்ளலாம்.

நமது 'வில்லுக்கு ஒரு விஜயன்' என்று சொல்லப்படும் அர்ஜுனனையே எடுத்துக் கொள்ளலாம். மேலே விதானத்தில் ஒரு மீன் சுற்றுமாம். அதை, அதற்கு நேர்கீழே உள்ள தண்ணீரைப் பார்த்து குறி வைத்து அம்பால் அடிக்க வேண்டுமாம். அதைக் குறிதவறாது அடித்தவன் அர்ஜுனன். வில் வித்தையில் மிகப் பெரிய சாதனையாளன். அவன் எப்படி அப்படி ஒரு பெரிய சாதனையாளன் ஆவான்?

அவனுடைய இளமைக்கால நிகழ்வு ஒன்று. அவனுடைய குரு துரோணாச்சாரியார் அர்ஜுனன் மற்றும் ஏனைய மாணவர்களைப் பார்த்து மரத்தின் மீதிருக்கும் ஒரு பறவையை அம்பால் அடித்து வீழ்த்தச் சொல்லுகிறார். மாணவர்கள் வரிசையாக வருகிறார்கள்.

அர்ஜுனன் அந்தப் பறவையைப் பார்த்துக் குறி வைத்து அம்பை எய்யத் தயாராக நிற்கிறான். குரு கேட்கிறார். பறவை மரத்தின் உச்சியில் இருக்கிறது.

''அர்ஜுனா மரம் தெரிகிறதல்லவா?...''

''இல்லையே...''

''மரத்தின் மேல் கிளை தெரிகிறதல்லவா?...''

''இல்லையே...''

''அதன் மேல் இலைகள்...?''

''ம்ஹூம்...''

''அந்தப் பறவை...''

''ஓ! தெரிகிறதே...

அந்த மரம் இருப்பது நிஜம். அந்தக் கிளைகள், இலைகள் யாவும் நிச்சயமாய் இருந்தன. மற்ற மாணவர்களுக்கும் குருவிற்கும் தெரிகிறது. அர்ஜுனனுக்குத் தெரியவில்லை. அவனுக்குப் பறவை மட்டுமே தெரிந்திருக்கிறது.

ஏன்? அவன் கவனம் பறவையின் மேல். மற்றவை மறந்து அதை மட்டுமே பார்த்ததால்தானே பின்னாளில் 'வில்லுக்கு ஒரு விஜயன்' என்றானான் அர்ஜுனன்.

'SINGLE VISION' என்பார்களே அது போல கொண்டதிலேயே கவனம். மற்ற எதுவும் பொருட்டல்ல.. ஒரு சில மாணவர்கள் இருக்கிறார்கள். வீட்டில் ஏகப்பட்ட சிரமங்கள், பிரச்சனைகள் இருக்கும். ஆனால் அவர்கள் கவனம் படிப்பில் மட்டுமே.



நடேசன் என்று ஒரு பெரியவர். அவருக்கு இரண்டு மகன்கள். சாதாரணக் குடும்பம்தான். அவரிடம் பேசிக் கொண்டிருந்த பொழுது மிகப் பெரிய ஆச்சரியம் ஏற்பட்டது.

முதல் மகனுக்கு வேலை கிடைத்து விட்டதாம். பம்பாயில் சைட் இன்ஜினியர். என்ன சம்பளம்? ஆறாயிரத்து என்னூறாம்.

அடுத்தவன் மருத்துவம் படிக்கிறான். கடைசி ஆண்டு என்றார். என்னால் நம்ப முடியவில்லை. பெரிய வசதியான குடும்பம் இல்லை. வீட்டில் அதிகம் படித்தவர்கள் இல்லை. இருந்தாலும்... அவர்கள் படித்த பள்ளியும் பெரிய 'கான்வென்ட்' இல்லை. சிறு பிராயத்தில் வீடு வந்ததும் படிக்க ஆரம்பித்து விடுவார்களாம். அனாவசிய வம்பளப்பு, பேச்சு, சுற்றுதல், சினிமா கிடையாதாம். பள்ளியில் முழுக் கவனமாம். அண்ணன் தம்பிக்குச் சொல்லிக் கொடுப்பானாம். ஆசிரியர்கள் வீடு தேடிப் போய் படிப்பார்களாம், லைப்ரரி தேடிப் போவார்களாம்.

ஒரே நோக்கமாய் இருந்ததால்தானே இன்று இத்துனை உயர் பதவிகள், மதிப்புகள். சின்னச் சின்ன விஷயங்களால் ஈர்க்கப்பட்டு, திசைதிருப்பப்பட்டு இலக்கை தவற விடுபவர்கள் சாதிக்க இயலாதுதானே!

அனாவசியமான EGO, நான் என்ற எண்ணம், வந்த சண்டையை விடுவதில்லை என்ற போர்க்குணம், விவேகமற்ற செயல்கள், பலவற்றிற்கும் ஆசை. போலி மரியாதைகளுக்கு ஆவல், இன்னும் எண்ணற்ற காரணங்களினால் கவனம் தவறிவிடுகிறது அல்லவா?

எத்தனையோ நபர்களின் மேலதிகாரிகள் கத்துகிறார்கள், கோபிக்கிறார்கள், தொந்திரவு கொடுக்கிறார்கள். மாமியார் மருமகளைக் கொடுமை செய்கிறார். பொறுத்துப் போகிறார்கள். ஏன்? அவர்கள் கவனம் வேறெதன் மேலோ அல்லவா?

'பேசாத வார்த்தைகளுக்கு நாம் எஜமான்; பேசியவார்த்தைகள் நமக்கு எஜமான்,' என்பதுபோல அவர்கள்தான் தங்களுடைய குறிக்கோளை அடைவதற்காக எத்தனை கவனமாக இருக்க வேண்டியுள்ளது.

நிறுவனங்களிலே பணிபுரிகிறவர்களில், இளைஞர்களை கவனித்தால் தெரியும். பணி செய்து கொண்டே ஏதாவது ஒரு கோர்ஸ் படித்துக் கொண்டு இருப்பார்கள். AMIE யோ, CAIIB க்கோ ஏதோ ஒன்று வேலைக்கு வந்தாகிவிட்டது. சம்பளம் வருகிறது. சாப்பிடலாம், தூங்கலாம், ஊர் சுற்றலாம். ஆனால் பெற்றோர் தூண்டுதல் கூட இன்றி தானே சிலர் விடாது படிப்பது வேலையில் முன்னேற்றம் என்ற தங்களது 'CAREER DEVELOPMENT' என்ற இலக்கினை நோக்கித்தானே!

இசை, நாட்டியம், ஓவியம், சமையல், தையல், படிப்பு, எழுதுதல், வியாபாரம், சரித்திரம், மதம், ஜோதிடம்..வாகனங்கள் ரிப்பேர், ஹாபி எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். நமக்குப் பிடித்த ஏதாவது ஒன்றிலாவது நாம் EXPERT ஆக மிகத் திறமையானவராக வரவேண்டாமா?

நமது தமிழ் அறிஞர்கள் கூட 'அகல உழுவதை விட ஆழ உழு' என்பது இதைத் தானே.

ஏதாவது ஒரு துறையிலாவது முழுக் கவனம் செலுத்தி அந்த EXCELLENT PERFORMENCE ஐ அடைவோமே!

★ நமது பலம் எது பலவீனம் எது என்பதை அறிவோம்.

★ நமது நோக்கம் எது என்பதில் தெளிவாக இருப்போம்.

★ அந்த நோக்கம் அடையப்பட வேண்டியது என்பதை மீண்டும் மீண்டும் மனதில் நிறுத்தி அதை INTERNALISE செய்வோம்.

★ அதை அடைவதற்காக.. இன்றைய தொந்திரவுகளைப் பொறுத்துக் கொள்வோம். அனாவசியமாக கவனம் சிதற விடாதிருப்போம்.

★ இலட்சியம் எதுவானாலும் கல்வியோ, விளையாட்டோ, கலைத் துறையோ, எழுத்தோ, பிற கலைகளோ அது எதுவானாலும் அதை நிச்சயம் அடைவோம்.

**– எஸ்.எம்.வள்ளியப்பன்**

---



காலையில் இட்லிக்குச் செய்த தேங்காய் சட்னியை மாலையில் 'ரவா தோசை' டிபனாக மாற்றி விடலாம். காலையில் மீந்த சட்னியுடன் சரி அளவு அரிசி மாவு, சிறிது உப்பு, கொத்து மல்லி இலை நறுக்கிப் போட்டு ரவா தோசைக்குக் கலப்பது போல் கலந்து கொண்டு நெய் விட்டு வார்க்க வேண்டும்.

– சுந்தரி

தேவிபாலா A/c
அன்னைஅபிராமி A/c
4 காட்சிகள்
சந்திரன் A/c
3 காட்சிகள்
அகஸ்தியா 70mm
பகல் 11.30 மணி



கமல்ஹாசன்
வழங்கும்
ராஜ்கமலின்

# மகளிர் மட்டும்

சிங்கீதம்சீனிவாசராவ்
இளையராஜா

Elegant

# 2,000 மைல்கள் ஸ்கூட்டரில் போனோம்...

**1959** இல் ஒருநாள் என் கணவர் என்னிடம், ''எங்கள் லாம்ப்ரட்டா க்ளப்பிலிருந்து நாங்கள் இலங்கை போகிறோம்'' என்றார்.

''அப்படியா நானும் வருகிறேன்,'' என்றேன்.

''எப்படிப் போகிறோம் என்று கேட்கலியே? ஸ்கூட்டரில் போகிறோம். நீ வருவதானால் கூட்டிட்டுப் போக நான் தயார்,'' என்றார்.

''வீணாக ஆசையைக் கிளப்பாதீர்கள். நம் குழந்தைகள் ஒருநாள் கூட நம்மை விட்டுப் பிரிந்தது கிடையாது. யாரிடம் விட்டுச் செல்வது?'' என்று சும்மா இருந்துவிட்டேன்.

மறுநாள், பேச்சுவாக்கில் என் ஓரகத்திவிடம் இதுபற்றிச் சொன்னேன். ''நீ போய் வா. குழந்தைகளை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றார்.

எனக்கு ஒரே குஷி. அவர்கள் பக்கத்து வீட்டில் இருந்ததால் குழந்தைகள் பெரியப்பா, பெரியம்மாவிடம் ரொம்ப ஆசையாக இருப்பார்கள். குழந்தைகளைச் சம்மதிக்க வைப்பதுதான் கொஞ்சம் சிரமமாக இருந்தது. 8, 6, 4 வயதில் மூன்றும் ஆண் பிள்ளைகள். ஆனாலும் ரொம்ப சமர்த்து. நிறைய புது ட்ரஸ், புக்ஸ், விளையாட்டுச் சாமான்களை வாங்கிக் கொடுத்து ஒரு வாரம் பெரியம்மா வீட்டிலும், ஒரு வாரம் என் தாய் வீட்டிலும் இருக்க ஒப்புக் கொண்டார்கள். ஆனால் என் தாய் முதலில் ஒப்புக் கொள்ளவில்லை.

''ஸ்கூட்டரில் இலங்கை போகிறேன்னு சொல்றியே, நடக்கிற காரியமா, பைத்தியம் தான் பிடித்திருக்கிறது'' என்றாள். ''50 பேர் செல்கிறார்கள். 10 பெண்கள்'' என்றெல்லாம் சொல்லி ஒருவாறு சமாளித்தேன்.

மொத்தம் 15 ஸ்கூட்டர், 29 பயணிகள். இதில் நானும் என் உறவினர் பெண் சீதா கிருஷ்ணன் என்பவருமாக, இரண்டே பெண்கள்தான். ஒவ்வொரு வண்டியிலும் இருவருக்கு



* செல்லம்



* கண்டி புத்தர் கோயில்



* கொலம்போ மிருகக் காட்சி சாலை

✱ இலங்கையில்...



வேண்டிய ட்ரஸ், படுக்கை எல்லாம் வைத்துக் கட்ட வேண்டும். 15 நாட்கள் ஸ்கூட்டரிலேயே பயணம் என்பதால் ஸல்வார் கம்மீஸ் தைத்துக் கொண்டோம். மற்ற நேரங்களில் புடைவைதான்.

பிரயாண தினம் வந்தது. என் தோழி சீதாவிற்குத் திருச்சியில் ஒரு கல்யாணத்திற்குப் போக வேண்டி இருந்ததால் அங்கு எங்களுடன் சேர்ந்து கொள்வதாகச் சொல்லி விட்டார். இங்கிருந்து கிளம்பும் போது நான் ஒரே பெண் பயணி. எங்களை வழியனுப்ப எல்லோருடைய உறவினர்களும் நண்பர்களுமாக ஒரே கூட்டம். வந்திருந்த பெண்களுக்கு நான் ஒரு சாதாரண இல்லத்தரசிதான், 3 குழந்தைகளை விட்டுவிட்டு முதன் முறையாகச் செல்கிறேன் என்ற போது நம்பவே முடியவில்லை.

சரியாக 3 மணிக்கு எல்லோரும் ஆரவாரத்துடன் வழியனுப்ப கிளம்பினோம். அன்று இரவு விழுப்புரத்தில் தங்கினோம். அடுத்த நாள் திருச்சியில் சீதாவும், எங்களுடன் சேர்ந்து கொண்டார். இரவு ராமனாதபுரம் போய்ச் சேர்ந்தோம். ட்ராவலர்ஸ் பங்களாவில் தங்கி மறுநாள் மண்டபம் புறப்பட்டோம். அங்கு ஸ்கூட்டர் எல்லாம் தனுஷ்கோடி செல்ல ரயில் வாகன்களில் ஏற்றப்பட்டன. அன்று இலங்கை செல்ல ஏகக் கூட்டம்.

தனுஷ்கோடியில் இறங்கியதும் ஆண்கள் எல்லாம் ஸ்கூட்டர்களை இறக்குவதில் ஈடுபட்டிருந்தார்கள். நாங்கள் இருவரும்

✱ குகைச் சிற்பங்கள்...



கொஞ்சம் தண்ணீர் கிடைத்தால் முகம் கழுவலாம் என்று கூற ரயில் வண்டியில் தான் தண்ணீர் கிடைக்கும் என்று தெரிய வந்தது. இருவரும் பேசிக் கொண்டே வண்டியிலேறி முகம் கழுவி தலைவார ஆரம்பித்தோம். ரயில் கிளம்பியதைக் கவனிக்கவில்லை. எங்களைக் காணாததால் தண்ணீர் பற்றிக் கூறிய நண்பர் நாங்கள் ரயிலில்தான் இருக்க வேண்டுமென 'லேடீஸ், இறங்குங்கள். ரயில் போகிறது, போகிறது!' என்று கத்திக் கொண்டே ஓடிவந்தார்.

சீப்புக் கண்ணாடி எல்லாவற்றையும் வாரிக் கொண்டு ஓடும் ரயிலிலிருந்து குதித்து அந்த நண்பருக்கு நன்றி கூறினோம். சீதாவின் கணவர்தான் எங்கள் குழுவிற்குத் தலைவர். அவருக்கு ரொம்பக் கோபம்.



ஆனால் இரண்டே நிமிடங்களில் சிரித்துக் கொண்டே எங்களுக்காகக் காப்பி வரவழைத்தார்.

கஸ்டம்ஸ் சோதனை முடிவதற்கு வெகு நேரமாயிற்று. ஸ்கூட்டர்களைக் கூடத் திறந்து பார்த்தார்கள். கப்பலில் அன்று நல்ல கூட்டம். பலருடன் எங்களுக்குப் பழக்கம் ஏற்பட்டது. பலரால் எங்கள் பயணத்தை நம்பவே முடியவில்லை. இரவு 9 மணிக்குத் தலைமன்னார் போய்ச் சேர்ந்தோம். ஆனால் நாங்கள் கஸ்டம்ஸ் பரிசோதனை முடிந்து அன்று தங்க ஏற்பாடாகியிருந்த சர்க்யூட் ஹவுஸிற்குப் போய்ச் சேர்ந்த போது இரவு ஒரு மணி. நமது தூதரகத்தைச் சேர்ந்த கருணாகர மேனன் எங்களுக்கு டீ, பழம், ப்ரெட் எல்லாம் ஏற்பாடு செய்திருந்தார்.

மறுநாள் காலை கொழும்பு செல்லக் கிளம்பினோம். வழியில் காலை உணவு உண்டு, கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கிவிட்டு அனுராதபுரத்திற்குக் கிளம்பினோம். பகல் ஒரு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். ஒரேயடியாக 29 பேருக்குச் சாப்பாடு கிடைப்பது ரொம்பச் சிரமமாக இருந்தது. அதனால் அன்றைய சாப்பாடு வெறும் 'பிரெட்'டும் கறுப்புக் காப்பியும் தான். அங்கிருந்து கொழும்புக்குப் பயணமானோம்.

எங்கள் பயணத்தைப் பற்றி அங்கு செய்தித்தாளில் எல்லாம் செய்தி வெளியாகியிருந்தபடியால் வழிநெடுக இலங்கை மக்கள் எங்களை ஆரவாரத்துடன் வரவேற்றனர். இந்தப் பயணத்தில் நாங்கள் அன்றாடம் பயணம் செய்யும் இடங்களைப் பற்றி இலங்கைப் பத்திரிகைகள் பிரசுரித்து வந்ததால் இலங்கையிலிருந்து திரும்பும்வரை தினமும் எங்களுக்கு இந்த வரவேற்பு கிடைத்தது மிக மகிழ்ச்சியாக இருந்தது. சாலையோரத்தில் நின்று கொண்டு, 'தாய் நாட்டிலிருந்து வருகிறவர்களே வருக வருக!' என்று கோஷமிடுவார்கள். நாங்களும் கையசைத்து நன்றி தெரிவிப்போம். வழிநெடுக வண்டி எங்கு நின்றாலும் ஒரு கும்பல் சூழ்ந்து கொள்ளும். ஆரவாரம், பாராட்டு, ஆட்டோகிராப் - நாங்கள் வி. ஐ. பிக்களாக ஆகி விட்டோம்.




இரண்டு நாட்களாகச் சரியாக சாப்பாடு, தூக்கம் இல்லாததால் எல்லோரும் களைத்துப் போயிருந்தோம். பின்னால் உட்கார்ந்திருந்தவர்கள் வண்டி ஓட்டுபவரின் முதுகில் சாய்ந்து தூங்குவதைப் பார்க்க மிகவும் வேடிக்கையாக இருந்தது. எங்கள் தலைவர் கிருஷ்ணன் முன்னும் பின்னுமாகப் போய்த் தூங்குபவர்களை எழுப்பிக் கொண்டிருந்தார். நான் என் கணவரை, 'உங்களுக்குத் தூக்கம் வருகிறதா?' என்று கேட்பேன். சிறிது நேரத்தில் 'தூங்காதே! விழுந்து விடுவாய்', என்று அவர் என்னைத் தட்டி எழுப்பிக் கொண்டிருப்பார். சில சமயம் இரண்டு வண்டிகள் பக்கம் பக்கமாகப் போய், பேசிக் கொண்டே போவோம்.

பதினைந்து வண்டிகளுக்கும் வரிசையாக எண் குத்தியிருந்தோம். அந்த வரிசையில்தான் கிளம்ப வேண்டும், போக வேண்டும். பெண்கள் நாங்களிருந்த வண்டிகள் நடுவில்தான் வரவேண்டும். இரவில் வரிசையாக பதினைந்து வண்டிகளின் விளக்குகள் போவது மிகவும் அழகாயிருக்கும். கிடைத்த இடத்தில் உ. சாப்பிட்டுக் கொண்டு இரவு ஒரு மணிக்குக் கொழும்பு போய்ச் சேர்ந்தோம்.

அங்கு 'க்ரீன் லாண்ட்' ஹோட்டலில் நுழைந்ததும் சென்னைக்கே வந்துவிட்ட மாதிரி இருந்தது. நல்ல காப்பியும், சாப்பாடும் கிடைத்தது. இரண்டு நாள் கொழும்பில் தங்கி, உயிரியல் பூங்கா, கடற்கரை எல்லாம் பார்த்தோம். ரேடியோ சிலோன் புண்ணியமூர்த்தி எங்களைப் பேட்டி கண்டார். கடைத் தெருவில் குழந்தைகளுக்காகப் பொம்மைகள் வாங்கினோம்.

கொழும்பிலிருந்து கதிர்காமத்திற்குப் பயணமானோம். இலங்கை நண்பர்கள் இருட்டிய பிறகு பயணம் செய்யக் கூடாது என எச்சரித்திருந்தார்கள். அங்கு போய்ச் சேரும்போது இரவு 7.30 மணியாகி விட்டது. அங்கு முருகப் பெருமானைத் தரிசித்து விட்டு இரவு ராமகிருஷ்ண மடத்தில் தங்கினோம். மறுநாள் கண்டி செல்லப் பயணமானோம்.

கண்டி போகும் வழியில் டயலுமா நீர் வீழ்ச்சியருகில் சிறிது இளைப்பாறினோம். நுவாரா எலியா வழியாகக் கண்டி செல்லப் போவதாகச் சொன்னதும், இலங்கை நண்பர்கள் அம்மலைச் சரிவில் இவ்வளவு சாமான்கள் வைத்து இருவர் உட்கார்ந்து கொண்டு வண்டியில் செல்வது மிகவும் ஆபத்தானது என எச்சரித்தும், தைரியமாகப் புறப்பட்டோம்.

மாலை 4 மணிக்கு நுவாரா எலியா போனோம். நம் ஊட்டி மாதிரி அழகான மலைப்பிரதேசம். கடலிலிருந்து 7,000 அடி உயரத்திலிருக்கிறது. மலை மேல் ஏறும் பொழுது முன்னால் போகும் வண்டிகளைப் பார்த்தால் தலைசுற்றும், கொண்டை ஊசி வளைவுகள் வேறு. கண்டிக்குத் திரும்பும் போது கீழே இறங்கும் பாதையாதலால் மிகவும் ஜாக்கிரதையாகச் செல்ல வேண்டியிருந்தது. மழையும் இருட்டும் சேர்ந்து வேகமாகச் செல்ல முடியவில்லை. ஓரிடத்தில் எங்கள் வண்டி சரியாக 'பிரேக்' பிடிக்கவில்லை. ஒரு பக்கம் நல்ல பள்ளம். பாதுகாப்புச் சுவர்களும் இல்லை. நல்ல வேளையாகக் கற்களும் செடிகளும் தடுக்கி இருவரும் வண்டியோடு விழுந்தோம். எல்லோரும் ஓடி வந்தனர். சிறிது இளைப்பாறி

விட்டு வண்டியைச் சரிபார்த்துக் கிளம்பி, 9.30 மணிக்கு (இரவு) கண்டி போய்ச் சேர்ந்தோம்.

இந்தியன் ஹைகமிஷனைச் சேர்ந்த மேனன் வீட்டில் எங்களுக்குப் பெரிய விருந்து காத்திருந்தது. அந்த மலையாள சாப்பாட்டை எல்லாரும் ஒரு பிடி பிடித்தோம். மறுநாள் காலை புத்த விஹாரம், ஏரி, மியூசியம், பெரடேனியா கார்டன்ஸ் எல்லாம் பார்த்து மாலை 5 மணிக்குப் பெலன்னருவ செல்லக் கிளம்பினோம்.

மழை பெய்து கொண்டிருந்தது. இரவில் அவ்வழியாகச் செல்வது அபாயம் என்பதால் 'தம்புல்லா'வில் தங்க முடிவு செய்தோம். அங்கு ஒரு முஸ்லிம் பெண் எங்களுக்கு மிகவும் உதவியாக இருந்தாள். (அவள் அப்புறம் சென்னை வந்து கல்லூரியில் படிக்கும்பொழுது நான் அவளுக்கு 'லோகல் கார்டியன்' ஆக இருந்தேன்.) அங்கு ஒரு பள்ளிக்கூடத்தில் இரவு தங்கினோம்.

மறுநாள் அங்குள்ள பாறைக் கோயிலை பார்க்கச் சென்றோம். 5 குகைகளுக்குள் 5 கோயில்கள் இருந்தன. பாறைகளில் ஏறிச் செல்ல வேண்டும். 47 அடி நீளத்தில் ஒரே பாறையில் செதுக்கிய படுத்த நிலையிலுள்ள புத்தர் சிலை இருந்தது. எல்லா குகையிலும் சிற்பங்களும் சிலைகளும் அழகாக இருந்தன.

அங்கிருந்து ஸிகிரியா சென்றோம். இங்கு மிக உயரமான பாறையின் உச்சியில் ஓர் அரண்மனை இருக்கிறது. வண்டிகளை கீழே நிறுத்திவிட்டு படிக்கட்டுகளில் ஏற ஆரம்பித்தோம். முடிவே கிடையாதா என்பது போல் தோன்றிய படிக்கட்டுகளைப் பார்த்துச் சில பேர் நின்று விட்டார்கள். நாங்கள் விடவில்லை. இனிமேல் முடியாது என்று நினைத்தபோது மேலே இருந்தவர்கள் ''அஜந்தா ஓவியங்கள் போல் இங்கும் இருக்கிறது. பேசிக் கொண்டே வாருங்கள். களைப்புத் தெரியாது'' என்றனர். அந்த ஓவியங்கள் சரிவான பாறைச் சுவர்களில் வரையப்பட்டிருந்தன. இவை 'ஸிகிரியா ப்ரெஸ்கோஸ்' என்று அழைக்கப்படுகின்றன. மிக அழகாக இருந்தன.

அங்கிருந்து அனுராதபுரத்திற்குப் பயணமானோம். வழியில் சாலையோரமாக ஒரு யானை நின்று கொண்டிருந்தது. தனியாக ஒரு யானையைப் பார்த்தால் ஆபத்து எனச் சொல்லியிருந்தார்கள். திடீரெனக் காட்டு யானைகள் சாலையில் வரக்கூடும் என எச்சரித்திருந்தார்கள். எல்லோரும் வண்டியை நிறுத்தினோம். யானை நகருவதாக இல்லை. கடைசியில் இருவர் மட்டும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மெதுவாகப் போய்ப் பார்த்தார்கள். யானையைச் சாலையோரமாகச் சங்கிலி போட்டுக் கட்டியிருந்தார்கள்!

எல்லோரும் கிளம்பினோம். யானை தாக்கினால் என்ன செய்வது என்று பயந்து கொண்டே நாங்கள் சாலையின் மறு ஓரமாக வேகமாகச் சென்றோம். நாங்கள் திரும்பிய மறு வாரமே யானை காரில் அவ்வழியாகப் பயணம் செய்தவர்களைத் தாக்கியது என்று கேள்விப்பட்டோம்.

அனுராதபுரம் வந்தோம். இலங்கையின் புராதனத் தலைநகரமான இங்கு பாழடைந்த இடங்களைச் சுற்றிப் பார்த்தோம். புனிதமான போதி மரம், புத்தர் ஆலயங்கள் பார்த்தோம். அங்கிருந்து இரவு 7 மணிக்குத் தலைமன்னார் வந்து சேர்ந்தோம். 10வது நாள் அதாவது 13 ஆம் தேதி காலை எங்கள் வண்டிகளுடன் இந்தியா கிளம்பினோம். அன்றிரவு மண்டபம் ரயில் நிலையத்தில் கழிக்க நேர்ந்தது. மறுநாள் புறப்பட்டு மதுரை வந்து சேர்ந்தோம்.

மதுரையிலிருந்து தேக்கடி, திருச்சி, சென்னை என வந்து சேர்ந்தோம். எங்கள் குழுவில் தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகம், பஞ்சாப், கேரளா, மகாராஷ்டிரா அனைத்து மாநிலத்தவரும், அனைத்து மதத்தினரும் இருந்தனர். அத்தனை பேரும் ஒற்றுமையாக ஒரு குடும்பமாக நமது சகோதர நாடான இலங்கை போன அந்தப் பதினைந்து நாட்களை என் வாழ்நாள் முழுவதும் மறக்கவே மாட்டேன்.

(இந்தச் சுற்றுலா போனது 1959 இல்! முப்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் இன்றைய நிலைமை... இந்தியாவையும், இலங்கையையும் நினைக்கும்போது இந்த அறுபத்தைந்து வயதுக்காரிக்கு அழுகை வருகிறது.)

– செல்லம் சுப்பிரமணியன்



குடும்பப் பிரச்னைகள் பேசுவதை சுற்றுலாவில் தவிர்க்கவும். மனத்தை ரிலாக்ஸ்டாக வைத்துக் கொண்டு டென்ஷனைத் தவிருங்கள். நம்முடன் வந்த மற்ற குடும்பத்தினருடனும் சிநேகம் பாராட்டுங்கள்.

- ஏ. அரவிந்தலோசனி

# ஞாயித்துக்கிழமை உங்க பசங்க கார்ட்டூனுக்கு மட்டும்தான் காத்துகிட்டிருக்காங்களா?

[illegible] வெர்மிஸெல்லி

விண்டர் வீட்
புதிய அற்புதம்

ஞாயித்துக்கிழமை காலைல கார்ட்டூனை ஆவலோட பாக்கற குழந்தைங்க சாப்பிட – றதுக்கும் புதுசா, டேஸ்டியா எதிர்பாக்கறாங்க இல்லியா? சண்டே ஒரு நாள் தானே புதுசா ஏதாவது செய்ய உங்களுக்கும், ருசிக்க சாப்பிட அவங்களுக்கும் நேரம் கெடைக்குது!

உங்க சண்டேக்காகவே [illegible] கம்பெனி அறிமுகப்படுத்தறதுதான் [illegible] வெர்மிஸெல்லி. "விண்டர் வீட்" – ல தயாரிச்ச ஸ்பெஷல் சேமியா இது.

"விண்டர் வீட்" பத்தி சின்ன விளக்கம் – வட இந்தியாவுல குளிர்காலத்துல விளையற செழுமையான கோதுமை இது. இந்த விண்டர் வீட்லதான் [illegible] வெர்மிஸெல்லியோட மாஜிக்கே இருக்குது. இதுல தயாரிச்ச உணவுல இருக்கற ருசி நீங்க பண்ணிப் பாத்து, உங்க குடும்பம் அனுபவிச்சாதான் தெரியும் !

அப்புறம் என்ன? [illegible] வெர்மிஸெல்லி வாங்கி உங்க கைவரிசையைக் காட்ட வேண்டியதுதானே? இனிமே ஞாயித்துக்கிழமை குழந்தைங்க கவனம் கார்ட்டூனை விட கூடுதல் சாப்பாட்டுல போயிடும், பாத்துகிட்டே இருங்க ! காரணம் இந்த "விண்டர் வீட் மாஜிக்" !



Vermicelli

[illegible] வெர்மிஸெல்லி – "சண்டே ஸ்பெஷல்" அனுபவம்.

4142TAM



# தயக்கத்தைத் தள்ள தயங்க வேண்டாம்!

ஒரு திருமணத்தில் சாப்பிட்டுவிட்டு பஸ் ஏறியதில் கணபதிக்குத் தூக்கம் இழுத்துவிட்டது. பஸ் ஏறியதுதான் தெரியும். நல்ல உறக்கம். கண்ணை விழித்தபொழுது ஏதோ ஒரு பஸ் ஸ்டாண்ட். புதுக்கோட்டையோ!

ஜன்னலுக்கு வெளியில் பார்த்தார். டிரை சைக்கிளில் அவித்த கடலை. ஆவி பறக்க விற்பனை. விற்பவன் முகத்தை கணபதி பார்க்க, உடனே அவன்...

''சாருக்கு எத்தனை, ஒரு ரூபாய்க்கா? இரண்டு ரூபாய்க்கா?'' வண்டியை நெருக்கிக் கொண்டு வந்து மடித்து நீட்டினான். அவருக்குச் சாப்பிடும் எண்ணமே இல்லை. அவனை அழைக்கவும் இல்லை. அவர் அவனைப் பார்த்தார், அவ்வளவு தான். அந்த ஒரு பார்வை அவனுக்குப் போது மானதாய் இருந்திருக் கிறது.

''வேண்டாம்ப்பா...'' தீர்மானமாகச் சொன் னார்.

''பிரிச்சு சாப்பிட்டுப் பார் சார்... இன்னும் வாங்குவே... கொடி கடலை சார்... சூடா...''

கணபதி அவன் பக்கம் திரும்பவே இல்லை. அவனும் விடாது அவரைக் கேட்டான். வாங்கிய பிறகுதான் விட்டான். அடுத்த சீட்டுக் காரரிடம் மூன்று பொட்டலங்கள் விற்பனை. வாங்க நினைத்தவர், நினைக்காதவர், தூங்கியவர், விழித்திருந்தவர்



அனைவரிடமும் விற்றுவிட்டான்.

அவனுக்குக் கடலை விற்றாக வேண்டும். தேவைப்படுபவர்கள் கூப்பிட்டு வாங்குவார்கள் என்று இருந்தால் விற்பனையாகி இருக்குமா?

அல்லது கேட்காதவர்களிடம் எல்லாம் இதை கூவிக் கூவி விற்க வேண்டுமா என்று அவன் தயங்கினால் அவன் பிழைப்புத்தான் நடக்குமா?

அவனது வெற்றிகரமான விற்பனைக்குக் காரணங்கள் என்னவாக இருக்கலாம்?

அவன் சிரமம் பார்ப்பது கிடையாது. அலைகிறான். அவன் சங்கோஜப்படுவது கிடையாது. தயங்காது அனைவரையும்

நம்முடைய கருத்துக்களை, ஆசைகளை, உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறோம். அதை அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிறோம். ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் வருந்துகிறோம். இதுவும் ஒரு வகை விற்பனை முயற்சிதான்.

இன்னும் ஒருபடி மேலே போனால், நாம் நம்மையே பல சமயம் விற்க வேண்டியிருக்கிறது. ஒரு வேலைக்கான நேர்முகத் தேர்வு, விண்ணப்பித்தவர் தன் திறமைகளை, தகுதிகளை, குணாதிசயங்களை விளக்கிச் சொல்லித் தன்னை விற்க வேண்டும். இண்டர்வியூ நடத்துபவர்கள்





அணுகுகிறான். சிலர் முகம் சுளிக்கலாம், அலட்சியப்படுத்தலாம். அவன் கவலைப்படுவது கிடையாது. அவனுடைய ஒரே குறிக்கோள் விற்பனை. தயக்கமற்ற முயற்சி. அதில் தெளிவான வெற்றி.

ஆமாம், தெரியாமல்தான் கேட்கிறோம், இந்தக் கடலை விற்பனை நடந்தால் நமக்கு என்ன நடக்காவிட்டால் என்ன என்று கேட்கிறீர்களா?

மேலோட்டமாக இல்லைதான். ஆனால் அடிப்படையில் இருக்கிறது. அவன் கடலை விற்கிறான். எல்லோரும் வேறு எதையோ விற்றுக் கொண்டிருக்கிறோம்.

அவரை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

விண்ணப்பித்தவர் தயங்கினால் காரியம் நடக்குமா? பேசுவார். சான்றிதழ்கள் காண்பிப்பார்.

அடுத்து கமலாவைப் பெண் பார்க்க வருகிறார்கள்.

''இவ நல்லாப் பாடுவா...''

''இவ சமைச்சா வாசம் மூணு வீட்டுக்கு அடிக்கும்...''

''இந்தப் பூக்கூடையெல்லாம் இவ பின்னியதுதான்'' இன்னும் என்னென்னவோ. அந்த மாலை நேரம் கமலாவின் அலங்காரம் எப்படி இருக்க வேண்டும்?

கமலா அழகான, திறமையான, குடும்பத்திற்கேற்ற பெண் என்று மாப்பிள்ளை வீட்டாரை நினைக்க வைக்க வேண்டும். எந்த

விஷயத்திலாவது தயக்கம் காட்ட முடியுமா?

வேலை கிடைத்தாக வேண்டும், கல்யாணம் முடிந்தாக வேண்டும், இவை கடலை விற்றாக வேண்டும் என்பது போலத்தான். தெளிவான குறிக்கோள். தயக்கமற்ற முயற்சி தேவை.

இதே அளவு பெரிய விஷயங்களாக இல்லாவிட்டாலும் வாழ்க்கையில் எந்த விஷயத்தை அடைவதற்கும் நம்மில் சிலருக்கு இருக்கும் பெரிய தடைக்கல் தயக்கம்.

தைப்பூசத்திற்காக பழனிக்கு சிறப்புப் பேருந்துகள் இருந்தும், பஸ்ஸில் கூட்டம். காரைக்குடி பஸ் ஸ்டாண்ட்.

சண்முகம் ஓடி வருகிறார். அமரும் இருக்கைகள் போக மக்கள் கம்பிகளைப் பிடித்தபடி நின்று கொண்டிருக்கிறார்கள். பழனி வரைக்கும் நின்று கொண்டேதான் பயணமா?

முன்பக்கம் ஏறி ஒவ்வோர் இருக்கையாகப் பார்த்துக் கொண்டே வருகிறார். காலியாக இருக்கும் இடங்களைப் பற்றி அடுத்த சீட்டில் இருப்பவரிடம் கேட்க ''ஆள் வர்றாங்க...'' ''பெட்டி வச்சிட்டுப் போயிருக்கார் பாருங்க...''

நிற்பவர்கள் நகர்ந்து கொண்டு அவரை கேலியாகப் பார்க்கிறார்கள். 'எங்களுக்குத் தெரியாமலா நிற்கிறோம்' என்ற பார்வை.

கண்டக்டருக்கு முன் சீட். ஜன்னல் ஓரத்து சீட்டில் ஒரு காவித் துண்டு. பக்கத்தில் உறக்கத்தில் ஒரு பெரியவர். அவரை மெதுவாக எழுப்பிக் கேட்கிறார்.

என்ன ஆச்சரியம்! அந்தப் பெரியவர் துண்டு தூக்கத்தில் நழுவிப் பக்கத்து சீட்டில் விழுந்திருக்கிறது. அவரும் உறங்கிவிட... சீட் காலிதான்.

தயக்கமற்ற சண்முகத்தின் முயற்சிக்கு வெற்றி. சந்தோஷமாக அமர்ந்து கொள்கிறார்.

வாழ்க்கையில் பெரிய விஷயங்களோ, சின்ன விஷயங்களோ, ஆனால் மகிழ்ச்சியைக் கொடுக்கவும் கெடுக்கவும் வல்லவை. மகிழ்ச்சியைப் பெறத்தான் அனைவருக்கும் விருப்பம்.



ஒரு தடவை விருந்தாளிகள் வருவார்கள் என்று எதிர்பார்த்து நிறைய தோசைகள் வார்த்து வைத்து விட்டேன். கடைசியில் யாரும் வரவில்லை. தோசைகளை வீணாக்க மனம் வராமல், எண்ணெயில் இட்டு, பொறித்து எடுத்தேன். வறுவல் போன்று இருந்தது. அடுத்த நாள் 'கரகர'வென சாப்பிட்டோம். 'பிரமாதம்' என்று வீட்டில் உள்ளவர்கள் மகிழ்ந்து பாராட்டினர்.

- வி. சி. கமலா

விருப்பத்தை அடைய முயற்சி, அதுவும் தயக்கமற்ற முயற்சி தேவையல்லவா?

இப்படி நம் வாழ்க்கையின் சந்தோஷங்களை, நிம்மதியைக் கெடுக்கின்ற தயக்கத்தின் காரணங்கள்தான் என்ன?

ஏன் தயங்க வேண்டும்?

''அவுங்க வீட்ல நம்ம பெண்ணைக் கட்ட முடியாதுங்க. அவுங்க ரொம்பப் பெரிய இடம்.''

''அங்க விலை ரொம்பக் கூட இருக்கும். பணக்காரங்கதான் போக முடியும்.''

''நாம போனா மதிக்க மாட்டாங்க.''

''இண்டர்வியூ எல்லாம் கண் துடைப்புப்பா... அவனுக்கு வேண்டியவங்களை முன்னாடியே செலக்ட் பண்ணிட்டிருப்பான்...''

முயற்சிகளை முளையிலேயே நசுக்கக் கூடிய வார்த்தைகள். ஆரம்பத்திலேயே போடப்படும் முட்டுக்கட்டைகள். இவையெல்லாம் சோதிக்கப்படாத அனுமானங்கள்.

ஆக, தயக்கத்திற்கு ஒரு காரணம், நாமே கற்பித்துக் கொள்ளும் ஒரு காரணம். உண்மையாகவும் இருக்கலாம், பொய்யாகவும் இருக்கலாம் - எதையும் சோதிக்காமலேயே நிராகரிக்க வேண்டாம். பழனிக்கு நின்றுகொண்டு சென்றவர்களுக்கும், சண்முகத்திற்கும் உள்ள வித்தியாசம், இந்த அனுமானம் கொடுத்த தயக்கம்தானே!

பெண்கள் உயர்நிலைப் பள்ளி வகுப்பறை. வரலெட்சுமி டீச்சர் வகுப்பு. பாடத்தில் ஒரு கேள்வி கேட்கிறார்கள். யாருக்குத் தெரியுமோ சொல்லலாம். சிறிதுநேரம் மௌனம். யாரும் பதில் சொல்லவில்லை.

விஜிக்குப் பதில் தெரிகிறது. சொல்லலாமா? ஆனால் இதென்ன நன்றாய்ப் படிக்கிற பானு, லக்ஷ்மி கூட பதில் சொல்லாமல் இருக்கிறார்களே! அவர்களுக்குத் தெரியாததா நமக்குத் தெரிந்துவிடப் போகிறது?

நாம் நினைப்பது தவறான பதிலாக இருக்குமோ? நீண்ட மௌனத்திற்குப் பிறகு, கடிந்து கொண்டு டீச்சரே பதில் சொல்கிறார். அட, விஜி சொல்ல நினைத்த அதே பதில்தான்.

தெரிந்திருந்தும் ஏன் சொல்லவில்லை? தயக்கம். என்ன தயக்கம்? நாம் சொல்வது தப்பாகப் போய்விட்டால் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்?

பயம், கேலிக்கு பயம். நிராகரிக்கப்பட்டு விடுவோமோ என்கிற பயம். 'விஜி, நன்றாக பயப்படு. தெரிந்திருந்தாலும் சொல்லாதே. வெற்றி உனக்கில்லை.' இந்த நிலை தேவையா?

கேலி செய்தால் என்ன? செய்யட்டுமே! நிராகரிக்கட்டுமே நமது பதிலை. முயற்சிப்பதில் என்ன தவறு? நாம் சொல்வது அத்தனையுமே சரியாக இருக்க வேண்டுமென்று என்ன கட்டாயம்? புரியவில்லையே!

நிராகரிப்பு என்றதும் என் நினைவுக்கு வருவது ஓர் எழுத்தாள நண்பர்தான். ஐந்து, ஆறு எழுத்தாளர்கள் நண்பர்கள். அதில் ஒருவர் நாராயணன். மற்றவர்களைவிட அவர் கதைகள் அதிகம் பிரசுரமாகும்.

''உங்க கதைன்னா செலக்ட் பண்ணிடுறாங்க. போன வாரம் ஒண்ணு, இந்த வாரம் ஒண்ணு...'' செல்வா அங்கலாய்த்தார். நாராயணன் அமைதியாகச் சொன்னார். ''என் கதைகள் எத்தனை பிரசுரமாகிறது என்றுதான் இவருக்குத் தெரியும், எத்தனை அனுப்பியிருக்கிறேன் என்று இவருக்குத் தெரியாது...''

ஆம். தினம் ஒன்று வீதம் வாரம் ஏழு அனுப்புபவருக்கு ஆறு திரும்பியிருக்கிறது. அவர் தயங்காமல் தொடர்ந்து வாரம் ஏழு எழுத அவற்றில் ஒன்று பிரசுரமாகிறது.

நிராகரிப்பு எண்ணிக்கையைக் கண்டு தயங்காத அந்த எழுத்தாளர் வெற்றி அவர் முயற்சியின் அடையாளமல்லவா?

தயக்கத்தின் அடுத்த காரணம், 'நெகடிவ் அப்ரோச்' - எதையும் எதிர்மறையாகப் பார்ப்பது.

''ஆமாம். நாம சொல்லித்தான் முடியப் போகுதா...?'' ''நமக்குத்தான் பயப்படப் போகிறார்களா?''

''அவர்கள் பிரச்னையை யாராலயும் தீர்க்க முடியாது.''

''அவன் திருந்தவே மாட்டான்.''

முயற்சி எடுக்காமலேயே இவர்களே எதிர்மறையாக முடிவு செய்து, மூட்டை கட்டித் தூக்கி எறிந்துவிடுவார்கள்.

இன்னும் சிலரிடம் தயக்கக் காரணமாயிருப்பது, அவர்கள் எதிலும் மிக அதிக நேர்த்தியை எதிர்பார்ப்பதுதான்.

நான் ஒன்று செய்தால் அதில் யாரும் குறை சொல்லக் கூடாது. அதற்கு விமரிசனமே கூடாது. அவர்களே அதைப் பரிசீலித்து பரிசீலித்து... அதற்குள் அந்த விஷயம் அதுவாகவே முடிந்துவிடும். அல்லது கெட்டுவிடும்.

இன்னும் சிலருக்கு பிரச்னையற்ற முயற்சிகள்தான் வேண்டும். அடிபடாமல் சைக்கிள் கற்றுக் கொள்ள முடியுமா? அப்படியெல்லாம் ரைட் சகோதரர்கள் நினைத்திருந்தால் இறக்கை கட்டிக் கொண்டு பறக்க முயன்றிருப்பார்களா? இன்றைய ஆகாய விமானத்திற்கான அடித்தளம் அமைக்கப்பட்டிருக்குமா?

மதியழகன் என்று ஒரு நண்பர். அலுவலகத்திற்குக் கம்ப்யூட்டர் வந்த புதிது. தெரிந்தவர்கள் இருவர் அதில் பணியாற்ற, அதன் அருகில் செல்லவே இவருக்குத் தயக்கம். தெரிந்தவர்களைக் கேட்டு செய்யக் கூச்சம். விட்டு விட்டார். வருடம் இரண்டாகிவிட்டது. அவர்கள் கம்ப்யூட்டர் உபயோகத்தில் வெகுதூரம் சென்றுவிட இன்று இவர் மிகவும் பின்தங்கிவிட்டார்.

ஆரம்ப காலச் சிறிய தயக்கம் அவரை இன்னும் வருத்திக் கொண்டிருக்கிறது.

நண்பர் மோகனுக்குக் குழந்தை பிறந்திருக்கிறது. மூன்று மாதமிருக்கும். பாயில் படுத்திருந்தது. மல்லாந்த நிலையிலிருந்து குப்புறக் கவிழ்ந்தது. தலையைத் தூக்கிப் பார்க்க இயலவில்லை.

தலையைத் தூக்க முயல்கிறது. முடியவில்லை. முகம் தரையில் மோதுகிறது. துணி போட்டிருந்தார்கள்தான். ஆனாலும் வலிக்காமலா இருக்கும்? முயற்சி மீண்டும் முயற்சி.

நாம் எல்லோருமே இந்தப் பருவத்தைக் கடந்துதான் வந்திருக்கிறோம். தயங்கினால் ஆகுமா? தலை நிற்கும் வரை அப்படித்தானே?

சிறு வயதில் இல்லாத தயக்கத்தை நாம் எங்கே பிடித்தோம்? செயல்படத் தயக்கம், கேட்கத் தயக்கம், கொடுக்கத் தயக்கம், சொல்லத் தயக்கம். தயக்கம், தயக்கம், தயக்கம்.

ஏன் பூட்டி வைக்க வேண்டும்? திறவுங்கள்; பரப்புங்கள்; கூவுங்கள்; பயப்படாது, கைகால்களை நீட்டிக் குரலை உயர்த்தி, முழு மனத்தையும் அதில் செலுத்தி முயற்சி செய்வோம். முடியாததும் உண்டோ!

நம் மனத்திலிருந்து இந்தத் தயக்கம் எனும் களையைப் பிடுங்கி, வேரோடு பிடுங்கி, நம்பிக்கை என்னும் விதையை நடுவோம்.

நம் மீது நம்பிக்கை, பிறர் மீது நம்பிக்கை, இந்த உலகத்தின் மீது நம்பிக்கை, அது செடியாய் வளர்ந்து, மரமாய் உயர்ந்து, காடாய் மண்டட்டும்.

இயற்கையிலேயே மனிதர்கள் தயக்கமில்லாதவர்கள். இடையில் நாம் இழுத்துக் கொண்டவை சில அனுமானங்கள், சில தீர்மானங்கள். அவை நம் முன்னேற்றத்திற்குத் தடைக்கற்கள். நாமே நமக்குப் போட்டுக் கொள்ளும் விலங்குகள். பல கற்பனையானவை, பொய்யானவை. புரிந்து கொண்டு, உணர்ந்து கொண்டு ஒதுக்க வேண்டும்.

தயக்கத்தை ஒழிப்பதில் தயக்கமே வேண்டாம்.

**– எஸ். எம். வள்ளியப்பன்**

---

*தயிர் சாப்பிடுவதைவிட மோர் குடிப்பது மிகவும் நல்லது. தயிர் சூடு. கோடை காலத்தில் தயிருக்குப் பதில் மோரை அதிக அளவு குடித்தால் தாகம் அடங்கும். வியர்வையினால் வெளியேறும் நீர்ச்சத்தை ஈடு செய்கிறது. ஒரே இடத்தில் உட்கார்ந்து வேலை செய்பவர்களுக்கும் வாகனம் ஓட்டுபவர்களுக்கும் மோர் சிறந்த பானமாகும்.*

*- எஸ். விஜயா சீனிவாசன்*



# பொன்னகையில் புன்னகை

தங்கத்தை எப்படிச் சேமிக்கலாம்?

நடுத்தர மக்களுக்கு உண்டாகும் மிக சகஜமான குழப்பம் இது.

கொஞ்சம் கொஞ்சமாகப்

"பிறந்த பாப்பா முதல் முதிர் வயது பாட்டி வரை ஒரு துளி தங்கமாவது அவர்கள் உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும். அது வழி வழியாய் வந்த பாரம் பரியப் பழக்கம். இங்கு பெண் ணுக்கு நகை அவசியம்.

அதிகப்படியாக இல்லா விட்டாலும் அளவோடவாவது அணியத்தான் வேண்டும்.



பண ்தைக் குருவிபோல சேர்த்து அது துளித்துளியாகப் பெருகி நாம் நகை வாங்கப்போகும் காலத்தில் - நாம் ஒருபடி ஏறினால் அந்தச் சமயத்தில் தங்கம் விலை 10 படி மேலே ஏறி உட்கார்ந்து கொள்ளுகிறது. கூடவே செய்கூலி, சேதாரம் போன்ற மலைப்பான சமாச்சாரங்கள்.

பின்னர் எப்படித்தான் தங்கம் வாங்குவது? "உங்களுக்காகத்தான் எங்களைப் போன்றவர்கள் சீட்டு நடத்துகிறோம்" என்கிறார் ஃபாஹிமால் ஜுவல் ஹவுஸ் உரிமையாளர் அமானுல்லா மரைக்காயர்.

நம்மிடமிருக்கும் நகை நம் பொருளாதார மதிப்பீட்டைக் குறிப்பிட்டுக் காட்டக் கூடியது. பணத் தட்டுப்பாடு வரும்போது எல்லாம் நகை பணமாக மாறி நம் தேவையைப் பூர்த்தி செய்கிறது. இந்த அவசியம்தான் நடுத்தர மக்களை நகை சேமிக்கத் தூண்டுகிறது.

அந்த மக்களால் சிறுகச் சிறுக சேமித்தால்தான் நகை வாங்க முடியும் என்ற நிலை. அப்படி வந்ததுதான் நகைச் சீட்டு என்பது. நாங்களும் 'பொன்னகையில் புன்னகை' திட்டத்தின் மூலம் சீட்டுச் சேமிப்பை நடத்துகிறோம்''

எல்லா நகைக் கடைகளும் தான் இந்த மாதிரி சீட்டு சேமிப்பு நடத்துகிறார்கள்- உங்கள் சீட்டினை ஏதாவது வித்தியாசமாக நடத்துகிறீர்களா?

''பொதுவாக நகைக் கடைகளில் 'ஏ' குரூப் பி குரூப் என்று சீட்டுப் பிடிப்பது வழக்கம். நாங்கள் 'பொன்னகையில் புன்னகை' திட்டத்தில் மரகதம், வைடூரியம், கோமேதகம், வைரம் என்று இரத்தினங்களின் பெயர்களால் சீட்டு நடத்துகிறோம்.

மரகதம் மாத சேமிப்புத் திட்டத்திற்கு இதுவரை யாரும் கொடுக்காத பரிசுகளை கொடுத்தோம். 3 மாருதி கார்கள், 3 கைனட்டிக் ஹோண்டா, 3 வாஷிங் மிஷின்கள் கொடுக்கப்பட்டன. இப்படி ஒவ்வொரு சீட்டிற்கும் ஏராளமான பரிசுகளைத் தருகிறோம்.

இத்திட்டத்தின் இன்னொரு சிறப்பம்சம் இத்திட்டத்தில் சேரும் உறுப்பினர்களைத் தங்க விலை ஏற்றம் பாதிக்காது. ஒவ்வொரு தவணைப் பணம் கட்டும் பொழுதும் உள்ள தங்கவிலை கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதால் விலை ஏற்றத்தைப் பற்றிக் கவலைப் பட வேண்டியதில்லை.''

சீட்டுப் பிடிக்கும் நகைக் கடைகள் தங்களுக்கு வேண்டியவர்களுக்கே பரிசுகளைக் கொடுத்து விடுகிறார்கள் என்கிற அதிருப்தி இருக்கிறதே?

''இல்லை. அப்படி யாரும் செய்வதில்லை. நாங்களும் சீட்டுக் குலுக்கல் நிகழ்ச்சியை நடத்தி அன்று குரூப்பில் உள்ள உறுப்பினர்கள் அனைவரையும் ஒரு அரங்கத்துக்கு அழைக்கிறோம். அவர்களுக்காக ஒரு நிகழ்ச்சி நடத்தி முடிவில் வாடிக்கையாளர்களில் 10,15 பேரை மேடைக்கு அழைத்து அவர்களின் கண்காணிப்பில் குலுக்கல் நடத்துகிறோம். என்ன, தாய்மார்களே திருப்திதானே'' என்று புன்னகைக்கிறார் மரைக்காயர். இதுதான் புன்னகையில் பொன்னகையோ?

பேட்டி: மலர்வழி



சப்பாத்திக்கு மாவு பிசைவதற்கு ஒரு சுலபமான வழி : 1 தம்ளர் கோதுமை மாவிற்கு அரை தம்ளர் விதம் தண்ணீரை ஓர் அகன்ற பாத்திரத்தில் ஊற்றி, தேவையான உப்பையும் போட்டு, அடுப்பில் வைக்கவும். தண்ணீர் முத்துக் கொதி வந்தவுடன் அடுப்பை அணைத்துவிட்டு, மாவை அப்படியே நீரில் கொட்டி, ஒரு கரண்டிக் கம்பினால் கிளறவும். மாவு வெகு விரைவில் ஒன்றாகக் கலந்துவிடும். பின்னர் சிறிது எண்ணெய் விட்டு, கையினால் சேர்த்துப் பிசையவும். சப்பாத்தி மிகவும் மிருதுவாக இருக்கும். மேலும், நிறைய மாவு பிசையும்பொழுது, வெகு எளிதாக, கை வலிக்காமலும் இருக்கும்.

– சாரதா நடராஜன்

# பவ வருடம்

## எப்படி இருக்கும்?

### மேஷ ராசி :

கார்த்திகை மாதம் வரை நல்லதொரு கால கட்டம். வைகாசி, ஆனி மாதங்களில் வீட்டுக்காக நிலமோ அல்லது வீடோ வாங்கும் யோகம் உண்டு. இசைக் கலைஞர்கள் ஏற்றம் பெறுவர். தொழில் முறையில், நிலம் வாங்கிப் பிரித்து விற்கவும், அல்லது வீடுகட்டி விற்கவும் வாய்ப்பு உள்ளது. ஆனி மாதத்தில் நகை ஒன்று வாங்கும் நிலை வரும். அல்லது அடகு வைத்ததை மீட்கவும் முடியும். சகோதரர்களால் நன்மை உண்டு. சித்திரையில் ஏற்படும் இராகு, கேது ஆகியவைகளின் இடப்பெயர்ச்சி அனுகூல மான நிலையில் அமையவில்லை. அதனால் பெற்றோர் மற்றும் அவர்கள் வழி உறவினர் ஒருவரது உடல்நிலை காரணமாக அலைச்ச லும் செலவும் ஏற்படலாம். அவருக்காக மிருத்யுஞ்சய ஹோமம் போன்றவற்றைச் செய்ய வேண்டி வரலாம். தொழில், உத்தி யோகம் மற்றும் வியாபாரத் துறையின ருக்குச் சீரான முன்னேற்றம் உண்டு. குழந் தைகளின் கல்வி நலன், தாம்பத்திய உறவு ஆகியவை சீராகவே இருக்கும். எனினும் தை மாத வாக்கில் திடீரென தாம்பத்ய உறவில் சிறு சலனம் தோன்றி மறையும். இதற்கு ஒரு பெண் காரணமாக அமைவார். அது அலுவலகத்தில் பணிபுரியும் பெண்ணா கவும் இருக்கலாம். அல்லது உறவினராகக் கூட இருக்கலாம். ஐப்பசி மாதத்திலிருந்தே சற்றுக் கவனமுடன் இருப்பது அவசியம். அந்த சமயத்தில் ஏற்படும் குரு பெயர்ச்சி சாதகமாக அமையாது. எனவே சகலதுறை யினரும் சற்றுக் கவனமுடன் செயல்களைச் செய்வது நல்லது. மனதில் அமைதி குறை யும். எனவே ஆலங்குடி ஆபத்சகாயேசுவர ரின் அருள் நாடிச் செல்லுங்கள். மன இருள் அகல அவரது அருள் ஒளி உதவும்.



### ரிஷப ராசி :

சித்திரையின் மத்தியில் ஏற்படுகின்ற சுக்கிரன், இராகு, ஆகியவர்களின் இடப் பெயர்ச்சி உங்களுக்குச் சாதகமாக அமை யும். வழக்குகளில் வெற்றி ஏற்படும். ரிஷ பத்தின் யோககாரனாகிய சனீஸ்வரன், செவ் வாய், சுக்கிரன் ஆகியவர்களின் ஒத்து ழைப்புடன் வீடோ, நிலமோ வாங்கும் நிலைமை உருவாக்குவார். முறைப்படி பயன்படுத்திக் கொள்ளுங்கள். இதுவரை ஏற்பட்டிருந்த தேக்கநிலை மாறி, ஆக்கபூர் வமாகச் செயல்களைச் செய்யும் ஆற்றலைப் பெறுவீர்கள். சுப நிகழ்ச்சி ஒன்றைச் சிறப் பாக நடத்தி முடிப்பீர்கள். ஐப்பசி மாத வாக் கில் ஏற்படும் குருவின் மாற்றம், சற்று ஏமாற்றத்தை அளிக்கும். எனினும் மற்ற கிரகங்களின் சஞ்சாரம் நன்கு அமைவதால் அதற்கு முன்னரே உங்கள் நோக்கங்கள் எதிர் பார்த்தபடி அனுகூலமான முறையில் நிறை வேறும். ஆடி மாதத்தில் ஒரு எதிர்பாராத தனலாபம் ஏற்படலாம். எந்தத் துறையில் இருப்பவர்களுக்கும் இது பொருந்தும். ஐப்பசிக்குமேல் குழந்தைகளின் கல்வி நலனில் கவனம் செலுத்துங்கள். வெளி நாட்டுப் பிரயாணத்தையோ அல்லது வாக னம் ஒன்றை வாங்கும் யோகத்தையோ ராகு ஏற்படுத்தித் தருவார். கார்த்திகை, மார்கழி மாதங்களில் செவ்வாயும், சுக்கிரனும் நீசம் அடைவதால் எந்தவொரு புது முயற்சி யிலும் கவனம் தேவை. தொழில் விரிவாக் கத்தைத் தள்ளி வையுங்கள். அத்துடன் நீண்ட தூரப் பிரயாணங்களைக் கூட ஓரி ரண்டு மாதங்கள் கழித்து மேற்கொள்ளுங் கள். கேதுவின் மாற்றத்தால் ஏற்படும் சிரம மான சூழ்நிலையை மாற்ற நம்பிக்கை யுடன், தும்பிக்கை அண்ணலின் கரு ணையை நாடுங்கள்.

### மிதுன ராசி :

வருட ஆரம்பத்திலேயே, இராசிநாதன் இலாபத்தில் அமர்ந்து அருள் புரிய இருக் கிறார். அதே சமயம் கேது அவருடன் சேர்ந்து நல்லதைக் கொடுக்க இருப்பதால், புது முயற்சிகளைத் தொடரலாம். ஐப்பசி

வரை குருவின் அருளும் உண்டு. எனினும் அனுகூல நிலையிலிருந்து இராகு ஐந்தாம் இடத்துக்குப் பிரவேசித்துள்ளார். இதனால் குழந்தைகளின் கல்வியில் சிறப்பான கவனம் தேவைப்படும். ஐப்பசிக்குப்பின் சற்று அதிகமாகவே குழந்தைகளைக் கண்காணிக்க வேண்டும். வைகாசி, ஆனி மாதங்களில் வீட்டு யோகம் உண்டு. எனவே சொந்தத்தில் வீடு அமையும் வாய்ப்பு உண்டு. நிலசம்பந்தமான வழக்குகளில் வெற்றி உண்டு. குடும்பத்தில் உள்ளவர்களுடன் அன்னியோன்யமான உறவு நிலை பலப்படும். அக்டோபருக்குப் பின் குருப் பெயர்ச்சி காரணமாக எல்லா விஷயங்களிலுமே நன்கு கவனித்துச் செயல் பட வேண்டிய நிலை என்றாலும், புத சந்திர பரிவர்த்தனை யோகத்தால் ஆடி, ஆவணி மாதங்களில் தனலாபமும், வெளிநாட்டுப் பிரயாணமோ, அல்லது அங்கிருந்து எதிர் பார்த்த உதவியோ கிடைக்கும். ஆவணி, புரட்டாசி மாதங்களில் கலைத்துறையினரும், குறிப்பாக நடிப்புத் துறையில் உள்ளவர்களும், மற்றும் எழுத்துலக மேதைகளும், பாடலாசிரியர்களும் மேன்மை அடைவார்கள். புது ஒப்பந்தங்கள் எதிர் பார்த்தபடி அமையும். புதன், செவ்வாய், சுக்கிரன் ஆகியவர்கள் சொந்த வீட்டில் இருக்கும் சமயம் எதிர்பார்த்துக் காத்திருந்த திருமணம் ஒன்று உங்கள் வீட்டில் நடக்கும். இந்த கால கட்டத்தில் ஷேர் மார்க்கெட்டில் ஈடுபட்டவர்களுக்கு நல்ல இலாபம் உண்டு. இந்த இராசிக்காரர்களுக்கு உள்ளபடியே சென்ற ஆண்டைவிட கூடுதலாக நன்மையே கிடைக்கும். தசா புக்திகள் நன்கு அமைந்தவர்களுக்குக் கவலையே தேவையில்லை. குரு, இராகு இவர்களின் மாற்றங்களுக்குப் பின் சிறு சிறு சச்சரவுகள், அதனால் அமைதி இழத்தல் போன்றவை ஏற்பட்டுச் சரியாகும். இராசி நாதனாகிய புதனுக்கு தேவதை மகா விஷ்ணு. அவரது அவதாரங்களில் ஒன்றாகிய இராமாவதாரத்தைப் பற்றி அறியாதார் யார். அப்படிப்பட்ட ஸ்ரீராமன் கிருஷ்ணகிரிக்கு அருகில் உள்ள வேப்பம்பள்ளியில் அமைதியான இடத்தில் அழகாகக் காட்சி தரும் திருக்கோவிலுக்குச் சென்று சரணடையுங்கள். சகலமும் நன்மையாக மாறும். சிரமங்கள் தீரும்.

## கடக ராசி :

அஷ்டமத்தில் சனி கஷ்டத்தைத் தருவாரோ என மனம் வேதனைப் படாத அளவிற்கு, ஆட்சியில் உள்ள காரணத்தால், சனீஸ்வரன் சோதனைகளைக் குறைப்பார். 10ல் உள்ள சூரியன் சித்திரை வைகாசி மாதங்களின் முறையே பிற்பகுதி, முற்பகுதி ஆகிய 30 தினங்களில் உங்களது புகழை ஓங்கச் செய்வார். சிரமங்களைத் தாங்கும் சக்தியையும் தருவார். கலைஞர்களுக்கு ஆண்டின் ஆரம்பமே நன்கு அமையும். வைகாசி மாதத்தில் வீடு வாங்கும் யோகம் உண்டு. புதன் ஆட்சிக்கு வரும்போது சுப விரயம் ஒன்று ஏற்பட இருக்கிறது. எனவே திருமணம் ஒன்று நடக்கும். கடக இராசிக்காரர்களுக்குச் சகட யோக காலம். ஏற்றத்தாழ்வுகள் இருந்து கொண்டே இருக்கும் என்றாலும், ஐப்பசியில் ஏற்படும் குருப்பெயர்ச்சியால் ஏற்றமான சூழ்நிலை உருவாகும். புனர்பூச நட்சத்திரக் காரர்களுக்கு குருவின் மாற்றம் கூடுதலான நன்மைகளைத் தருவதுடன், குழந்தைகளால் ஏற்படும் பிரச்சனைகளுக்கு குரு நல்லதொரு வழி காட்டுவார். சந்திரன் ஆட்சி உச்சம் பெறும் காலத்தில் எந்தமாதமாயினும் அச்சமயத்தில் திடீர் தனலாபம் ஏற்படும். அது பதவி உயர்வு மூலமோ, தொழில் மூலமோ அல்லது பரிசுகள் மூலமாகக் கூட வரலாம். தசாபுக்தியைப் பொறுத்துப் பலன் மாறலாம். எனினும் கேதுவுக்கும் ராகுவுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. கூடியவரை இந்த இராசிக்காரர்கள் அவர்கள் எந்த மதத்தினராயினும் அம்மதத்தைச் சார்ந்தச் சான்றோர்களை அணுகி ஆசிபெறுவது நல்லது. கோட்சாரப் பலனையே இந்த இராசியின் நாதனாகிய சந்திரனைக் கொண்டே நிர்ணயிக்கப்படுவதால் பௌர்ணமி அன்று ஸ்ரீசத்ய நாராயணருக்குப் பூஜை செய்வது மிகவும் நல்லது.



வெயில் காலம் ஆரம்பிக்கச் சில மாதங்களே உள்ளது. வடாம் போடுபவர்கள் பிளாஸ்டிக் ஷீட்டில் வெயிட் வைக்கக் கற்களை உபயோகிப்பார்கள். ஆனால் அந்தக் கற்களை பாலிதீன் பைகளில் போட்டு வைத்தால் கல்லிலிருந்து கிடைக்கும் மண், தூசி வடாத்திற்குக் கிடைக்காது.

– திருமதி சுப்பிரமணியம்



**பிரஷர் குக்கர் சேப்டி வால்வு சமையலின் பாதியில் உராய்ந்து போனால் கவலை வேண்டாம். விளக்குத் திரி சுற்றுவது போலதுணியைச் சிறிதாகச் சுற்றி துவாரத்தை அடைத்துகாலை ஸிம்மில் வைத்து சமைத்து முடிக்கலாம்.பிறகு கடையில் வேறு ஒன்றை வாங்கிப்பொருத்தலாம்.**

**- திருமதி சுப்பிரமணியம்**

நாராயணனை நம்பினோர் கைவிடப்படுவதில்லை. இதை அனுபவப் பூர்வமாக உணரலாம்.

## சிம்ம ராசி :

சித்திரை மாதத்தில் உச்சம் பெறும் இராசி நாதனாகிய கதிரவன் கிரகங்களின் நாயகன். ஸர்வ வல்லமையும் உடைய சூரியன் கண்கண்ட தெய்வமானதால் தான் எந்நாட்டவரும் அவரை வைத்தே ஜாதக நிர்ணயம் செய்யமுடியும். இந்த ஆண்டின் ஆரம்பத்தில் சுக்கிர சம்பந்தம் பெறும் இராசி நாதன் உங்கள் கீர்த்தியை அதிகப் படுத்துவார். அத்துடன் வைகாசி ஆனி மாதங்களில் ஆட்சியில் உள்ள செவ்வாய் அரசியலில் உள்ளவர்களுக்குச் செல்வாக்கைச் சேர்ப்பார். குறிப்பாக ஆடி மாதத்தில் இலாபத்தில் இருக்கும் புதனால் எழுத்துலக மேதைகளும், ஆற்றல்வாய்ந்த அரசியல் மேதைகளும் தங்களது செயல்களில் வெற்றி காண்பர். உயர் பதவியில் உள்ளவர்களுக்கு ஆடியில் ஏற்படும் எதிர்ப்புகள் ஆவணியில் அடங்கி விடுவதுடன் உங்களின் ஆற்றல் எத்தகையது என்பதையும் எதிரிகள் புரிந்து கொள்வார்கள். அத்துடன் வீடு, வாகன யோகங்களுடன் ஆவணி மாதத்தில் வெளி நாடு சென்றுவரும் வாய்ப்பையும் தருவார். அதனால் பயன் உண்டு. ஐப்பசியில் நீச்சம் பெறுகின்ற சூரியனும் சுக்கிரனும் சற்று சங்கடங்களை அன்றாட பணிகளில் ஏற்படுத்தலாம்.எனவே, ஆதித்யஹ்ருதய தோத்திரத்தை படிப்பதுடன் கோதண்டம் ஏந்திய ஸ்ரீ ராமரை மதுராந்தகத்திலோ அல்லது பத்ராசலத்திலோ சென்று சேவிப்பதும் நன்று. அது எதிரிகளை வெல்வது மட்டுமல்ல, இனி அத்தகைய சூழ்நிலையை ஏற்படா வண்ணம் தடுக்கும். இந்த விஷயத்தில் கிருஷ்ணகிரிக்கு அருகில் உள்ள வேற்பணைப்பள்ளி இராமர் கோவிலுக்குச் சென்று வந்தாலே உங்களுக்கு உற்சாகமும், உறுதுணையும் கிடைக்கும். அத்துடன் மனதில் உள்ள வேகம் அடங்கி, அமைதியுடன் திரும்பலாம்.

## கன்னி ராசி :

இராகுவின் இடமாற்றம் உங்களை உங்கள் அலுவலகத்திலிருந்தும்கூட இடமாற்றம் செய்துவிடும் சூழ்நிலை உள்ளது. குரு இன்னும் ஆறு மாதத்திற்கு உங்களுக்கு உதவும் நிலையிலேயே இருந்தாலும், ஆறில் சனி உங்களுக்கு ஆற்றலை அளித்தாலும், இராசிநாதன் வருட ஆரம்பத்திலேயே 7ல் நீச்சம் அடைந்திருப்பது சரியல்ல. அதனால் பொருளாதாரத் தட்டுப்பாடு ஏற்படலாம். அத்துடன் தாய் வழி உறவினர் உடல் நிலை பாதிப்புக்கு ஆளாகி, அதனால் உங்கள் மனநிலையும் பாதிப்புக்கு ஆளாகலாம். ஆடி மாதத்தின் பிற்பகுதியில் பதவி உயர்வு ஏற்படலாம். நீங்கள் ஒரு நடிகரானால் புது ஒப்பந்தம் ஒன்றுக்குத் தயாராக இருங்கள். அரசாங்கத்திலிருந்து விருது ஒன்று உங்களுக்குக் கிடைக்க இருக்கிறது. குறிப்பாக இந்த இராசியில் பிறந்துள்ள விஞ்ஞானிகள், தொழில் நுட்பக் கலைஞர்கள், நடிக நடிகைகள் ஆகியவர்களுக்கு அத்தகைய கௌரவம் கிடைக்கும். புரட்டாசி மாதத்தில் எதிர்பாராத தனலாபம் உண்டு. அது ஒரு பரிசின் மூலம் கூட கிடைக்கலாம். ஐப்பசி மாதம் வரை உங்கள் இராசிக்கு முகராசி உண்டு. எனவே உங்களது தொழில், வியாபாரம் அல்லது வேறு எந்தத் திட்டமாக இருந்தாலும் சரி, அல்லது புது ஒப்பந்தங்களானாலும் சரி, மேற்கண்ட, கால கட்டத்திற்குள் செய்து முடிப்பது நல்லது. தண்ணீர் உள்ள இடத்தைக் காட்டியாகிவிட்டது. அதை எடுத்துக் குடிக்கும் முயற்சி உங்களுடையதுதானே! எனவே முயற்சி செய்யுங்கள். அதன் முடிவு இலாபகரமாக அமையும். இந்த இராசிப் பெண்களின் திருமணத்திற்குக் குருபலம் ஐப்பசி வரை உள்ளது. தடங்கல் இருக்குமானால் சூடிக் கொடுத்த நாச்சியார் எனப்படும் ஸ்ரீ ஆண்டாள் அவர்கள் பாடிக் கொடுத்துள்ள ''வாரணமாயிரம்'' எனத் தொடங்கும் பதிவோரு பாசுரங்களைப் பொருளுணர்ந்துப் பாராயணம் செய்யுங்கள். 48 நாட்கள், ''நாரணன் நம்பியைப் போலொரு

வரன் வேண்டும்.'' என உளமாரப் பாடி னாலே போதும். வரன் தாவாகத் தேடி உங்கள் இடத்திற்கு வருவார். இது ஆண் டாள் வாக்கு. மற்றபடி ஐப்பசிக்குப் பின் சற்று பொருளாதாரத் தொல்லைகள் வர லாம். அதற்கேற்ப உங்கள் திட்டங்களைச் சற்று மாற்றி அமைத்துக் கொள்வதே சிறந்த பரிகாரமாகும்.

## துலா ராசி :

ஐப்பசி வரை சற்று இழுபறிதான். இராசிநாதன் சித்திரையிலிருந்து வைகாசி முடிய சுப நிகழ்ச்சிக்கு வழிவகுக்கிறார். எனவே திருமணம் ஒன்று தடையின்றி நடக்கும். வீடுவாங்கவேண்டிய சந்தர்ப்ப மும் கனிந்து வந்துள்ளது. ஆவணி மாதத்தில் அதற்கான வழிமுறைகள் தெரியும். பயன் படுத்திக் கொள்வது நன்று. ஆவணியின் பிற்பகுதியிலிருந்து மார்கழி வரை சுக்கிர னால் சுகமில்லை. தாம்பத்திய உறவில் கூட சிறு சலனம் ஏற்பட்டுச் சரியாகும். இந்தக் காலத்தில் எந்தத் துறையினரும் எந்தப் புதிய முயற்சியையும் மேற்கொள்ளவேண்டாம். தசா புத்தி பலமாக இருந்தாலொழிய அகலக் கால் வைக்க வேண்டாம். புதை மண்ணில் வீழ்ந்த கதையாகிவிடும். எனவே காலதாமத மானாலும், ஐப்பசிக்குப் பிறகு எதையும் செய்ய ஏற்றதொரு காலம் வரும். மற்றபடி செவ்வாய் , சுக்கிரன் மற்றும் சனி போன் றவர்கள் ஓரளவு நன்மையே செய்ய இருக் கிறார்கள். இது வரை தோல்வியைத் தழு வியவர்களை வெற்றித் திருமகள் தனது பார்வையால் இரட்சிப்பாள். அந்த அள விற்கு ஆண்டின் கடைசி மூன்று மாதங்கள் உயர்ந்த நிலையில் இந்த இராசிக் காரர் களுக்குக் கிரக சஞ்சாரம் பலமாக இருக்கும். மாணவர்களின் மனநிலை, கல்வி நலன், குணம் அனைத்தும் நன்றாகவே இருக்கும். இலட்சுமி ஸ்தோத்திரம் படியுங்கள். மாணவ, மாணவிகள் விடாமுயற்சியுட னும், முழு மனதுடனும் கல்வியில் கவனம் செலுத்த வேண்டியது அவசியம். துலா ராசிக்கு விரயஸ்தானத்து அதிபதி புதன். அவனே கல்விக்குக் காரகன். அப்படிப் பட்ட புதன் பங்குனி மாத சமயத்தில் அதா வது 95 மார்ச்சில் நீச்சமடையும் சமயம் தேர்வுகளுக்குரிய மாதமாக அமையலாம். எனவே நன்கு அதற்கேற்ப உங்களைத் தயார் செய்து கொள்ளவே மேற்கண்டவாறு குறிப் பிட வேண்டியதாயுள்ளது. மற்றபடி இந்த ஆண்டில் கோர்ட் விவகாரம், பூர்வ சொத் துக்கள் சம்பந்தமாக எந்த நடவடிக்கையும் ஐப்பசிக்குப்பின் எடுப்பது நல்லது. கோட் சார விதிப்படி சிம்மராசிக்குச் சந்திரன் வரும் நாட்களிலும், ஆட்சியில் உச்சம் பெறும் நாட்களிலும் நீங்கள் எடுக்கும் எந்த முயற்சி யும் பயன்தரும். இராகு ப்ரீதிக்காகத் துர்க் கைக்கு விளக்கேற்றலாம்.

## விருச்சிக ராசி :

விரய பாகத்தில் ஐப்பசி வரை குரு இருந்தாலும் செவ்வாய் வைகாசியில் ஆட்சிக்கு வருவதால் நில சம்பந்தமான தாவாக்கள் வெற்றியுடன் முடியும். அதே சமயம் இராசியில் உள்ள இராகு விரயத் திற்கு வருவதால் தந்தை வழி பாட்டனா ருக்கு உடல்நிலை பாதிக்கப்படலாம். ஆனால் வைகாசியின் மத்தியில் ராசிநாத னும், சுக்கிரனும் இராசியைப் பார்ப்பதால் இடம் மாறும் நிலை ஏற்படும். வீட்டை மாற்ற வேண்டியோ அல்லது உத்தியோக மாறுதலை ஏற்க வேண்டியோ வரலாம். சொந்த வீட்டில் இருப்பவர்கள் இந்த சமயத்தில் செவ்வாய்க்கிழமை மாலை ஆறு அகல் விளக்குகளை ஆறு முகனுக்காக வீட்டினுள் பூஜை அறையிலோ அல்லது வசதியான இடத்திலோ, முருகன் படம் வைத்து அதன் முன் ஏற்றி, விசாக நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் இலட்சுமி தோத்திரத்தைப் படிப்பது நல்லது. மேற் கண்ட மூன்று நட்சத்திரங்களில் ஏதேனும் ஒன்று வரும் செவ்வாய் அன்று ஒருமுறை

---

வற்றல் குழம்பு செய்யும்போது, குழம்பு நன்றாகக் கொதித்து இறக்கிய பிறகு, சிறிது மிளகுப் பொடி, மஞ்சள் பொடி இரண்டையும் போட்டுக் கலந்தால் ருசி மிகவும் அதிகமாகும்.

- தேவகி





சுற்றுலாவில் டார்க் நிற உடைகளை உடுத்துவதே சிறந்தது. (வேறெதற்கு? - அழுக்குத் தெரியாமல் இருப்பதற்கு!) கஞ்சி போட்டு, இஸ்திரி போட்ட காட்டன் உடைகளைத் தவிர்க்கலாம். உட்கார்ந்து எழுந்தால் கூட புடைவையை கவனிக்க வேண்டும்.

- அரவிந்தலோசனி

படித்தாலே போதும். ஆண்டு முழுவதும் நல்லது நடக்கும். ஐப்பசி முதல் இந்த ராசிக்கு வரும் குரு இது செவ்வாயின் வீடு என்பதால் நன்மையைச் செய்யாவிடினும் கெடுதலைச் செய்ய மாட்டார். கார்த்திகை, மார்கழி மாதங்களில் திரைப்படத்துறையினர் புதுப் படங்களைத் தயாரிக்க உகந்த காலமாகும். தேக்க நிலை நீங்குகின்ற நேரம். அதே சமயம் மேற்குறித்த பரிகாரங்களைச் செய்வதன் மூலம், மனதில் உள்ள குழப்பங்கள், சலனங்கள், ஐயப்பாடுகள் நீங்கி, மனதில் தெளிவு பிறக்கும். அதன் பிறகு எதையும், செய்வது எளிதல்லவா! இந்த ஆண்டில் மாணவ மாணவிகள் மற்றும் கலைஞர்கள், எரிபொருள் துறையினர் தத்தம் செயல்களைச் செவ்வனே செய்யும் ஆற்றல் பெறுவார்கள். செவ்வாய் நீசமடையும் புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் புது முயற்சிகளைச் செய்வது உசிதமல்ல. அடுத்து வரும் மாதங்களில் அவற்றை செய்து கொள்ளலாமே.

யில் விரயத்திற்கு வரும் காலம் சற்று சோதனைகள் ஏற்படலாம். ஆண்டின் கடைசி மூன்று மாதங்கள் இறைபக்தி மூலமே மனதில் நிறைவை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். எனவே குரு ஸ்தலங்களுக்குச் செல்லுதல் நல்லது. கடைசியில் குறிப்பில் குறிப்பிட்டுள்ளபடி தீபப் பரிகாரம் செய்வது நல்லது. இருளை அகற்றும் தீப ஒளி உங்கள் மனதிலும் நம்பிக்கை ஒளியை ஏற்றும் என்பதில் ஐயமில்லை. ஐப்பசிக்கு முன் ஆவணி மாத சமயத்தில் வீட்டில் சுப நிகழ்ச்சி ஒன்று நடக்கும். திருமணமாகக் கூட அது அமையலாம். பொதுவாக இந்த பவ ஆண்டில் தனுர் ராசிக்கார்களுக்கு முதல் எட்டு மாதங்களுக்கு வெற்றி முரசுக் கொட்டும் அளவிற்கு காலம் கனிந்துவரும். அதற்குப் பிறகு வரும் நான்கு மாதங்களில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படலாம். அரசியல் துறையில் உள்ளவர்கள் அது சமயம் சற்று கவனமுடன் தனது வழி முறைகளை மேற்கொள்ளுதல் அவசியம்.

## தனுசு ராசி :

இராகுவின் இடமாற்றம் இதுவரை இருந்த தேக்கத்தை நீக்கும். வாகன யோகத்தையும், வான யாத்திரையையும் தரும். ஆனால் ஆறிருந்து அருள்புரிந்த கேது ஐந்துக்கு வருவது சற்று சஞ்சலத்தைத் தந்தாலும் ஐப்பசி வரை குருவின் பார்வை காரணமாகக் கெடுக்கமாட்டார். மூன்றில் உள்ள சனீஸ்வரன் சகல துறையினர்க்கும் உதவும் நிலையிலேயே சஞ்சரிப்பதால் சங்கடங்கள் நீங்கும். எந்தப் பணியையும் தைரியமாகத் தொடங்கலாம். குறிப்பாக இயந்திரம், கருப்புக்கல், எரிபொருள் துறையினர் ஏற்றம் பெறுவர். பங்கு மார்க்கெட்காரர்களுக்கு பலவிதத்திலும் இலாபம் உண்டு. முதல் மூன்று மாதங்களில் வீடு, நிலம், வாகனம் என ஏதோ ஒன்று வாங்கும் யோகம் உண்டு. மாணவ மாணவிகளுக்கு உற்றதோர் சூழ்நிலை உண்டு. மற்றவர்களும் தாம் செய்யும் தொழில்களில் மேன்மை அடைவர். இராசி நாதன் ஐப்பசி

## மகர ராசி :

மண் காரகனாகிய அங்காரகன் நிலம் அல்லது வீட்டுமனையொன்றை வாங்க அருள் புரிவார். குரு பார்வை ஐப்பசி வரை இராசி நாதனுக்கு உள்ளதால் கெடுபலன்களை இரண்டாம் வீட்டில் சனி குறைக்கலாம். $7\frac{1}{2}$ சனியில் ஐந்தாண்டுகளைக் கழித்து விட்டதால் குடும்பச்சனி கும்பத்தில் இருந்து உங்களுக்குக் கொடுக்க வேண்டியவராகிறார். எனவே எந்தவித ஏற்றத்தாழ்வையும் எதிர்கொள்ளும் ஆற்றல் உங்களுக்கு ஏற்படும். மற்றபடி வைகாசி முதல் புரட்டாசிவரை ஏற்படும் கிரக சஞ்சலங்களினால் கூடுதலான நன்மையே உண்டு. ஐப்பசிக்குப் பிறகு இலாபகரமான சூழ்நிலை உருவாகும். அரசுப் பணியாளரும், கலைஞர்களும், கறுப்புக்கல், இரும்பு வியாபாரிகளும் ஏற்றம் பெறுவர். புரட்டாசி முதல் மார்கழி வரை உள்ள கால கட்டத்தில் வீட்டில் சில பிரச்னைகள் தோன்றி தாம்பத்திய உறவில்

## PENSIONERS' PET DEPOSIT SCHEME

| Period | 1 year | 2 years | 3 years |
|---|---|---|---|
| Interest | 20% | 20.5% | 21% |

**Minimum Deposit Amount Rs. 12,500/-**

## PPD CUMULATIVE SCHEME

| | One Year (Rs.) | Two Years (Rs.) | Three Years (Rs.) |
|---|---|---|---|
| Rs. 5,000/- | 6,065/- | 7,435/- | 9,200/- |
| Rs.10,000/- | 12,150/- | 14,890/- | 18,400/- |

## SAVINGS DEPOSIT SCHEME

**Highest ever 12 % interest**

Interest calculated on the minimum balance maintained between 6th & 25th, and credited once in six months. Account can be operated between 9.00 a.m. to 5.30 p.m.

## INSTANT GOLD JEWEL LOANS

Offered @ Rs. **3,100/-** per ten grams.
Jewel Loans also offered at all our branches from 9 am - 4 pm



## MORTGAGE LOANS

Offered against completed flats and other city properties.
Quick processing & Immediate disbursement

Tachyon/ABFL/108/94



LIMITED

# Alwarpet Benefit Fund Limited

(A Govt. of India approved **Nidhi** Company)

**Corporate Office**: **Alwarpet:** 43-B, C.P. Ramaswamy Road, (Opp. State Bank of Mysore), Madras –600018. Ph: 499 4809 • **Branches - Adayar:** Gokul Homes, (Near Adayar Signal), 2, Sardar Patel Road, Madras – 600 020 • **Nanganallur:** 19, 4th Main Road, (6th Main Corner), Madras – 600 061 • **Ashok Nagar:** 13-E, 10th Avenue, Pillar Apartments, Madras – 600 083 • **Anna Nagar:** AA-147, III Avenue, (Near Round Tana), Madras - 600 040 • **George Town:** S.M.Plaza, 45, Armenian Street, (Near Hotel Palimar), Madras - 600 001 • **Tambaram:** 3-D, Mudichur Road, (Opp. LNC Cloth Store), Madras - 600 045 * **Pondicherry:** 52, Mission Street, (Above Kalki Boutique), Pondicherry - 625 001.

Transaction with Shareholders only

சிறு சங்கடங்களைத் தரலாம். ஆயினும், அதேசமயம் புதன் உச்சமடையும் புரட்டாசி முதல் 30 நாட்கள் மாணவ மாணவிகளுக்கு ஏற்றம் தரும் காலமாக அமையும். சூரிய நீச்சம் விளையாட்டுத் துறையினருக்கு ஐப்பசி மாதத்தில் சிறு தோல்வியைத் தரலாம். எந்தத் துறையினரும் புது முயற்சிகளை இந்த நாட்களில் ஒத்திப் போடுவது நல்லது. வைகாசி, ஆனி, ஆவணி மாதங்களில் அங்காரகனால் கோர்ட் விவகாரங்கள் மற்றும் அரசுப் பணியாளர் மீது உள்ள வழக்குகள் ஆகியவை உங்களுக்குச் சாதகமாக அமையும். சனீஸ்வர ஸ்தோத்திரம் கூறுவதும், காகத்திற்குத் தண்ணீரும் அன்னமும் இடுதலும் சிறந்த பரிகாரம் எனலாம்.

## கும்ப ராசி :

கேது மேஷத்திற்கு ஆண்டின் ஆரம்ப காலத்திலேயே வந்து நன்மை புரிய இருப்பதால், இதை நல்லதொரு ஆண்டு என்றே கூறவேண்டும். இராசிநாதன் ஆட்சியிலும் அதே சமயம் குருவின் பார்வையை அவர் பெறுவதும் அக்டோபர் வரை நீடிக்கிறது. எனவே அதற்குள் சுக்கிர, செவ்வாய், சூரிய கிரகங்களினால் வீட்டில் சுப நிகழ்ச்சி ஒன்று நடக்க இருக்கிறது. தொழிலை விரிவுபடுத்தலாம். அல்லது புதுத் தொழில்களும் ஆரம்பிக்கலாம். பொதுவாக அனுபவத்தில் பார்க்கும்போது இரண்டாம் பார்யாய $7^1/_2$ சனி நடக்கும் காலத்தில் கன்னியர்களுக்கும், காளையர்களுக்கும் தடைப்பட்ட திருமணம் நடந்து விடும் எனலாம். அதற்குக் குரு பார்வையும் அவசியம். இந்நிலை தற்போது காணப்படுவதால் மேற்படி திருமணங்கள் நடக்க வாய்ப்பு அதிகம் உள்ளது. வருட ஆரம்பத்தில் செவ்வாய் வீட்டுமனை ஒன்று வாங்கும் வாய்ப்பைத் தரலாம். பயன்படுத்திக் கொள்ளுங்கள். இந்த ஆண்டில் நல்லெண்ணெய் வியாபாரிகளும் , நறுமணப் பொருள் தயாரிப்பாளர்களும் கூடுதலான ஆதாயத்தைப் பெறுவார்கள். வருட ஆரம்பத்திலேயே புதன் இரண்டாம் இடத்தில் நீச்சம் பெறுவது சரியல்ல. இதனால் மாணவ மாணவிகள் தேர்வுக்குத் தங்களை நன்கு தயாரித்துக் கொண்டு செல்வது நல்லது. ஐப்பசியிலிருந்து குரு விருச்சிகத்திற்கு வந்து மீனராசியைப் பார்க்க இருக்கிறார். சந்திரனுக்குப் பத்தில்குரு , குருவுக்கு நாலில் சந்திரன் என்று அடையும்போது கஜகேசரியோகம் ஏற்பட வேண்டும். இந்த இராசிக் காரர்களுக்கு வைகாசி முதல் ஆனிமாதமுதல் வாரம் வரை செவ்வாயினாலும், சுக்கிரனாலும், ஆடி மாதத்தில் புதனாலும், ஆவணியில் சூரியனாலும் புரட்டாசி, ஐப்பசி, மாதங்களில் புதனாலும் தன லாபம், தொழில் அபிவிருத்தி, குடும்ப நலன்கள் ஆகியவை நன்றாக அடையும். ஆனால் கார்த்திகை முதல் மார்கழி வரை சுக்கிரன் நீச்சமடைவதால் குடும்பத்தில் குழப்பங்களும் தோன்றலாம். அதே சுக்கிரன் 11ல் ஆட்சி அடையும் புரட்டாசி ஐப்பசி மாதங் களில் மீண்டும் குடும்பத்தில் மன அமைதியும் மகிழ்ச்சியும் நிலவும். மொத்தத்தில் இந்த இராசிக்காரர்களுக்கு இந்த ஆண்டு சென்ற ஆண்டைவிட கூடுதலான நன்மைக்கு இடமுண்டு - சனீஸ்வர ஸ்தோத்திரம், கோளறு பதிகம் இவைகளைப் படிப்பதும், நவக்கிரக ஹோமம் செய்வதும் நல்லது.

## மீன ராசி :

அஷ்டமத்துக் குருவும், விரயச் சனியும் ஐப்பசிவரை ஏக்கத்தையும், தேக்கத்தையும் தரலாம். அத்துடன் பொருளாதார நெருக்கடி

நாங்கள் எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, திடீரென என் நாத்தனார் ஊரிலிருந்து வந்துவிட்டார். 'என்ன சமையல்! ஒரே வாசனை?' என்றார். நான் தேங்காய்த் துவையல் என்றதும், ''எனக்கு ரொம்பப் பிடிக்கும். தட்டுல போட்டு வை'' என்று சொல்லிவிட்டு முகம் அலம்பச் சென்றார். தேங்காய்த் துவையலோ காலி. என்ன செய்வது? துருவி, சாமான்களை வறுத்து, பம்பிங் ஸ்டவ் மூட்டி... அரைமணி நேரமாவது ஆகிவிடும். சட்டென யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன். வறுத்த தேங்காய்ப் பொடி கைவசம் இருக்கும். அத்துடன் இட்லி மிளகாய்ப் பொடி, புளி சேர்த்து அம்மியில் இரண்டு இழுப்பு இழுத்து அரைத்து துவையலைத் தயார் செய்து விட்டேன். அதைத் தின்னும்போது நாக்கைச் சப்புக் கொட்டியபடி 'பிரமாதம்' என்றார். நாத்தனார் வாயால் சொல்வது என்றால் சும்மாவா?

– கி. மஞ்சுளா



> சுற்றுலா போகும் போது பணத்தை நன்கு பாதுகாப்பாக வைத்துக் கொள்ளவும். ஒரே இடத்தில் வைக்காமல் இரண்டு மூன்று இடமாகப் பிரித்து வைத்துக் கொள்ளவும். ஒன்று இல்லையென்றாலும் மற்றொன்றை வைத்துச் சமாளிக்கலாம்.

யும் ஏற்படலாம். அதனால் ஐப்பசிவரை எதிலும், எப்பொழுதும் சொல்லாலும், செய்கையாலும் அமைதிகாத்திட வேண்டிய அவசியம். இல்லையெனில் சொற்குற்றம், நாணயக் குறைவு இவை ஏற்பட வாய்ப்பு உள்ளது. ஐப்பசிக்குப் பிறகு சற்று நல்ல நிலை ஏற்படும், எனினும் ரிஷபகேதுவால் நன்மை உண்டு. சுக்கிரன் 7ல் கல்வியில் நீச்சமடையும் காலத்தைத் தவிர மற்ற மாதங்களில் இந்த இராசிக் காரர்களுக்குக் கூடுதலான நன்மைகளையே செய்வார். எனவே இராசிநாதன் மட்டுமே ஐப்பசி வரை பலவீனமடைந்தாலும் ஆட்சியில் இருக்கும் சனியும் கெடுபலனைத் தர நியாயமில்லை. எல்லா கிரகங்களும் அனுகூலமான நிலையிலிருக்க, இந்த இராசிக்காரர்கள் கணபதி, நவக்கிரகஹோமம் செய்வது நல்லது. இராகு 8ம் இடத்தில் இருப்பதால் இராகுவிற்கு அர்ச்சனை செய்யலாம். குறிப்பாக கிருத்திகை , ரோகிணி மிருகசீரிஷ நட்சத்திரங்களில் சந்திரன் உச்சமடையும் போதும், புனர் பூசம், ஆயில்ய நட்சத்திரங்களில் ஆட்சியில் இருக்கும்போதும் புது முயற்சிகளை ஆரம்பிப்பதால் நன்மை கூடுதலாக இருக்கும். இந்த ஆண்டு ஏற்ற இறக்கதைத் தரும் நிலைதான் தெரிகிறது. ஐப்பசி, கார்த்திகை, மாதங்களில் குழந்தைகளின் கல்வியில் கவனம் தேவை. அகலக் கால் வைக்காமல் அன்றாடப் பணிகளை பக்தி நியமித்துடன் செய்து வந்தால் எந்தக் கெடுதலும் வராது. குருவுக்காக 16 வியாழக் கிழமை தினந்தோறும் ஒரு அகல் விளக்கை ஏற்றுவதுடன், கல் பதிக்காத தங்க மோதிரம் அல்லது 1 குண்டுமணிக்கும் குறைவான தங்கத் தகடு இவைகளில் ஏதாவது ஒன்றை அந்த அகலில் எண்ணெயில் போட்டு வைத்திருந்து, 16 நாட்களுக்குப் பிறகு அதைத் தமது உபயோகத்திற்காக மீண்டும் எடுத்துக் கொள்ளலாம். ஸ்வர்ண விளக்கேற்றுவதற்கு இது சமமாகும். அதனால் ஆண்டு பூராவும் எதிலும் நன்மையே ஏற்படும். இது எத்துறையினர்க்கும் எப்பொழுதும் பொருந்தும்.

## பொதுக் குறிப்பு:

பவ வருட வெண்பாவில் காணப்படும் கடைசி வரிக்கு ஏற்ப குடும்பத்தில் குதூகலமும் பொருளாதார நிறைவும் ஏற்பட அவரவர்கள் வீட்டில் 16 வெள்ளிக் கிழமைகளில் வாரம் ஒன்றுக்கு ஒவ்வொரு விளக்காகச் சேர்த்து நெய் அல்லது நல்லெண்ணெய் அகல் விளக்குகளை ஏற்றி வந்து 16வது வெள்ளிக் கிழமை இரண்டு சுமங்கலிகளுக்கும், திருமணமாகாத கன்னிப் பெண்கள் இருவருக்கும் ரவிக்கை துணி ஒன்றை பழம், தேங்காய், தாம்பூலத்துடன் வழங்கினால் உங்கள் குடும்பத்தில் தடைபடும் எந்த நிகழ்ச்சியும் தடை நீங்கி நன்கு நடக்கும். இது எல்லா விஷயத்திற்கும், எவர்க்கும் பொருந்தும். முதல் வெள்ளி 1விளக்கு எனில் 2வது வெள்ளி 2 , மூன்றாவது வெள்ளி 3 என 16வது வெள்ளி 16 விளக்குகள் ஏற்றவேண்டும். இதை ஆரம்பிப்பதற்கு முன் உங்கள் குல தெய்வம், இஷ்ட தெய்வம் இவர்களை நினைத்து, உங்கள் கோரிக்கைகளையும் நினைவில் கொண்டு ஏற்றுவது நல்லது. இவ்வாறு செய்வது வீட்டுக்கு மட்டுமல்ல உலக க்ஷேமத்திற்கே நல்லது. இந்தப் பரிகாரத்திற்கு ஈடுவேறு எதுவுமில்லை எனலாம். அருட்பெரும் ஜோதி தனிப் பெரும் கருணைக்கு முன்னால் நமது துன்பங்கள் கரைந்து, நம்பிக்கை ஒளி வீச ஆரம்பித்து உயர் நிலைக்கு கொண்டு செல்லும். செய்துதான் பாருங்களேன். ஆரம்பித்து இடையில் தீபம் ஏற்றியவர்களுக்கு எந்தக் காரணத்தாலோ முடியவில்லை எனில் வேறு ஆண்களோ, பெண்களோ, குழந்தைகளோ கூட அதைத் தொடர்ந்து செய்யலாம். அனைவருக்கும் சகல சௌபாக்கியங்களும் இந்த பவ ஆண்டில் ஏற்பட இறைவன் அருள்வாராக.

– ஜெயலட்சுமி கிருஷ்ணன்

121 ஆண்டுகளாக

சேவை செய்து வரும்

நிதி நிறுவனம்



துவக்கம் 1872

Phone : 71099
71230

# தி மயிலாப்பூர் இந்து சாசுவத நிதி

(அளவையுள்ளது)

பதிவு அலுவலகம் (தலைமை அலுவலகம்)

நெ.32 & 33 தெற்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-600 004.

வேலை நேரம்: காலை 9 மணி முதல் 12 மணி வரை.
பிற்பகல் 2 மணி முதல் 5 மணி வரை.

வார விடுமுறை : புதன் கிழமை.

கிளைகள் :- பார்க்டவுன், வண்ணாரப்பேட்டை, சைதாப்பேட்டை, அமைந்தகரை, அடையாறு, கோடம்பாக்கம், அண்ணாநகர், பெரம்பூர்.

## பிக்செட் டெபாசிட்டுகள்

கீழ்க்குறிப்பிட்ட வட்டி விகிதங்களில் பங்குதாரர்களிடமிருந்து ஏற்றுக் கொள்ளப்படும்.

3மாதங்கள் 12% 6 மாதங்கள் 14% 1ஆண்டு 15%
2 ஆண்டுகள் 16% 3ஆண்டுகள் 17%

## பிக்செட் டெபாசிட் மறுமுதலீட்டுத் திட்டம்

50 மாதங்களிலேயே இரட்டிப்பாகிறது.

| டெபாசிட் தொகை | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 50 மாதங்கள் | 78 மாதங்கள் | 120 மாதங்கள் | 180 மாதங்கள் |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 500 | 585 | 700 | 830 | 1,010 | 1,500 | 2 ,710 | 6,320 |
| ரூ. 10,000 | 11,700 | 14,000 | 16,600 | 20,200 | 30,000 | 54,200 | 1,26,400 |

## ரெக்கரிங் டெபாசிட்டுகள்

முதிர்வு பெறும்போது டெபாசிட்தாரர்கள் பெறும் தொகை

| மாதாந்திர டெபாசிட் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் | 72 மாதங்கள் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 10 | 130 | 280 | 456 | 650 | 860 | 1,100 |
| ரூ. 100 | 1,300 | 2,800 | 4,560 | 6,500 | 8,600 | 11,000 |
| ரூ. 500 | 6,500 | 14,000 | 22,800 | 32,500 | 43,000 | 55,000 |

## பணப்பத்திரங்கள்

ரூ.728/-முதலீடு செய்தால் 2 ஆண்டுகளுக்குப் பின் ரூ.1,000/- திரும்பப் பெறலாம்.

## சேவிங்ஸ் டெபாசிட்டுகள்

சேமிப்பு டெபாசிட்டுக்கு 9 சதவிகிதம் வட்டி அளிக்கப்படும்.

**நகைக் கடன் சவரனுக்கு ரூ.2400/- கடனுக்கு R.D. இல்லை**

**வட்டி ரூ.100/-க்கு ரூ.1-75 மட்டுமே.**

திரு J. ஜெகன்னாதன்,
உப தலைவர்

திரு R. சம்பந்தம்
ஆக்டிங் செயலாளர்

திரு S. கிருத்திவாசன்
தலைவர்

(பங்குதாரர்களுக்கு மட்டும்)

(பங்கின் விலை ரூ.1/- மட்டும்)

# உங்கள் கனவின் நிறைவு அவன் கண்களில்
# எதிர்காலம் அவனது உங்கள் கைகளில்



# குழந்தைகள்
# பரிசு வளரும் நிதி.

உங்கள் அன்பைப்போலவே அது வளர்கிறது,
வளர்கிறது, வளர்ந்து கொண்டே போகிறது.

14% டிவிடென்ட்.
3 வருடங்களுக்கு
ஒருமுறை
போனஸ்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் மேலான எதிர்காலத்திற்கென

1994-95ன் பட்ஜெட் சிபாரிசின்படி, ஊனமுற்ற குழந்தைகளுக்காக செய்யப்பட்ட முதலீடுகளிலிருந்து பெறும் வருமானத்தை, பெற்றோர்களின் வருமானத்துடன் இணைக்கப்பட மாட்டாது.

Sista's-UTI-442/93 A TAM R

✱ கமலா செல்வராஜ்





# மார்ச் 8...!

**ஒவ்வொரு வருடமும் மார்ச் 8 என்பது உலகம் முழுக்க பெண்கள் தினமாக அனுசரிக்கப்படுகிறது. தமிழகத்திலும் எளிமையாகக் கொண்டாடப்படும். ஆனால் இம் முறை என்னவோ தெரியவில்லை, தமிழகம் முழுக்க மார்ச் 8 னை ஒட்டி பல் வேறு விழாக்கள் கொண்டாடப் பட்டன. உதாரணத்திற்குச் சில...**

தலையாய இடத்தைப் பெற்றது புனித அன்னை தெரசா கலந்து கொண்ட நிகழ்ச்சி. தமிழக அரசின் சமூகநலத்துறை சார்பில் முதல்வர் ஜெயலலிதா பங்கு பெற்ற இந்நிகழ்ச்சியில் பெண்களின் நலன்களைப் பற்றிப் பேசப் பட்டது. அன்னை தெரசா பேசும்போது,

''தாய் அன்பு கிடைக்காத குழந்தைகளே கெட்டவர்களாக சமூக விரோதிகளாக மாறுகிறார்கள். அன்னை என்பவள் அன்பின் ஆதார மாக விளங்க வேண்டும். கருக்கலைப்பு கொலைக்குச் சமமானது. இயற்கையான குடும்பக்கட்டுப்பாடே தம்பதியருக்குச் சிறந்தது'' என்றார்.

முதல்வர் பேசும்போது, '' பல நூற்றாண்டுகளாக மாறாமலும், நிபந்தனையாலும் பெண்களின் கவுரவம் பாதிக்கப்பட்டு இருப்பதுதான் உண்மையான நிலை. சிலர் இதிலிருந்து தப்பிக்கிறார்கள் என்றால் அதற்குச் சந்தர்ப்பம்தான் காரணமே தவிர , அவர்களின் தேர்வுதான் என்று சொல்ல முடியாத அவல நிலை. இந்த நிலை மாறி பெண்கள் எந்த வாழ்க்கையை விரும்புகிறார்களோ அதை ஏதோ சந்தர்ப்பவசமாக தீர்மானிக்காமல் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெற வேண்டும் என்பதையே இந்த அரசு விரும்புகிறது'' என்றார்.

முதல்வர் எழுதிய பெண்கள் நலன் பற்றிய புத்தகம் ஒன்றினை அன்னை தெரசா வெளியிட்டார்.

## மற்றவையெல்லாம் ஆடவர் தினமா?

கல்லூரி மாணவிகளிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையில் 'வெற்றிப் பாதையில் மகளிர்' என்ற தலைப்பில் வட சென்னை ரோட்டரி சங்கம், டாக்டர் தர்மாம்பாள் அரசினர் தொழில் நுட்பப் பயிலகம், கனடா - இந்தியா அமைப்பு ரீதியிலான கூட்டுறவுத் திட்டம் இணைந்து சென்னையில் பெண்கள் பாலிடெக்னிக் கல்லூரியில் விழா நடத்தியது.

அப்போலோ மருத்துவமனை ரேகா ஷெட்டி, ஜோன்டா இயக்குனர் மேஜார்ஜ், கல்

லூரி முதல்வர் பாபை, பொன்மணி வைர முத்து, லக்ஷ்மி வெங்கட்ராமன், டாக்டர் ரேவதி ஆனந்த், விஜயா பாலகிருஷ்ணன், வழக்கறிஞர் சுதா ஆகியோர் பேசினர்.

''வாய்ப்பு நம்மைத் தேடிவராது, நாம் தான் வாய்ப்பைத் தேடிப் போக வேண்டும்'' என்றார் ரேகா. ''மார்ச் 8 மட்டும்தான் மகளிர் தினமா? மற்றவையெல்லாம் ஆடவர் தினமா?'' என்றார் பொன்மணி.

''பெண் சிசுக்கள் கொலை அதிகமாக உள்ள இந்நாளில் இத்தினம் அஞ்சலி தினமாக வேண்டும்'' என ஆவேசப்பட்டார் ரேவதி.

சுயதொழிலில் முன்னேறி இன்று கடின உழைப்புடன் வாழ்க்கைப் பாதையில் வெற்றி நடை போடும் பெண் தொழில் முனைவோ ரின் சாதனைகளை உணர்த்தும் கண்காட்சியை யும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

## சேலத்தில் சக்தி-94

கற்பில் சிறந்தவர் கண்ணகியா, மாத வியா... பெண்கள் வேலைக்குப் போகலாமா, வேண்டாமா..இந்த மாதிரி விஷயங்களைத் தாண்டி இன்று வெகுதூரம் வந்து விட்டோம். பல துறைகளிலும் இன்று பெண்கள் காலூன்றி விட்டார்கள். தங்கள் பணிகளிலே வெற்றிக் கொடி நாட்டுகிறார்கள். அதே சமயம் கணவர், குழந்தைகள் என அன்பான, குடும்பத்திலும் பொருந்தும் போதுதான் சமூகம் தன் விழுது களை விழாமல் பாதுகாக்க முடியும். இரண் டையுமே பெண்கள் தன் கண்களாகப் போற்ற வேண்டும். இதை ஆடவரும், சமூகமும் புரிந்து கொள்ள வேண்டும். எழுச்சி பெற்ற இன்றைய பெண்ணை வாழ்த்தி, ஊக்குவித்து, அவளைத் தன் இனிய தோழியாக இணைத்துக் கொள்ள வேண்டும். யாரும் யாருக்கும் எதிரியல்ல என வலியுறுத்தவே சேலத்தில் சக்தி '94 கருத்தரங்கு நடந்தது.

சேலம் தியாகராய பாலிடெக்னிக் கல்லூரி யில் கனடா-இந்திய கூட்டுறவுத்திட்ட அமைப் பும், கோல்டன் ஸ்கொயர்ஸ் பெண்கள் அசோசியேஷனும் இணைந்து இவ்விழா வினை நடத்தியது.

சென்னையில் இருந்து மங்கையர் மலர் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ், டாக்டர் கமலா செல்வராஜ், எழுத்தாளர் உஷா சுப்ரமணியம், தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகளைத் தயாரிக் கும் லக்ஷ்மி ஸ்ரீனிவாசன், சித்த மருத்துவமனை நடத்தும் ஸ்நேகலதா, தொழில் மற்றும் வணிகத் துறை சிறப்பு அதிகாரி நடராஜன் ஆகி யோர் பங்கு பெற்றனர். பெங்களூரிலிருந்து தொழிலதிபர் சீதா வள்ளியப்பா, சேலம் இன்ஜினியர் குணவர்த்தினி கார்த்திகேயன், கல்வியாளர் மீனா சேது கலந்து கொண்டனர்.

''தொழில் துறையில் பல சாதனைகளைச் செய்யும் பெண் குடும்பத்தையும் வெற்றி பெற்றதாக அமைத்துக் கொள்ள வேண்டும். இன்றைய பிரசாரங்களை மனதில் கொண்டு ஆண் என்றாலே சந்தேகமாக பார்க்க வேண் டாம். ஆனால் எல்லை மீறினால் காளியாக மாறி அதே பெண் தண்டிக்கலாம்'' என்றார் மஞ்சுளா.

* முதல்வர், அன்னை தெரசா...



''நான் மருத்துவத் துறையில் போராடி இன்று உயர்ந்த நிலைக்கு வந்ததற்குக் காரணம் விடாமுயற்சி, தொழிலில் ஒருமுகப்பட்ட கவனம். கற்கும் வயதில் வேறு பக்கம் திசை திரும்பவே திரும்பாதீர்கள்'' என்றார் கமலா.

''சினிமாவிலும், பொழுது போக்கு அம்சங்களிலும் பெண்ணை கவர்ச்சிப் பொருளாகப் பார்த்துவிட்டு நிஜத்தில் தன் எதிரே அறிவார்ந்த திறமை மிகுந்த பெண்ணின் விசுவரூபத்தைப் பார்க்கும் போது இன்றைய இளைஞன் திகைக்கிறான். அதனால்தான் பல பிரச்னைகள் வருகின்றன'' என்றார் உஷா.

''புகைப் படக்காரர் போன்ற புதிய தொழில்களை ஏற்க பெண்கள் தயங்கக் கூடாது. நல்ல வருமானம் உள்ள தொழில் வீடியோ போன்றவை'' என்றார் லக்ஷ்மி. ''தாய்வீட்டுச் சீதனமாகப் பெண் கொண்டு வரவேண்டியது நல்ல அறிவு, பண்பு, எதையும் சிந்தித்துச் செயல்படும் துணிவே'' என்றார் மீனா.

சேர்மன் சொக்கலிங்கம் தலைமை தாங்க, முதல்வர் தீரஜ்லால் வரவேற்புரை கூற, ஸ்ரீமதி ஜெகன்னாதன் பெண்கள் சங்கத்தின் சார்பில் பேசினார். மத்தியான்னம் நேருக்கு நேர் நிகழ்ச்சியில் கல்லூரி மாணவிகள் அருமையான கேள்விகளைக் கேட்டனர். திருமதி. அலமேலு சம்பத் இந்நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கினார்.

தொகுப்பு: ராஜு



✱ சென்னை

**பெ**ண்கள் தினத்தைச் சற்று வித்தியாசமாகக் கொண்டாடியது சென்னையில் உள்ள அமெரிக்க கன்சலேட் அலுவலகம். வெவ்வேறு சமூக நிலைகளில் இன்றைய பெண்களின் நிலை, அவர்களுக்குச் சமத்துவம் கிடைத்திட எந்தெந்த வழிமுறைகளைக் கையாளலாம் என்பதனைப் பற்றி அறிய 'World-Net Dialogue' ஏற்பாடு செய்திருந்தது. இந்நிகழ்ச்சியில் உரையாடியவர்கள்: சென்னையிலிருந்து திருமதி சீதா பத்ரிநாத் (அட்வகேட், சென்னை உயர்நீதி மன்றம்), திருமதி சாரா மாத்யூ (நிகழ்ச்சி நிர்வாகி பெண்கள் சங்கம்) இவர்களின் கேள்விகளுக்கு வாஷிங்டனிலிருந்து பதில் அளித்தவர், அமெரிக்க ஜனாதிபதி கிளிண்டனால் 1993ல் பீஸ்-கார்ப்ஸ் (Peace-Corps) ற்குத் தலைவராக நியமிக்கப்பட்ட செல்வி காரல் பாலமி. உலகம் முழுவதிலுமுள்ள பெண்களின் நிலை பற்றி ஒருவருக்கொருவர் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். உதாரணத்திற்கு...

**சீதா பத்ரிநாத்:** இந்தியாவும், அமெரிக்காவும் உலக அரங்கில் மிகப் பெரிய ஜனநாயக நாடுகளாக திகழ்கின்றன. இருந்தும் அரசியலிலும் சரி, பொருளாதாரத்திலும் சரி ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் பாகுபடுத்தப்பட்ட சட்ட திட்டங்கள் உள்ளனவே. இந்த நிலையை இந்தியாவில் உள்ள பெண்கள் பலர் இன்னும் அறியவே இல்லை. இதைத் தவிர்க்க எத்தகைய பொது வழிமுறைகளை நீங்கள் கடைபிடித்தீர்கள்?

**காரல் பாலமி:** சட்டத்தில் இதுவரை நாங்கள் போராடி பெற்ற மாற்றங்கள் பெண்களைப் பொறுத்தவரை ஓரளவு வரவேற்கத் தக்க முன்னேற்றங்களை ஏற்படுத்தியுள்ளன. இன்றைக்கு, அமெரிக்க சட்டசபையிலும், நீதிமன்றத்திலும் பெண் உறுப்பினர்கள் அதிகமாகிக் கொண்டு வருகிறார்கள். பெண்களுக்காகப் போராடும் சங்கங்களின் ஒருங்கிணைந்த திட்டங்கள் இந்த முன்னேற்றத்திற்குப் பெரும் பாலும் காரணம் என்று சொல்வேன். ஏன் அமெரிக்க ஜனாதிபதி பதவியினை ஒரு பெண் வகித்திடும் நாள் அதிக தொலைவில் இல்லை என்றே நான் கூறுவேன்.

**சாரா மாத்யூ:** மக்கள் தொகை அதிகரிப்பதிலும், அதனைக் குறைப்பதிலும் பெண்களின் பங்கு கணிசமானது என்று இங்குள்ள அரசாங்கம் நினைக்கிறது. அது மட்டுமல்ல இரண்டு குழந்தைகளுக்கு மேல் உள்ள தாய்மார்கள் கருவுற்றால், அவர்களுக்கு இலவச பிரசவ வசதியம், விடுப்பு போன்றவையாவும் கொடுக்கப் படுவதில்லை. இது பற்றி உங்கள் கருத்து...

**காரல் பாலமி:** அவ்வகையில் அமெரிக்கா மிகவும் முற்போக்குவாதி. மேலும் பெரும்பான்மையான நாடுகளில் 'கருக் கலைப்பு' உரிமை பெண்களையே சார்ந்திருக்கிறது. பள்ளி செல்லும் மாணவி கருதரித்தால் பள்ளியிலிருந்து அவள் விலக்கப்படுவாள். தெருவோரம் விபசாரத்தில் ஈடுபடும் பெண்கள் ஜெயில் தண்டனைக்குள்ளாவார்கள். இவை அமெரிக்கச் சட்டம். ஆனால் இத்தகைய நிலைக்கு ஆளாக்கிய ஆண்களுக்கு தண்டனை தர சட்டம் இன்னும் இயற்றப்படவில்லை.

தொகுப்பு: கீதாமோகன்

# படிக்க வேண்டாமோ?

-உஷா ஸ்ரீகுமார்

"திஸ் ஈஸ் டு மச்... வயசுல பெரியவர்தான். அதுக்காக எதுல தலையிடற துங்கற வரைமுறை இல்லையா? நாளைக்கு என் பிள்ளை என்னை எப்படி மதிப்பான்?"

மைத்ரேயி என்னிடம் பொரிந்து கொண்டிருந்தாள்.

வேறொன்றுமில்லை - எதிர் பிளாட் பத்மநாபன் - எங்கள் 'கஷ்யபா அபார்ட் மெண்ட்ஸ்' வாசிகளுக்குப் பத்து மாமா, இவள் மன்த்லி டெஸ்டில் கணக்குப் பாடத்தில் ஏழு மார்க் வாங்கி வந்த என் சீமந்தப் புத்திரன் விக்ரமின் முதுகில் தனி ஆவர்த்தனம் நடத்தியபடி லட்சார்ச்சனை செய்து கொண்டிருந்தபோது - அழைப்பின்றி உள்ளே நுழைந்து இவளை அதட்டி குறுக்கே விழுந்து குழந்தையைக் காப்பாற்றி,

"நீ வாடா கண்ணா, உனக்குச் சொல்லிக் குடுத்தவா சரியா சொல்லிக் குடுத்திருக்க மாட்டா. நான் 'டவுட்செ'ல்லாம் க்ளியர் பண்றேன். மாமி புளி அவல் பண்றா. வா... சாப்பிட்டுட்டு படிப்போம்" என்றபடி அழும் குழந்தையைத் தன் வீட்டிற்குக் கூட்டிச் சென்று விட்டார். மைத்ரேயியின் ஈகோவில் காயம் பட்டு விட்டது. எதிர்த்துப் பேச முடியவில்லை. வயதில் பெரியவர். அடக்கப்பட்ட ஆத்திரத்துக்கு நான் வடிகாலானேன்.

"ஃபெயிலாயிட்டா... அதுக்காக பத்து வீட்டுக்குக் கேக்கற மாதிரி கத்துவியா? குழந்தையை அடிக்கட்டா பாசாயிடுவானா?"

"ஏன் பேச மாட்டீங்க? தினமும் உட்கார்ந்து நாலு மணி நேரம் ஹோம் ஒர்க் சொல்லித் தர்றவ நான்... கணக்கு டெஸ்ட்டுக்கு முன்தினம் இருபத்தியஞ்சு 'சாம்பிள் சம்ஸ்' போட வச்சு சொல்லித் தந்தேன். ஏழு பர்சென்ட் வாங்கிட்டு கல் லுளிமங்கனாட்டமா நிக்கறான். பத்தின்டு வருமா, வராதா? இவ்வளவு மோசமாப் பண்ணிட்டு டெஸ்ட் முடிச்சுட்டு வந்து "நான் ஸ்ளைப்பிட்டேன், மம்மீ"ன்னுட்டு 'ஜூஸ்பைஸ்' ஆட ஓடினான். உங்களுக்கு எதுதான் தெரியும். ஏதோ, லேசா முதுகுல ரெண்டு வச்சுக் கேட்டதுக்கு ஊரைக் கூட்டி அழுது அரிச்சாட்டியம் பண்ணினான் தெரியுமா?"

"இப்போ குழந்தை எங்கே?"

"உள்ளே தூங்கறது."

பரிதாபமாகத் தூங்கிக் கொண்டிருந்தான். என்னைக் கொன்டிருக்கிறான். எனக்கு என்றுமே கணக்கில் தாளம்தான். "நியூ மேத்ஸ்" அன்று இருந்தால் ப்ளஸ் டூ தாண்டியிருப்பேனோ என்னவோ? அவனை அணைத்துக் கொண்டு படுத்தேன்.

இவளுக்குக் கோபம் அதிகம்தான். ஆனால் பத்து மாமா மூக்கை நுழைத்ததும் சரியென்று படவில்லை. ஆனால், இது குழந்தை விஷயம். அதனால் பரவா யில்லை. மேலும், அவர் இந்தக் காலனியே மதிக்கும் ஒரு சீனியர் சிடிசன். தண்ணீர் வரவில்லையா? பவர் சப்ளை பிரேக் டௌனா? சீனுவின் அம்மாவுக்குக் திரு திருப்பா? அழைக்காமலேயே அங்கு ஆஜ ராகி இழுத்துப் போட்டுக் கொண்டு உதவும் பரோபகாரி. கொஞ்சம் வளவளா பேச்சு அதிகம்தான் - வயசாயிற்றே... வயதான காலத்தில் மாமியுடன் தனிக்குடித்தனம். அவருடைய முக்கியமான பொழுது போக்கே ப்ளாட் குழந்தைகளின் விளை யாட்டுகளுக்கு அம்பயராக இருப்பதும்,



குழந்தைகள் சண்டையை பஞ்சாயத்துப் பண்ணுவதும்தான். யாரைக் கண்டாலும் விஷ் பண்ணுவதோடு நிறுத்தாமல் மேலே ஓரிரு வார்த்தைகள் கட்டாயம் பேசுவது அவருடைய அலாதியான குணம். ஆனால் மாமியோ வார்த்தைகளை எண்ணிப் பேசி மறந்தும் சிரித்துவிடாத தொட்டாற் சுருங்கி.

காலை நேரத்து அவசரம்.

''எக்ஸ்பிரசோட உங்க 'இந்தியா டுடே'யை எங்க வீட்டுக்குள்ளே வீசிட்டுப் போயிட்டான்,'' என்றபடி வந்தார்.

''குட்மார்னிங். வாங்க.''

''குழந்தை எழுந்துட்டானா?''

''இல்லையே....?''

''தூங்கட்டும். கோவமா எங்கிட்டே?''

''சேச்சே... என்ன நீங்க?''

''மைத்ரேயிக்குக் கோவம்தான். நிரலை... அவளும் சின்னப் பெண்தான் தானே... பாவம். டெம்பரை லூஸ் பண்ணிட்டா...''

''....''

''ஆனா அடிக்கக் கூடாதுப்பா. உனக்குத் தெரியாது. இப்படித்தான் முன்னே பிள்ளை அரைப் பரீட்சையிலே பதினாறு மார்க் வாங்கிண்டு வந்து பேந்தப் பேந்த முழிச்சுண்டு நின்னப்போ எக்கச்சக்க கோவத்தோட விளாசிட்டான் ஒரு மடையன். குறுக்கே வந்த பெண்டாட்டியையும் தள்ளிவிட்டுட்டு, பிள்ளையை மாட்டை அடிக்கிற மாதிரி அடிச்சான். பின்னே... எப்படித் திருத்தறதாம்... அடிச்சு வளர்த்தாத்தானே உருப்படும்? அவ்வளவு புத்திசாலி... வெளியில போயிட்டு வந்து ராத்திரி சாப்பிட உட்கார்ந்தபின் பிள்ளையைக் கூப்பிட்டா பதிலேயில்லை. உள்ளே இல்லை... அக்கம்பக்கம், போலீஸ் ஸ்டேஷன், கிணறு, பஸ் ஸ்டாண்டு, சொந்தக்காரங்க வீடுன்னு விழுந்தடிச்சுண்டு தேடினான். ஊஹூம்... போன குழந்தை போனவன்தான். இன்னையோட இருபத்தேழு வருஷம், நாலு மாசம், பதினேழு நாள் ஆகிறது... எப்படி இவ்வளவு கரெக்டா சொல்றேன்னு பார்க்கிறியா? அப்படி மிருகமா நடந்துண்டு குழந்தையைத் தொலைச்ச படுபாவி நான்தாம்பா... இன்னும் ஒரு ராத்திரி முழுசாத் தூங்கலே... வெங்கட் ஞாபகம் தான்... வேண்டாம்ப்பா... அன்னிக்கே மாமி மனசால செத்துட்டா... நான் இன்னும் பார்க்கிற புதுமுகத்துல எல்லாம் வெங்கட்டைத் தேடிண்டிருக்கேன்... இந்தக் குழந்தை அழ தப்போதாங்கலை...'' கண்களைத் துடைத்துக் கொண்டார்.

எனக்குப் பேச்சே எழவில்லை.

மைத்ரேயியின் விசும்பல் எங்கள் மௌனத்தில் துல்லியமாகக் கேட்டது.



# நெய்வேலியில் மகளிர்- மருத்துவர் சந்திப்பு




✱ மேடையில் மருத்துவர்கள்....

நெய்வேலிக்குள் நாங்கள் நுழையும் போதே மகிழ்ச்சியான வரவேற்பு. ''எங்கள் நகரத்திற்கு வந்து நீங்கள் இப்படி ஒரு சமூக உணர்வுடன் கூடிய விழாவை நடத்துகிறீர்கள். நாங்கள் ரொம்பப் பெருமைப்படுகிறோம்'' என்றார் நெய்வேலி நிலக்கரி சுரங்கத்தின் தலைவர் திரு. எஸ். பி. வர்மா. அவருடைய மனைவி திருமதி. வர்மா மீண்டும் மீண்டும் எங்களுக்கு எல்லா வசதிகளும் அளிக்கப்பட்டுள்ளனவா, தங்கும் அறைகள் சௌகர்யமாக உள்ளனவா, வேறு ஏதேனும் வசதிகள் வேண்டுமா எனத் திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டிருந்தார். என்ன ஒரு விருந்தோம்பல் பண்பு! அயல்நாட்டுப் பெண்ணான அவர் இந்தியப் பெண்களைப் பற்றி நிறைய தெரிந்து வைத்திருக்கிறார்.

''எனக்கு ஹிந்தி தெரியும். அதனால் மற்ற இடங்களில் பெண்களோடு நிறைய பேசுவேன். இங்கே தமிழ் தெரியாததால் பேச முடியவில்லை. கூடிய சீக்கிரம் தமிழ் பேசக் கற்றுக் கொள்ளப் போகிறேன்'' என்றார் ஆர்வத்தோடு.

என். எல். சி. டைரக்டர்களில் ஒருவரான திரு. சென்குப்தாவின் மனைவி திருமதி. சென்குப்தா நெய்வேலி பெண்களிடையே மிகப் பிரபலமானவர். பெண்கள் சங்கத்தினை ஆர்வத்தோடு வளர்த்து வருபவர். அந்தச் சங்கத்தின் பல சாதனைகளுக்கும் உறுதுணையாக நிற்பவர். முதல்நாள் அவரும், திருமதி ராஜலட்சுமியும் சேர்ந்து அவர்களுடைய உறுப்பினர்களை அழைத்து என்னை அவர்களிடையே பேசச் சொன்னார்கள். தனித் தனித் தீவுகள் போல உள்ள நெய்வேலி வீடுகளிலுள்ள பெண்கள் ஒன்றுசேர்ந்து உபயோகமாக நிறைய செய்யலாம் என்று நான் சொன்னதை ஆர்வமாக வரவேற்றார் திருமதி. சென் குப்தா.

மறுநாள் பத்து மணிக்கு 'மகளிர் - மருத்துவர் சந்திப்பு' திருமதி வர்மா குத்து விளக்கு ஏற்றி வைக்க இனிமையாகத் தொடங்கியது. வழக்கம்போல ஹால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. இவர்களுக்கெல்லாம் நான் சரியாக இடம் அமைத்துக் கொடுக்க வேண்டுமே என தவித்தார் பிளாக் - 20 ஆடிட்டோரியத்தின் பொறுப்பாளர் மேஜர் நாராயணமூர்த்தி.

அடுத்ததாக மருத்துவர் - மகளிர் சந்திப்பு. தமிழ்நாடு மருத்துவமனையில்

## "நாங்கள் மிகவும் பெருமைப் - படுகிறோம்!"



✱ கூட்டத்தில் ஒரு பகுதி....

இருந்து வந்திருந்த டாக்டர்கள் பெலார மின், மனோகர் நல்லதம்பி, நந்தகுமார், வசந்தி, உஷா ஸ்ரீராம், நெய்வேலி மருத்துவ மனை தலைமை மருத்துவர் டாக்டர் சச்சிதா னந்தம், டாக்டர் ஜனார்த்தனம் அனைவரும் தத்தமது துறையில் தங்களுடைய அனுப வங்களைச் சிறிதுநேரம் பேசினார்கள். பிறகு கேள்வி - பதில் நேரம் ஆரம்பித்தது.

நெய்வேலி வாசகிகள் 'பிடிபிடி' யென்று பிடித்ததும் டாக்டர்கள் உற்சாக மாகப் பதிலளித்ததும் காணக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. அவை களிலே சிறந்த ஒரு கேள்வி : -

''நீங்கள் எய்ட்ஸ் பற்றியெல்லாம் பேசு கிறீர்கள். ஆனால் பள்ளிகளிலே தடுப்பூசி கள் போடுகிறார்களே. அது முழுவதும் ஸ்டெரிலைஸ் செய்துதான் போடப்படு கிறதா? ஏன் இதைப் பற்றிப் பெற் றோர்களுக்கும் முன்கூட்டிச் சொல்வ தில்லை?''

''இந்தக் கேள்வியை ஒவ்வொரு பள்ளி யும் கண்டிப்பாகக் கவனிக்க வேண்டும்'' என்றார் நெய்வேலி டாக்டர் ஜனார்த்தனம். ''தடுப்பூசி போடுமுன்பு பெற்றோர்களிடம் சொல்லி விட்டால் அவர்கள் 'டிஸ்போஸி பிள் சிரிஞ்ச்' வாங்கி அனுப்பலாம். ஏனென் றால் மொத்தமாக பள்ளியில் வாங்க முடியா மல் போகலாம். என்னதான் கொதிக்க வைத்த நீரில் சிரிஞ்சைப் போட்டு மீண்டும் ஊசி யைப் பயன்படுத்தினாலும் அது முழுப் பாதுகாப்பு அளிக்கும் என்று சொல்ல முடி யாது'' என்றார்.

அதேபோல பெண்களுக்கே வருகின்ற உடல்வலி, கால்வலி, குடும்பக் கட்டுப் பாடு செய்து கொள்வதால் வரும் சிரமங்கள் ஆபரேஷன் செய்ததால் பிரச்னைகள் இரு தய நோய்கள், சர்க்கரை வியாதி எனப் பல்வேறு நுணுக்கமான கேள்விகளையும் கேட்ட னர். இதுதவிர சீட்டில் எழுதிக் கொடுத்துவிட்டு அனுப்பிய கேள்விகள் நூற்றைம்பதைத் தாண்டி விட்டது. நேரம் அதிக மாகி விட்டதால் நிறுத்தி விட்டோம்.

அடுத்ததாக பெண் களுக்கான வினாடி-வினா போட்டி. அரங்கில் நிரம் பியிருந்த அத்தனை பெண் களும் விடை எழுதினார் கள். பிறகு பள்ளி மாணவ மாணவியருக்கான வினாடி-வினா. பதினாறு

✱ சச்சிதானந்தம், வேலுசாமி, வர்மா தம்பதியினர்...





* பாலு




* முதல் பரிசு பெறும் பெண்மணி...

பள்ளிகளில் இருந்து வந்திருந்த நூற்றுக்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகள் ஏதோ பரீட்சை எழுதுவது போல அமைதியாக விடைகளை எழுதி முடித்தார்கள்.

பிறகு மதிய உணவுக்குப் பின் தனித் தனியே மருத்துவ ஆலோசனை எனச் சொன்னாலும் சொன்னோம் டாக்டர்கள் திணறி விட்டார்கள். இருதய நோய் நிபுணர் பெலாரமின், எலும்பு முறிவு சிகிச்சை நிபுணர் நந்தகுமார், பெண்கள் ஆலோசனைக்கு மொய்த்துக் கொண்ட டாக்டர் வசந்தா, டாக்டர் உஷா ஸ்ரீராம். பிறகு பேசிக் கொண்டிருக்கும்போது பெண் மருத்துவர்கள் மிகவும் வருத்தப்பட்டார்கள்.

''பாவம் இந்தப் பெண்கள். மிக அந்தரங்கமான சந்தேகங்களைக் கூட யாரிடம் கேட்பது என்று தெரியாமல் அவதிப்படுகிறார்கள். எங்களால் இப்படிப்பட்டவர்களுக்கு ஆலோசனைகளைச் சொல்ல முடிந்ததே எனச் சந்தோஷமாக இருந்தது'' என்றார்கள்.

இவைகள் ஒருபுறம் இருக்க டாக்டர் மனோகர் நல்லதம்பி மிக உபயோகமான ஃபிலிம் ஒன்றைத் திரையில் போட்டு விளக்கிக் கொண்டிருந்தார். பெண்களுக்கு வருகின்ற புற்றுநோய், எய்ட்ஸ் அபாயம் இவற்றைப் பற்றிய நல்ல விளக்கப் படங்கள்.

மிக உபயோகமாக அன்றைய நிகழ்ச்சிகள் நடந்ததற்கு முத்தாய்ப்பாக பரிசளிப்பு விழா. என். எல். சி. தலைவர் எஸ். பி. வர்மா தலைமை தாங்க, தமிழ்நாடு மருத்துவ மனையின் சேர்மன் சி. பி. வேலுசாமி இந்த நிகழ்ச்சியின் நோக்கம் நன்கு நிறைவேறியதைப் பற்றிப் பேசினார். அடுத்ததாக அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்த பரிசளிப்பு விழா.

பெண்களும், மாணவ மாணவிகளும் பரிசுகள் பெற்ற போது அரங்கு நிறைந்த கரகோஷம். பிறகு திருமண வீடு போல என். எல். சி., தமிழ்நாடு மருத்துவமனை, மங்கையர் மலர் ஒருவருக்கொருவர் நினைவுப் பரிசுகளை அளித்துக் கொண்டு மகிழ்ந்தோம்.

என். எல். சி. சேர்மன் எஸ். பி., வர்மா அருமையான உரையாற்றினார். ''என். எல். சி. ஒரு வியாபார நிறுவனமாக இருந்தாலும் சமுதாயப் பணிகளோடு எப்போதும் தன்னுடைய காலை ஸ்திரமாக ஊன்றி நிற்கிறது'' என்றார். ஒரு விழா என்றால் மிகச் சிறந்த சமூக மனப்பான்மையோடு இந்த மகளிர் மருத்துவர் சந்திப்பு நடத்தப்பட்டதையும்



* கேள்வி கேட்கும் வாசகி



* பரிசு பெறும் மாணவி



விழா பற்றிப் பேசும் மும்தாஜ்.



# T.S.S. NIDHI LTD

ESTD 1973

**THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED**

Regd. Office : 230, R. K. Mutt Road, Mylapore, Madras - 600 004. Phone : 77503.

**BRANCHES :** THIRUVANMIYUR - 112, Thiruvalluvar Salai, Madras - 600041 Phone : 410058
TONDIARPET - 667, T. H. Road, Madras - 600 081
SAIDAPET - 11, Jones Road, Saidapet, Madras - 600 015

## FIXED DEPOSIT SCHEME

| PERIOD (months) | Rate of Interest P. A. |
|---|---|
| 12 | 17% |
| 24 | 18% |
| 36 | 19% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

*(Re-Investment Plan)*

Amount of Deposit Rs. 1000/-

| PERIOD (months) | MATURITY VALUE |
|---|---|
| 12 | 1180 |
| 24 | 1425 |
| 36 | 1760 |
| 45 | 2025 |

## HIGHLIGHTS :

* Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
* Company is in 21st year of Service.
* Transaction with members only. (Rupees Two only for Membership.)
* Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
* No tax deduction at source if the fixed deposit holders submit 15H in case, for any financial year interest exceeds Rs. 2500/-
* Loan facility upto 75% on Fixed Deposit and 85% on Recurring Deposit paid-up amount.
* Pre-mature repayment facility as per terms and conditions.
* Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.

## JEWEL LOAN :

* Jewel Loan granted on Gold Ornaments at Rs. 300/- per Gram i.e. Rs. 2400/- per Sovereign (8 Grams).

* No limits * No Interest Tax * Recurring Deposit not required.

# SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19% P.A.

**Minimum Deposit Rs. 10,000/-** **Period - 12 months**

**(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS. REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)**

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| PERIOD in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Weekly Days | | Sunday | Weekly Holiday |
|---|---|---|---|---|
| | A.M. | P.M. | A.M. | |
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

| **P. S. SAMBASIVAM** | **G. KUMARAVELU** | **K. R. V. RAMANI** |
|---|---|---|
| Secretary | Vice-President | President |

தமிழ்நாடு மருத்துவமனை, மங்கையர் மலர் இரண்டும் இதில் இணைந்ததைப் பற்றியும் மனநிறைவோடு குறிப்பிட்டார்.

விழா எந்தத் தடங்கலும் இன்றி இனிதே நிறைவேறியது. முப்பது வருடங்களில் இவ்வளவு அறிவுபூர்வமான, அதே சமயம் ஜனரஞ்சகமான விழா இங்கு நடக்கவில்லை என்றார் ஒரு பெரியவர். பிளாக் - 20 ஆடிட்டோரியம் நிறைந்தது இதுதான் முதல் தடவை என்றார் மற்றொருவர்.



✱ கேள்வி கேட்கும் திருமதி வர்மா, திருமதி சென்குப்தா...

அதற்கு எத்தனை பாடு பட்டிருக்க வேண்டும்? எறும்பைப் போலச் சுறுசுறுப்பாக ஓடியாடி, பள்ளிகளுக்கு எல்லாம் ஏறி இறங்கி, சென்னைக்கும், நெய்வேலிக்கும் பாலமாக இருந்து செயல்பட்ட கல்கி, மங்கையர் மலர் ஏஜெண்ட் பாலுவின் பணியினைக் கண்டிப்பாகப் பாராட்டியே ஆக வேண்டும். அதேபோல எங்களோடு ஒத்துழைத்து இந்த நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற திரு. பண்டாரி முதலிலிருந்தே ஊக்கம் அளித்தார். சேர்மன் செகரட்டரி நாராயணனும் மூன்று பகுதியினரையும் இணைத்துப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

ஒரு நல்ல குடும்பவிழா முடிந்த மகிழ்வோடு சென்னைக்குப் புறப்பட்டோம்.

– மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : விடிவெள்ளி ஆறுமுகம்

## பெண்களுக்கான வினாடி - வினா போட்டியில் பரிசு பெற்றவர்கள் :

முதல் பரிசு : எஸ். பத்மினி

இரண்டாவது பரிசு : ஜே. டென்னிஸ் பார்பரா

மூன்றாவது பரிசு : உமா சந்திரசேகர்

ஆறுதல் பரிசு : ஹில்டா மரீனா, பத்மாநாராயணன், பி. லதாராணி, டி. கே. ராணி, காயத்ரி ரமேஷ்

## பள்ளி மாணவ, மாணவியருக்கான வினாடி - வினா பரிசுகள் :

| பெயர் | பரிசு | பள்ளியின் பெயர் |
|---|---|---|
| ஏ. செந்தில்குமார் | முதல் பரிசு | செவன்த்டே அட்வன்டிஸ்ட் |
| ஆர். ஹேமமாலினி | இரண்டாம் பரிசு | செயின்ட் ஜோசப் க்ளுனி மெட்ரிகுலேஷன் பள்ளி |
| சி. ஜே. அவினாஷ் | மூன்றாம் பரிசு | ஜவஹர் ஹையர் செகண்டரி பள்ளி |

ஆறுதல் பரிசுகள் :

| பெயர் | பள்ளியின் பெயர் |
|---|---|
| வி. பி. விவேக் | ஜவஹர் ஹையர் செகண்டரி பள்ளி |
| ஜி. அரவிந்த் | ஜவஹர் ஹையர் செகண்டரி பள்ளி |
| ஹெச். கார்த்திக் | ஜவஹர் ஹையர் செகண்டரி பள்ளி |
| ஏ. அருண்பிரசாத் | செயின்ட் பால்ஸ் மெட்ரிகுலேஷன் பள்ளி |
| ஜே. பாலசந்தர் | ஸ்ரீ அரபிந்தோ வித்யாலயா |
| ஹெச்.எஸ்.எம். ஜீலானி கான் | செயின்ட் பால்ஸ் மெட்ரிகுலேஷன் பள்ளி |
| ஆர். கிருஷ்ணா பிள்ளை | ஸ்ரீ அரபிந்தோ வித்யாலயா |
| ஆர். தினகர் | ஸ்ரீ அரபிந்தோ வித்யாலயா |
| ஆர். ரஞ்சித் கணேஷ் | ஸ்ரீ அரபிந்தோ வித்யாலயா |
| ஜி. சந்தீஷ் குமார் | ஸ்ரீ அரபிந்தோ வித்யாலயா |

மங்கையர் மலர் & வி. ஜி. பி. தங்கக் கடற்கரை இணைந்து நடத்திய சுற்றுலா போட்டிக்கு ஆயிரக்கணக்கில் கட்டுரைகள் குவிந்துவிட்டன. பரிசுக்குரிய கட்டுரைகளை எழுதியவர்களின் பெயர்கள் இந்த இதழிலும், அடுத்த இதழிலும் இடம் பெறும்.

பரிசளிப்பு விழா 25.4.'94 அன்று கோல்டன் பீச்சில் நடைபெறுகிறது. பரிசு பெற்றவர்களுக்குத் தனிப்பட்ட முறையில் கடிதம் மூலம் தெரிவிக்கப்படும்.

\- ஆசிரியர்.

# நான் சுற்றுலா போனபோது...

## நான் சுற்றுலா போன போது...

### முதல் பரிசுக் கட்டுரை

சுற்றுலா என்று கூறும்போது இந்தியாவின் அழகின் சிகரமாக விளங்கும் காஷ்மீருக்கு நாங்கள் சென்று வந்த பயணத்தை மறக்கவே முடியாது. அமைதிப் பூங்காவாக விளங்கிய காஷ்மீரத்தில் நாங்கள் பயணம் செய்ததும் அங்குள்ள மக்கள் எங்களிடம் காட்டிய அன்பையும் இன்று நினைத்தாலும் உள்ளம் பூரிக்கிறது.

1.5.80 அன்று நாங்கள் சென்னையிலிருந்து உல்லாசப் பயணம் துவங்கினோம். நான் என் கணவரின் காரியாலயத்தில் பணிசெய்யும் மற்ற நண்பர்களும் தங்கள் குடும்பத்துடன் பயணம் புறப்பட்டோம்.

எங்கள் பயணம் சாலை வழிப் பயணம், அதாவது பஸ் பயணம். அப்போதுதான் வழியில் இருக்கும் எல்லா இடங்களுக்கும் சென்று பார்க்க வசதியாக இருக்கும். 'மே'மாத வெய்யில் கடுமையாக இருப்பினும் புதிய புதிய இடங்களைப் பார்க்கவிருக்கும் ஆவலில் எங்களுடைய சிரமத்தை நாங்கள் பொருட்படுத்தவில்லை.

தமிழ் நாட்டைத் தாண்டி ஆந்திரம், மகாராஷ்டிரம், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான் மற்றும் உத்திரப்பிரதேச மாநிலங்கள் வழியாக டில்லி சென்றடைந்தோம். டில்லியிலிருந்து இமாசலப் பிரதேசம், அரியானா மாநிலங்கள் வழியாக ஜம்மு வந்தடைந்தோம். எங்களுடைய பஸ் 'ஸ்ரீநகர்' செல்ல முடியாதாகையால் ஜம்முவிலிருந்து மாற்று ஊர்தி வழியாக ஸ்ரீநகர் பயணமானோம். ஜம்முவிலிருந்து ஸ்ரீநகர் செல்லும் பாதை ராணுவப் பாதுகாப்பில் இருந்தது. பகல் 12 மணி வரை செல்லும் வண்டிகள் மட்டும்தான் மாலைக்குள் ஸ்ரீநகரைச் சென்று அடைய முடியும்.

ஸ்ரீநகரில் நாங்கள் எங்களுடைய பயணத்தை ஏற்கெனவே பதிவு செய்திருந்ததால் நாங்கள் ஸ்ரீநகர் சென்றடைந்தவுடன் உல்லாசப் படகின் சொந்தக்காரர் பஸ் நிலையத்திற்கு வந்து எங்களை அழைத்துச் சென்றார். எங்களுக்கு அங்கிருந்த காலநிலை ஒரு புதிய அனுபவம். மற்ற மாநிலங்களில் கடும் வெயில் ஆனால் ஸ்ரீநகரிலோ லேசான மழை. நல்ல குளிர். நாங்கள் பகலில் குளிரை எதிர்பார்க்கவில்லை. எங்களுக்கு ஏற்பாடு செய்திருந்த படகின் பெயர் பிஃபர் (piffer). அது ஓர் உல்லாசப் படகு வீடு. 'தல்' ஏரியில் மிதக்கும் படகு. அதில் எல்லா வசதிகளும் குளிப்பதற்கு, துவைப்பதற்கு, படுக்க, உணவு உட்கொள்ள என்று உண்டு. அந்தப் படகின் சொந்தக்காரரும் அவருடைய குடும்பத்துடன் படகிலேயே தங்கி எங்களுக்கு உணவு, தேநீர், முதலியன தயாரித்து வழங்கினார். எங்களுடைய பணம் மற்றும் விலை உயர்ந்த பொருட்களை அவர்கள் பாதுகாப்பாக வாங்கி வைத்து நாங்கள் திரும்பும் தினம் எங்களிடம் ஒப்படைத்தார்கள்.

முதல் நாள் அவர்கள் எங்களை ''பஹல்காம்'' என்னும் இடத்திற்கு ஒரு பஸ் மூலம் ''ஒரு நாள் உல்லாசப் பயணம்'' அழைத்துச் சென்றனர். அங்குள்ள குளிர்ந்த நீரோடைகளில் சுழித்து, நுரைத்து, அதிவேகமாக வரும் குளிர்ந்த நீரின் அழகை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். சிலர் குழந்தைகளை குதிரைச் சவாரிக்கு அழைத்துச் சென்றனர். சிலர் காஷ்மீர் உடை அணிவித்துப் புகைப்படங்கள் எடுத்தனர். பிறகு மாலை திரும்ப படகு வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். அடுத்த நாள் ''குல்மார்க்'' அழைத்துச் சென்றனர். போகும் வழியில் பச்சைப் பசேலென்று வளர்ந்து நிமிர்ந்து நிற்கும் நெல் வயல்களில் 'பாஸ்மதி' நெல் பயிர் செய்திருந்தனர். குல்மார்க் செல்லப் போதிய கம்பளி ஆடைகள், தோலாலான பூட்ஸுகள், கையுறைகள் தலைக்கு குல்லா எல்லாம் எங்களுக்குக் கொடுத்தனர். அங்கிருந்து 'விஞ்ச்'சில் குல்மார்க் சென்றடைந்தோம். சறுக்கும் மலையில் மிகவும் ஜாக்கிரதையாக ஏறி மலையுச்சிக்குச் சென்றோம். வெள்ளிப் பனியால் மூடிய சிகரம், பார்க்க கண்கொள்ளாக் காட்சி.



அடுத்த நாள் முகல்கார்டன் மற்றும் கடை வீதிகளுக்கும் அழைத்துச் சென்றனர். முகல்கார்டனில் பூத்துக் குலுங்கும் பல்வகையான ரோஜாக்கள் பார்க்கப் பரவசமூட்டின.

காஷ்மீரத்து மக்கள் எங்களிடம் காட்டிய அன்பை நினைக்கையில் அப்படிப்பட்ட இடமா இன்று இந்த நிலையில் இருக்கிறது என்று வியப்பாக உள்ளது. அங்குள்ள மக்கள் உல்லாசப் பயணிகளை அன்புடன் வரவேற்கிறார்கள். ஏனென்றால் காஷ்மீரத்தின் ஸ்ரீநகரின் பொருளாதாரம் உல்லாசப் பயணிகளை நம்பியே இருக்கிறது.

அங்கிருந்து திரும்பும்போது உறவினர்களை விட்டுப் பிரிந்து வருவது போல் இருந்தது. ஸ்ரீநகரிலிருந்து ஜம்மு வந்து எங்கள் பல்லவுக்கு வந்தோம். அங்கிருந்து பஞ்சாப் மாநிலத்தில் சண்டிகர் வந்தடைந்தோம். அங்கு ஜாலியன் வாலாபாக் மற்றும் அமிர்தசரஸில் பொற்கோவில் ஆகிய இடங்களுக்குச் சென்றோம். பொற் கோவிலைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த புனிதக் குளத்தில் நீராடினோம். ஆனால் இன்று பஞ்சாபின் நிலை என்ன? எங்களுடைய இந்தப் பயணத்தை நினைக்கும்போது அந்தக் காலம் மீண்டும் வருமா என்று எண்ணத் தோன்றுகிறது.

- திருமதி பாலகிருஷ்ணன், சென்னை-99.



## இரண்டாம் பரிசு

ஓ... சுற்றுலா...அதில்தான் என்ன ஒரு மகிழ்ச்சி. தினசரி ரொடீனிலிருந்து மாறுபட்டு, ஒரு டென்ஷனும் இல்லாமல், குடும்பம் மொத்தமும் ஒன்றாக ஓரிடம் செல்வது, சொல்லிலடங்கா ஆனந்தம். அப்படி நினைத்துத் தான் நாங்களும் புறப்பட்டோம் பம்பாய் நோக்கி.

இதில் விஷயம் என்னவென்றால், நாமாகக் கொண்டு தெரிசலில் மாட்டிக் கொள்ளாமல் லீவு முடிந்த பிறகு ஜுலை மாதத்தில் புறப்படுகிறோம் என பெருமிதப்பட்டோம். ராக்போர்ட் எக்ஸ்பிரஸ் பிடித்து, மறுநாள் தாதரில் பம்பாய் செல்வதாக டிக்கெட் பதிவு செய்து நாங்களும் டிரெயின் ஏறினோம், ஜாலியாக.

திருச்சியில் வண்டி புறப்பட்டு, நன்கு தூங்கியும் விட்டோம். நடுவில் ஒரு முழிப்பு. எழுந்து பார்த்தால் விழுப்புரம். ஓ..இன்னும் சில மணிதான் என்று கனவுகளுடன் திரும்பவும் தூக்கம். மறுபடியும் விழிப்பு. வண்டி அதே இடத்தில் நிற்க, நமக்கு ஏன் அடிக்கடி முழிப்பு வருகிறது என்று, திரும்பவும் தூக்கம். மூன்றாம் முறை விழித்தால், அதே விழுப்புரம் ஜங்ஷன் கண்ணெதிரில். தூக்கி வாரிப் போட, இவரை எழுப்பி, 'மணி என்ன? வண்டி ரொம்ப நேரமாக இங்கேயே நிற்கிறதே' என்று விசாரிக்க, தெரிய வந்தது முன்னால் கூட்ஸ் வண்டி விபத்து. பாதை சரியானால்தான் எங்கள் வண்டி புறப்படும் என்று. நேரம்



அப்போது அதிகாலை 3.45. நாங்கள் பிடிக்க வேண்டிய தாதர் சென்டிரலில் இருந்து காலை 9.15க்கு. நிலைமையின் தீவிரம் புரிய, அடித்துப் பிடித்து தூங்கும் குழந்தைகளை தோளில் போட்டு, சாமான்களை வாரியபடி வெளியே ஓடினோம், பஸ் பிடிக்க.

ஒருவாறாக தூக்கத்திலிருந்த ரிக்ஷாவை எழுப்பி நான், குழந்தைகள்+ சாமான்களை ஏற்றி, இவர் ரிக்ஷா பின்னாடி ஓடிவர, பஸ் ஸ்டேண்ட் வந்து சேர்ந்தோம். ஈசலாக வரும் கும்பலைக் கண்டதும், கண்டக்டர், பாறையாக இறுகிய முகத்துடன் சொன்ன பதில்

''இடமில்லை. எல்லாம் ரிசர்வ் பண்ணியது.'' கெஞ்சி கூத்தாடி, நிலைமையை எடுத்துக் கூறி, தூங்கும் குழந்தைகளை காண்பித்து, நின்று கொண்டே வருகிறோம் என்று புலம்பி, ஒருவாறாக கண்டக்டர் இளகிய சமயம் பஸ்ஸில் புகுந்து கொண்டோம்.

மன வேகத்துக்கு ஈடு கொடுக்காத பஸ், ஏதோ ஊர்ந்து செல்வது போல் தோன்ற, நிமிடங்கள் மணிகளாயின. அப்போதுதான் மாம்பலத்திலுள்ள என் பெற்றோரிடமிருந்து கைக்குச் சாப்பாடும் டிக்கெட்டும் வரவேண்டிய உண்மை புரிய, வயிறு கலங்கியது. கலங்கிய இந்நேரத்தில், பஸ் காலை காப்பிக்கு நிற்க, எல்லோரும் சூடான காபியை உறிஞ்சியது எங்கள் ரத்தத்தை உறிஞ்சுவது போல் பட்டது.

7.10 செங்கல்பட்டு, 7.50 தாம்பரம், 8.15 சைதாப்பேட்டை, 8.30 மௌண்ட் ரோடு என பஸ் ஓட, எங்களுக்கு கை கால் ஓடவில்லை. அன்றைக்கென்று பஸ், ஸ்டேண்டிற்குள் தான் உள்ளே சென்று நிறுத்துவேன் என டிரைவர் உள்ளே செலுத்த, பசி என்று குழந்தைகள் சிணுங்க, ஒருவாறு வெளியேறி, பிடித்த ஆட்டோ எங்களுக்கு ஊர் சுற்றிக் காண்பித்து சென்ட்ரல் வர மணி 9.05. இவர் என் பெற்றோரைத் தேடப்




போக, கழுத்தில் ஒன்று, கையில் இரண்டிரண்டு சாமான்கள், குழந்தைகள் இரண்டு என்று கண் மண் தெரியாமல் நான் ஓட, எதிரே இடித்தவரெல்லாம் என் சகோதர, சகோதரிகள் ஆயினர்.

எதிரே டிராலியுடன் வந்த போர்ட்டர் கிருஷ்ண பரமாத்வாக, பிடுங்காத குறையாக டிராலியைப் பிடுங்கி ''சாவு கிராக்கி'' ஆகி, சாமான்கள் + குழந்தைகளை ஏற்றி பிளாட்பாரத்திற்கு ஓடி, எஸ் 5 கோச் தேடி, பேய் வேகத்தில் டிராலியைத் தள்ள, மேடு பள்ளத்தில் சாமான்கள் உருள, எல்லோரும் வேடிக்கை பார்க்க,என ''ரஜினி'' (மன்னன் படம்) ஸ்டைலில் கூறிக் கொண்டே போகலாம். ஒருவாறாக முட்டி மோதி பெட்டிக்குள் ஏறி இவரைத் தேடினால், தூ..ர..த்தி...ல் இவர் என் பெற்றோருடன் ஓடி வர வண்டி புறப்பட தயார் நிலையில். இவர் வண்டியில் கால் வைக்கவும் வண்டி புறப்படவும் சரியாக இருந்தது. அம்மா இட்லி, புளிசாதம் பொட்டலத்தை உள்ளே தூக்கிப் போட அங்கு ஓர் 'மூன்றாம் பிறை' கடைசி காட்சி.

இப்படியாக எங்கள் பம்பாய் சுற்றுலா அமைந்தது. அன்றிலிருந்து இன்று வரை லீவுக்கு ''பம்பாய் போகலாமா'' என்று கேட்டால் என் பெரிய பெண், பேயைக் கண்டது போல் அலறிக் கொண்டு இருக்கிறாள்.

என்ன? எப்படி எங்கள் அனுபவம்? நீங்களும் போயிருக்களா பம்பாய்க்கு. ஆனால் கனெக்டிங் ட்ரெயின் வேண்டாமே!

- பத்மினி வரதராஜன், திருச்சி-620017.

## மூன்றாம் பரிசு

நீண்ட நாட்களுக்குப்பின் கல்லூரியில் நெருங்கிய தோழியை சந்தித்த போது, ஹைதராபாத்தில் இருப்பதாகக் கூறியவள், தன் விலாசத்தைத் தந்து அவசியம் குடும்பத்தோடு வர வேண்டுமென்று கூறியது மட்டுமில்லாமல் மீண்டும் போனிலும் வற்புறுத்தி அழைத்தாள். எனவே என் பெண்களுக்கு விடுமுறை ஆரம்பித்தவுடன் ஒருவார கேம்ப் திட்டம் தீட்டி, ஹைதராபாத் எக்ஸ்பிரசில் சென்னையிலிருந்து மாலை 4 மணிக்கு என் பெண்களுடன் கிளம்பினேன். கணவர் வரவில்லை. தோழிக்கு ஒரு ஆச்சரியமாக இருக்கட்டுமே என்று அறிவிப்பு தராமல், நமக்குத் தெரிந்த உலகமகா ஆங்கில மொழியால் எதையும் சாதித்து விடுவோம் என்ற நினைப்போடு, தோழிக்குத் தெரியட்டுமே என்று நாங்கள் அனைவரும் கழுத்திலும் கையிலும் தங்கத்தைப் பூட்டி காதில் வைரத்தோடுமாகக் 'தெத்தாப்'பாகக் கிளம்பினோம்.

செகந்தராபாத்தில்தான் என் தோழியின் வீடு. ஹைதராபாத் ஸ்டேஷனுக்கு முன்னால் அது வரும். விவரம் தெரியாது அப்போது. எனவே ஹைதராபாத் ஸ்டேஷனில் மூட்டை முடிச்சுகளோடு மறுநாள் காலை 7.30 மணிக்கு இறங்கினோம். போர்ட்டர் துணையின்றி சாமான்களை எடுத்து வெளியே வந்து ஆட்டோவைக் கூப்பிட்டு 'பேகம் பேட், ஜெனாமச்' என்று சவுடாலாக கேட்டபோதுதான் தெரிந்தது அங்கு 'ஆங்கில பப்பு நஹி!' என்று .

தெலுங்கிலும் ஹிந்தியிலும் மாற்றி மாற்றிப் பேசிய டிரைவர்கள் சலித்துப் போய் விலக, நாங்கள் மொழி தெரியாமல் முழிக்க, ஒரு டிரைவர் மட்டும் 'எஸ் மாடம் ஆவோ' என்று கூற, நான் தோழியின் விலாசம் கூற, அவர் ஹிந்தியில் ஏதோ கூற, என் பெரிய மகள்,

''பிராத்மிக் பரீட்சை எழுதியிருக்கிறேன். எனக்குத் தெரிந்த ஹிந்தியில் நான் மானேஜ் செய்கிறேன்''

என்று கூற, 'சலோ பேகம் பேட்' என்று எங்களையும் ஏற்றி சாமான்களையும் ஏற்றி, டிரைவர் கிளப்பினார். கொஞ்ச தூரம் போனதும் டிரைவர் ஒரு திருப்பத்தில் இதர்? என்றதும் என் ஹிந்தி பண்டிட் 'அச்சா' என்று மேதாவியாய் கூற, அப்படியே, வெவ்வேறு பாதைகள் திருப்பங்களில் எங்களை டிரைவர் பார்க்க எங்கள், ஹிந்தி மாஸ்டரும் பெருமையாய் 'நஹி' 'உதர்' 'சலோ' 'வஹாங்' என்று அங்கங்கே மாடு விரட்ட, ஆட்டோ சுமார் 3, $3^1/_2$ மணி நேரம் சுற்றிச் சுற்றி ஹைதராபாத் (உலகம்) சுற்றும் வாலிபிகளாக நாங்கள் வலம் வந்தோம்.

ஒரு ரோட்டின் முனையில் டிரைவர் திரும்பிப் பார்த்து 'கஹாங் ஜாத்தியோ மேம் சாப்' என்றார். என் மகள், அரேதும் நஹி மாலூம், ஜாயியேனா ஸ்ட்ரெயிட்' என்று கூறிவிட்டு அதிகம் பேசி விட்ட பெருமையில் எங்களைப் பார்க்க, 'எப்படி ஹிந்தி பேசுகிறாள், நாளைக்கே சென்ட்ரல் கவர்ன்மெண்ட் வேலை கட்டாயம் கிடைத்து விடும்', என்று கனவில் நான் மிதக்க, டிரைவர் 'க்யா, ஸ்ட்ரெயிட்', என்றார். 'ஹாங்' என்று மறுபடியும் மாடு விரட்ட, கோபமாக ஆட்டோவை ஓட்டி டிரைவர், 20நிமிடங்களுக்குப் பிறகு, ஆட்டோவை நிறுத்தினார். வீடு வந்து விட்டது என்று வெளியே இறங்கிய நான் திடுக்குற்றேன். அங்கே செகந்தராபாத் ஸ்டேஷன் என்ற போர்டு!

ஆங்கிலத்தில் டிரைவரைப் பார்த்து நான் கத்த, அவர் தெலுங்கிலும் ஹிந்தியிலும் கத்த, 3,4, டிரைவர்கள் கூடி விட்டனர். ஒரு அரை குறை ஆங்கிலத்தில் ஒரு டிரைவர் அம்பையர் பொறுப்பேற்று அவரிடம் விசாரித்து விட்டு என்னிடம் 'Rs. 600 give' என்று கூறியதும், நான் மறுபடியும் என் கட்சியைக் கூற ஆட்டோ டிரைவரிடம் கேட்டு விட்டு என்னைப் பார்த்து 'மேம்சாப் கரெக்ட் அட்ரஸ் தும் மாட்போது' என்று தேசிய ஒருமைப் பாட்டை வார்த்தையிலே விளையாட விட்டு, என்னிடம் அரைகுறை ஆங்கிலத்தில், அந்த டிரைவர், புதிதாக அன்றுதான் வந்தவர் என்றும், நான் வழி சொல்ல வேண்டும் என்று முதலிலேயே கேட்டு விட்டுத்தான் எங்களை ஏற்றியதாயும், அவ்வப்போது எங்களிடம் கேட்டுக்

**வீட்டின் பேரில் கடன்**

- வீடு/மனை/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்
- மிகக்குறைந்த வட்டிக்கு
- விரைந்த சேவை
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்கவேண்டும்



**நகைக் கடன்**

- மிகக்குறைந்த வட்டிக்கு
- 22 ct. தங்க நகைகளுக்கு 1 கிராமுக்கு ரூ.300/- வீதம் கடன் வழங்கப்படும்.
- R.D. கட்ட தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை.





**திரு.வி.க.நகர் பெனிஃபிட் ஃபண்டு லிமிடெட்**

தலைமை அலுவலகம்: 10, 2வது தெரு, ஆண்டாள் அவென்யு (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்) சென்னை - 82. வேலை நேரம் : 9 முதல் 12.30 வரை. 2 முதல் 5 வரை. ✆ 610390 ஞாயிறு விடுமுறை

பாரிஸ் கிளை: 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (பட்டணம் கோயில் அருகில்), பார்க் டவுன், சென்னை - 3. வேலை நேரம்: 10 முதல் 1 வரை - 2 முதல் 5 வரை. ✆ 563760 ஞாயிறு விடுமுறை

# இப்பொழுது விற்பனையில்

# பொருளாதாரம்




தொழில் முனைவோரின் கையேடு

தமிழில் தரமான வணிக இதழ்

விலை ரூ. 2

எல்லா கடைகளிலும் கிடைக்கிறது.

1 ஆண்டு சந்தா ரூ.20
2 ஆண்டு சந்தா ரூ.35

த.பெ. எண்: 3478
அண்ணாநகர்,
சென்னை - 600 040

(D.D./M.O. மட்டுமே பெற்றுக் கொள்ளப்படும்)

Basis Communications

கேட்டு நாங்கள் சொன்னபடிதான் இங்கு கூட்டி வந்ததாயும் சொன்னபோது எனக்கு மயக்கமே வர, மொழிப்பிரச்சினையை நான் கூற, அந்த அம்பையார் டிரைவர், என்னிடம் விலாசத்தைக் கேட்டு விட்டு, பழைய டிரைவரிடம் ஏதோ கூறி விட்டு, ''தும்பைபட்டிபோனா, சலோபையா'', என்றதும் டிரைவர், சரியான வழியில் செல்ல ஆரம் பித்தார்.

அது வரை நாங்கள் தமிழிலேயே பேசாமல் வந்தவர்கள், (உபயம் என் கணவர் - தமிழில் பேசினால் ஏமாற்றிவிடுவான் ஆட்டோகாரன். அதனால் ஆங்கிலத்திலேயே பேசுங்கள் என்று அறிவுரை கூறியிருந்ததால் தமிழில் பேசவில்லை)

அப்போதுதான் 'என்னடி, இவன் பார்க் கிறதே சரியில்லையே, நகை நட்டு பணம் சாமா னோட விடுபோய் சேரணுமே' என்ற என்னிடம் என் சின்ன மகள் - 'அம்மா சஷ்டிகவசம் சொல்லலாம் - காக்க - காக்க' - என்று ஆரம் பித்தாள். 'பயப்படாதீங்கம்மா நான் அப்படிப் பட்ட ஆளில்ல' திடீரென ஆட்டோ டிரைவர் தமிழில் பேச, திகைத்த என்னைப் பார்த்து,'நீங்க தமிழ்னு முதலிலேயே தெரிந்திருந்தா இவ்வளவு கலாட்டா வந்திருக்காது, உங்க ஆங்கிலம், உடையைப் பார்த்து நான் வேற ஊர்னு நினைச் சேன்' (நான் - மாடர்ன் என்று காட்ட வடநாட்டு மாடல் சாரியிலும், என் பெண்கள் சூடிதாரிலும் இருந்தோம். )

எங்களுக்கு ஒரே அவமானமாய் போக, நாங் கள் அவரிடம் மன்னிப்பு கேட்க, அவரும் 'பரவாயில்லம்மா, உங்க நிலைலே யாரும் அப் படித்தான் நினைப்பாங்க' என்றவர் தன் தாய் தந்தையாரின் பூர்விகம் மதுரை பக்கம், பிழைப் புக்காக வந்தவர்கள் அங்கேயே செட்டிலாகி விட்டதாகவும் கூறி, என்னைத் தோழி வீட்டில் இறக்கி விட்டு, நான்கு மணி நேரம் சுற்றியதற்கு, பெட்ரோல் செலவுகூட வேண்டாமென்று கூறி விட்டுச் சென்று விட்டார்.

ஹைதராபாத் மண்ணை மிதிச்சுட்டு உடனே ரொம்ப நினைச்ச ஆள் நீதாண்டி என்று என் தோழி இன்றும் கேலி செய்வாள்.

- எஸ். கஸ்தூரி லக்ஷ்மி, தூத்துக்குடி-2



**இதோ இருக்கிறது,**
**அருமையான சுற்றுலா தலம்!**

முதல் பரிசு

சென்ற வருடம் நானும், என் கணவர் குழந்தைகளுடன் திருப்பூரில் இருக்கும் என் உற வினர்கள் வீட்டிற்குச் சென்றிருந்தோம். அவ்வூ ருக்கு அருகிலுள்ள ''கொடிவேரி''எனும் இடம் சுற்றுலா செல்வதற்குச் சிறந்த இடம் என்று எல்லோரும் கூறியதால், சிற்றுண்டிகளை எல் லாம் தயார் செய்து கொண்டு, அன்று காலை புறப்பட்டோம்.

முதலில் திருப்பூரிலிருந்து சத்தியமங்கலத் திற்குச் சென்றோம். சத்தியமங்கலத்திலிருந்து 5கி.மீ.தொலைவிலுள்ள கொடிவேரியை அடைந் தோம். மெயின் ரோடிலிருந்து பார்ப்பதற்கு ஒன்றுமே இல்லாததுபோலும், இந்த இடத்திற்கு ஏன்தான் வந்தோம்? என்றும் தோன்றியது. ஆனால் ஒரு நீண்ட ஓடை, அதனொட்டிய பாதை யிலேயே சிறிது தூரம் நடந்து செல்லும் பொழுது, கண்களுக்கு விருந்தளித்த பச்சைப் பசுமையான வயல்வெளிகளும், அருவியோடு வரும் சில் லென்ற காற்றும் மனதில் சிறிது சிறிதாக குதூ கலத்தை வரவழைத்தது.

சிறிது தூரம் கடந்தவுடன், மேலிருந்து சலசல வென கட்டுக் கடங்காது கொட்டும் பாலைப் போன்ற வெண்மையான அருவியும், சுற்றிலும் உள்ள பச்சைப் பசேலென்ற செடிகளும், காண் பவர் மனதைக் கொள்ளை கொள்ளும் இயற்கை அன்னையின் எழில் கொஞ்சும் அழகும் எங்களை அப்படியே ஸ்தம்பித்து நிற்கவைத்து விட்டது.

இக்கரையிலிருந்து அக்கரைக்குச் செல்ல பரிசல் வசதிகள் உண்டு. அந்தப் பரிசலில் செல் லும்பொழுது மனதில் மகிழ்ச்சி ஒருபுறமும், பயம் மறுபுறமும் இருக்க, ஏற்படும் இந்தத் திகில் கலந்த சுகமான அனுபவத்தை விவரிக்க வார்த் தைகளே இல்லை. அக்கரைக்குச் சென்றவுடன் கொண்டு வந்த சிற்றுண்டிகளை முடித்துக் கொண்டு, களைப்பாறினோம்.

பிறகு சிறிது காலார நடந்து சென்றால், பெரிய பெரிய பாறைகளுக்கிடையே தவழ்ந்து வரும் அந்த அருவியினுடைய தொடர்ச்சியும், அப்பாறைகளிடையே அமர்ந்து கொண்டு பார்த் தால், நம்மைச் சுற்றிலும் அமைந்துள்ள இயற் கைக் காட்சிகள் நம் கண்களையும், கருத்தையும் கொள்ளை கொள்கிறது.

இந்தச் சூழலில் இருந்து விடுபட்டு, மீண்டும் எங்களுடைய வீட்டிற்குச் செல்ல மனமில்லாமல் திரும்பினோம்.

- திருமதி பத்மா கணேசன், சென்னை-87.

## இரண்டாம் பரிசு

''மூட்டாள் அலைகிறான், அறிவாளி பய ணம் செய்கிறான்'' என்றபடி பற்பல இடங்களை அழகியல், அறிவியல், வாழ்வியல் என்ற நோக்

## சுற்றுலா போட்டியில் பரிசு பெற்றவர்கள் :

### நான் சுற்றுலா போன போது...

திருமதி. பாலகிருஷ்ணன்,
சென்னை - 99 - முதல் பரிசு
பத்மினி வரதராஜன்,
திருச்சி - 17 - இரண்டாம் பரிசு
எஸ். சந்திரலக்ஷ்மி,
தூத்துக்குடி - 2 - மூன்றாம் பரிசு
மல்லிகா மனோகர்,
சென்னை - 40 - நான்காம் பரிசு
எஸ். சரோஜினி,
சென்னை - 64 - ஆறுதல் பரிசு
ஆர். சீதாஞ்சலி,
சென்னை - 24 - ,,
சாந்தா ராமசாமி,
சென்னை - 34 - ,,

### இதோ இருக்கிறது அருமையான சுற்றுலா தலம்....

பத்மா கணேசன்,
சென்னை - 87 - முதல் பரிசு
க. மீனாட்சி,
சென்னை - 5 - இரண்டாம் பரிசு
வி. மகாதேவன்,
சென்னை - 24 - மூன்றாம் பரிசு
என். உமா,
சென்னை - 91 - நான்காம் பரிசு
கே. ராதா, பழனி - 2 - ஆறுதல் பரிசு
கே. சீதாலட்சுமி,
சென்னை - 33 - ,,
யூ. கே. செல்வி,
நீலகிரி - 2 - ,,

### நாம் விருந்தினர்களாகப் போகும்போது...

அகிலா கார்த்திகேயன்,
சென்னை - 41 - முதல் பரிசு
மோ. முத்துலட்சுமி,
சென்னை - 83 - இரண்டாம் பரிசு
சுதா ஆத்மராஜ்,
சென்னை - 32 - மூன்றாம் பரிசு
மாலதி ஏகோத்தமன்,
சென்னை - 33 - நான்காம் பரிசு
ஏஞ்சல் பாப்டிஸ்ட்,
கன்னியாகுமரி - 2 - ஆறுதல் பரிசு
சந்தியா சந்தான
கிருஷ்ணன், சேலம் - 7 - ,,
இராம. மணிமேகலை,
ஆத்தூர் - ,,

(மற்ற பரிசு பெற்றவர்களின் பெயர்கள் அடுத்த இதழில்...)

லில் சுற்றிப் பார்க்க விரும்புவதே சுற்றுலாப் பயணம். இந்த அடிப்படையில் ஆர்வமூட்டக் கூடியவை, அதிசயமானவை, மனதை ஈர்ப்பவை, அழகிய இயற்கைக் காட்சிகள் போன்றவற்றைக் காண்பதும், கண்டு களிப்பதும் சுற்றுலாவின் குறிக்கோளாக விளங்குகிறது.

ஒருபுது சுற்றுலா தலம் பற்றியும், வழி, அவ்விடத்தின் சிறப்பு பற்றியுமல்லாது புகைப் படங்களும் வேண்டும் என்றவுடன் சட்டென்று என் நினைவில் ஜோவென 'அதிராம்பள்ளி நீர் வீழ்ச்சி' கொட்ட ஆரம்பித்துவிட்டது.

ஒருபுறம் ஆர்ப்பரிக்கும் அரபிக்கடல் மறுபுறம் 4000 கிலோ மீட்டர் தூரத்துக்குப் பரவியுள்ள மேற்குத் தொடர்ச்சி மலை. இரண்டிற்கும் இடைப்பட்ட இயற்கை தாலாட்டும் தொட்டில் மேற்குக் கடற்கரைச் சமவெளி.

சமவெளி என்பதால் மழை அதிகம். இங்குதான் வாழ்வின் வசந்தத்தை நினைவூட்டும் பசுமைப் பூமியான கேரளம் உள்ளது. பசுமை பசுமை எங்கு நோக்கினும் பசுமை. இங்கு மஞ்சு சூழ் மலைகளும், மலையிழ் அருவிகளும் ஏராளம். அருவிகளில் ஒன்றான 'அதிராம் பள்ளியே' அழகான சுற்றுலாத் தலமாக மலர்ந்து வருகின்றது.

சென்னை - திருவனந்தபுரம் ரயில் பாதையில் சாலக்குடி ரயில் நிலையத்திலிருந்து முப்பத்தோரு கிலோமீட்டர் பேருந்தில் பயணம் செய்தால் அதிராம்பள்ளி அருவிக் கரையை அடையலாம்.

பொள்ளாச்சி-வால்பாறை- சாலக்குடி வழியாகவும் சாலை வழிப் பயணமாக அதிராம்பள்ளியை அடையலாம். கேரளாவில் உள்ள எர்ணாகுளத்திலிருந்து முப்பத்திரண்டு கிலோ மீட்டர் தொலைவில் பேருந்துப் பயணமாகவும் இவ்விடத்தை அடையலாம்.

அழகு கொழிக்கும் அருவி 100 மீட்டர் உயரத்திலிருந்து விழுகிறது. இந்தியாவின் மினி 'நயாகரா' எனலாம். சுற்றிலும் கண்கொள்ளா இயற்கைக் காட்சிகள் கண்ணுக்கும் மனதுக்கும் புத்துணர்வு தருவனவாக அமைந்துள்ளன. அழகின் ஊற்றாக விளங்கும் அதிராம் பள்ளி அருவிக் கரைக்கு சுற்றுலா ஆர்வலர்கள் அவசியம் ஒரு முறையேனும் சென்றுவர வேண்டும்.

எர்ணாகுளத்தில் தங்கும் வசதிகள் உண்டு. காலையில் புறப்பட்டு மாலையில் திரும்பி விடலாம். அருவிக் கரையை மட்டுமல்லாது அருகில் உள்ள சுகவாசஸ்தலமான ஆல்வாய், யாத்திரைத் தலமான அங்கமாலி இடங்களையும் சுற்றுப் பயணத்தில் இணைத்துக் கொண்டால் புண்ணிய உலாவாகவும் அமைந்துவிடுமன்றோ! மேலும்



அதிராம்பள்ளியிலிருந்து 5 கிலோ மீட்டர் தொலைவில் 'வாவச்சாறு' என்ற இயற்கை எழில் கொஞ்சும் இடத்திற்கு நடைப் பயணம் மேற்கொண்டால் உடல் அசதி எல்லாம் பறந்துவிடும். ஒருபுறம் மலைத் தொடர் தொடர மறுபுறம் மரங்கள் சூழ்ந்த பள்ளத்தாக்கு காட்சிதர நடைப் பயணம் நல்ல பயணமாக மாறும்.

-மீனாட்சி, சென்னை-5

## மூன்றாம் பரிசு

நாகை காயிதே மில்லத் மாவட்டத்தின் கிழக்குக் கடற்கரையில் அமைந்த அழகான ஊர் வேதாரண்யம். திருத்துறைப்பூண்டியிலிருந்து புகை வண்டி மூலமோ பேருந்திலோ செல்லலாம். அழகான கடற்கரை. இங்குள்ள கடற்கரையில் ஒரு சிறப்பு. மேலே மணல், கீழே களிமண். எனவே நம் எடைக்குத் தக்கபடி நாம் கீழே போய் மேலே வருவோம். கடல் ஊருக்குச் சற்று தள்ளி இருக்கிறது. வேதாரண்யம்-அகஸ்தியம் பள்ளி இடையே அடர்ந்த காடு இருக்கிறது. இங்கு மான்கள் துள்ளித் திரிகின்றன. மேலும் வெளி நாட்டுப் பறவைகள் இங்கு வருகின்றன. அவற்றைப் பார்க்க பறவை ஆராய்ச்சியாளர்களும் மற்றோரும் கூடுகின்றனர்.

இங்கே முன்பெல்லாம் 'புலி'கள் நடமாட்டம் இருந்ததால் பல பிரச்னைகள் ஏற்பட்டன. இப்போது அவை இல்லை.

வேதாரண்யம் (திருமறைக் காடு) புராணப் புகழுள்ளது. அகஸ்தியருக்கு இறைவன் திருமணக் காட்சி தந்ததாகத் தல புராணம் கூறும். மேலும் வேதாரண்யம் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது. மகாத்மா காந்தி தண்டியில் உப்பு சத்தியாக் கிரகம் செய்தபோது ராஜாஜி வேதாரண்யத்தில் உப்பு வேள்வி நடத்தினார்.

சர்தார் வேதரத்னம் ராஜாஜிக்குத் தளபதி. சர்தார் இப்போது இல்லை. எனினும் அவர் துவங்கிய 'கஸ்தூரிபா கன்யாகுருகுலம்' இன்றும் செழித்து விளங்குகிறது. சுதந்திர போராட்ட - உப்பு சத்தியாக்கிரக நினைவுச் சின்னத்திற்கும், ராஜாஜி - வேதரத்னத்திற்கு அஞ்சலி செலுத்தவும் வேதாரண்யம் அவசியம் செல்ல வேண்டும்.

இங்குள்ள களிமண் சதுப்பு நிலத்தில் கடல் நீர் தேங்குவதால் METHANE ($CH_4$) மீதேன் என்ற ஒரு வாயு வெளிப்படுகிறது. இது காற்றில் உள்ள பிராணவாயுவுடன் சேர்ந்ததும் தீப்பற்றுகிறது. இது ஒரு ரசாயனச் சேர்க்கை. இரவில் இதை 'கொள்ளி வாய்ப் பிசாசு' என்றெண்ணி அஞ்சுவாருண்டு. இந்த நிகழ்ச்சியைப் பேராசிரியர் கல்கி அவர்களே தன்னுடைய பொன்னியின் செல்வனில் விளக்கியுள்ளார்.

ஆகவே தமிழ்நாட்டில் 1) சதுப்பு நிலக் கடற்கரையை அனுபவிக்க, 2) ராஜாஜி உப்பு எடுத்த இடத்திற்கு அஞ்சலி செய்ய, 3)காட்டு மான்கள், வெளிநாட்டுப் பறவைகளைக் காண, 4) கஸ்தூரிபா கன்யா குருகுலம் சென்று சர்தார் வேதரத்னத்தைப் பாராட்டி மகிழ, 5) கோவிலில் அகஸ்தியர் தரிசித்த சிவபெருமான் மணக் கோலம் காண, 6) புகையிலைப் பிரியர்கள் நல்ல புகையிலையை அனுபவிக்க வேதாரண்யம் என்ற திருமறைக் காடு சுற்றுலா தலமாக அபிவிருத்தி செய்யப்பட வேண்டும்.

- வி.மகாதேவன், சென்னை-24



வெற்றிதரும் சிந்தனை தொழில் செல்வம்

வாழ்வில் வெற்றி பெற தியானம், பேச்சு, சிந்தனை என அனைத்தையும் விளக்குகிறார் மானோஸ்.

விலை ரூ. 20.00

1001 இரவில் சொன்ன அரபுக் கதைகள்

சிறுவர்களும் ஏன் பெரியவர்களும் கூட விரும்பும் உலகப் புகழ்பெற்ற கதைகள். தமிழில் தருபவர் மானோஸ்.

முதல் பாகம் - ரூ. 35.00
இரண்டாம் பாகம் ரூ. 35.00

அர்த்தமுள்ள ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்

ஆயர்பாடியில் கோகுல கண்ணனாக விளையாடிய பகவான் பிறகு விசுவரூப மெடுத்த வரலாற்றைத் தருபவர் நாகர் கோவில் கிருஷ்ணன்.

விலை ரூ. 25.00




(நான்கும் - குமரன் பதிப்பகம், 2, முத்துகிருஷ்ணன் தெரு, பாண்டி பஜார் அருகில், தி. நகர், சென்னை - 600 017.)

பகவத் கீதை

பகவான் பார்த்த சாரதியாக, குருக்ஷேத் திரப் போர்க்களத்தில் அருளிய பகவத் கீதை யின் தமிழாக்கமும், உரையும். தமிழ்க் கவி யாக்கம் - புலவர் கப. துளசி, உரை - வளர்மதி.

விலை ரூ. 35.00

நவக்கிரக கவசம்

தமிழில் தொகுத் திருப்பவர் - வளர்மதி

விலை ரூ. 5.00

புலிப்பாணி ஜோதிடம்

ஜோதிடக் கலை யில் ஆர்வமுள்ளவர் களுக்கான மிகச் சிறப் பான நூல். உரைத் தெளிவு - வளர்மதி.

விலை ரூ. 12.00

நடக்கும் என்பேன் நடக்கும்

பெரும் சாதனையாளர்களைச் சுட்டிக் காட்டி, அவர்கள் முன்னேறி வந்த பாதை யைக் காட்டி வாழ்க்கை முன்னேற்றத் திற்கான சுவையான கட்டுரைகளைத் தரு பவர் சுபா.

விலை ரூ. 22.00

உறவே நீ உறங்காதே

பால் சுயம்பு எழுதி பிரபல தினப் பத்திரிகையில் தொடராக வந்த நாவல்.

விலை ரூ. 25.00

(ஐந்தும் - மதி நிலையம், 45, செல்லப் பிள்ளையார் கோயில் தெரு, இராயப் பேட்டை, சென்னை - 600 014.)

அவளும் ஒரு பெண்

கிராமத்தை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட நாவல். ஆசிரியர் : அமுதா கணேசன்.

விலை ரூ. 20.00

கலை உலக ஒளிவிளக்குகள்

பாகவத மேளா, நாயனாப் பிள்ளையின் லயஞானம் போன்ற அரிய கலைச் செய்தி களைத் தொகுத்துள்ளார் கு. ரா.

விலை ரூ. 27.00

இளவரசி மோகனாங்கி

தெலுங்கு நாயக்க மன்னர் விஜயராகவ நாயக்கரின் மகள் மோகனாங்கியைக் கதா நாயகியாக வைத்து எழுதப்பட்ட சரித்திர நாவல். ஆசிரியர் : டாக்டர் கோவி. மணி சேகரன்.

விலை ரூ. 32.00

காத்திரு கண்ணே

அமுதா கணேசன் இளைஞர்களின் உணர்வினை அடிப்படையாக வைத்து எழுதியுள்ள காதல் கதை.

விலை ரூ. 22.00

(நான்கும் - கங்கை புத்தக நிலை யம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

செவ்வாய் தோஷமும் சகல பரிகாரங்களும்

ஆசிரியர் - கே. எஸ். பதஞ்சலி ஐயர்.

விலை ரூ. 12.00

கர்ப்பவதிகளுக்கு அவசியமான கையேடு

கர்ப்பம் பற்றிய அனைத்துச் செய்தி களையும் தருபவர் என். ஜனார்த்தனன்.

விலை ரூ. 20.00

(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டி பஜார், தி. நகர், சென்னை - 600 017.)

### அனுமனைப் போற்றுவோம்

ராமபக்த ஹனுமானின் சிறப்பியல்புகளைத் தொகுத்தளிப்பவர் என். எஸ். முத்து கிருஷ்ணராஜா.

விலை ரூ. 30.00

(வெளியீடு - கம்பன் கழகம், இராஜபாளையம், புத்தகம் கிடைக்குமிடம், என். எஸ். முத்துகிருஷ்ணராஜா, 6, தாண்டல் கந்த சாமி ராஜா தெரு, இராஜபாளையம்.)

### மனித தெய்வம்

இன்றைய சமூகச் சூழலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட சிறுகதைகள். ஆசிரியர் : சரயு.

விலை ரூ. 22.00

(சரயு பதிப்பகம், பி - 4, பிரபாத் அபார்ட்மெண்ட்ஸ், 1, கமலாபாய் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

### இந்துமத நம்பிக்கைகளும், தத்துவங்களும்

கோவிலில் பிரதக்ஷிணம் செய்யும் முறை, விரதங்கள் என நிறைய செய்திகளைத் தருபவர் கவிஞர் சக்திதாசன்.

விலை ரூ. 20.00

(ஸ்ரீ ராகவேந்திரா நிலையம், 8, கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

### பெண்களின் பொக்கிஷம்

கூந்தலை வைத்துக் கொள்ளும் முறை முதல், சில பொதுவான பிணிகள் வரை செய்திகளைத் தருபவர் ஸ்ரீமதி காமாக்ஷி.

விலை ரூ. 25.00

(நாகலக்ஷ்மி பப்ளிகேஷன்ஸ், 9, கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

### ஜோதிட அனுபவ ஆராய்ச்சிக் கட்டுரைகள்

ஜோதிட பலன் சொல்வோருக்கானது. ஆசிரியர்: கே. என். சரஸ்வதி.

விலை ரூ. 25.00

(கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

## கேசட்

### ஸ்ரீ ராஜமாதங்கீ ஸஹித அஷ்டலக்ஷ்மி தீப பூஜை

'தி மதர் மந்திர்' சார்பில் கேசட்டினை அளிப்பவர் ஸ்ரீகவி. அருளியவர் - உ. வே. வெங்கடேஸ பட்டாச்சார்யார். பெண்களும், ஆண்களும் விசேஷமாகச் செய்து பயன் பெறக் கூடிய பூஜை. காலம் : இரண்டு மணி நேரம். கூரியர் மூலம் அனுப்ப செலவு தமிழ்நாடு ரூ. 11/-; வெளி மாநிலங்கள் ரூ. 30/-

விலை ரூ. 70.00

(தி மதர் மந்திர், 27, நரசிம்மபுரம், மயிலை, சென்னை - 600 004.)

### படவேடு ஸ்ரீ ரேணுகா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

பாடியவர் : பி. சுசீலா. இசை : ஒய். என். சர்மா. படவேடு ஸ்ரீ ரேணுகாம்பாள் எனும் சுயம்பு அம்மனைப் பற்றியது.

விலை ரூ. 32.00

(வெளியீடு - ஏ.எல்.எஸ். ஆடியோ, ஏ. கே. படவேடு அஞ்சல் போஸ்ட், வழி - சந்தவாசல், 606 905)

---

ஒருநாள் ஜூஸ் பிழிந்த எலுமிச்சைத் தோலைத் தூர எறியப் போனேன். அப்போது வந்த என் தோழி எனக்குக் கூறிய வழிகளைக் கூறுகிறேன் :

எலுமிச்சைத் தோலை உலரவை. தூர எறியாதே. உலர்ந்த தோலைப் பொடி செய்து மில்க் பவுடருடன் கலந்து 'கேக்' செய்ய உபயோகி.

பொடியை கடலை மாவு முட்டையின் வெள்ளைக் கருவுடன் கலந்து 'ஃபேஸ் பேக்' ஆக உபயோகி.

பொடியுடன் சிறிது உப்பு, லவங்கப் பொடி, புதினா பொடி சேர்த்து பல் பொடி தயார் செய். பொடியைச் சிறிதளவு ரசத்திலும் சேர்க்கலாம். உலர்ந்த எலுமிச்சைத் தோலை ஊறுகாய் போடவும் உபயோகி.

நானும் அன்றிலிருந்து எலுமிச்சைத் தோலை தூர எறிவதே இல்லை.

- தாரா ஷீலா



# குஷ்பூன்னா குஷ்பூதானே...!

★ சதானந்தமய்யா



நூறு வயதை நெருங்கிக் கொண்டிருந்த சந்நியாசி ஒருவர், தன் கால்முட்டி வலியிதற்குச் சிகிச்சை பெற மருத்துவரிடம் வந்திருக்கிறார். தெளிவான கண் பார்வை, தானே நடமாடும் திடம், கேட்கும் திறன் எல்லாம் அந்த முதியவருக்குச் சிறப்பாக இருப்பதைப் பார்த்து மருத்துவருக்கு ஒரே ஆச்சர்யம்.

''உங்கள் ஆரோக்கியத்தின் இரகசியம் என்ன'' என்று கேட்டாராம்.

''எங்கள் குரு பரம்பரையில் ஓலைச்சுவடி ஒன்றை நாங்கள் பத்திரமாக பாதுகாத்து வருகிறோம். நீண்ட ஆயுளுக்கு வலுவான தேகம், கவலையற்ற மனம் இதெல்லாம் காரணம் என்பார்கள். இதற்கெல்லாம் மீறி ஒரு நரம்பு ஒன்று மூளையிலிருந்து தண்டு வடம் வரை வருகின்றது. இது தான் வாழ்வின் ஆதாரமானது. இதனை ஆரோக்கியமாக வைத்திருப்பது பாதாம் பருப்பு. இவிப்புப் பாதாம் பருப்பு, முறையான வாழ்க்கை, சிற்றின்பத்தில் அதிகம் சக்தியைச் செலவழிக்காமல் இருத்தல் இவையே நீண்ட ஆரோக்கியமான வாழ்விற்குக் காரணம்'' என்றாராம்.

புகழ்பெற்ற மருத்துவர் ஆமன் தன்னுடைய புத்தகத்தில் இந்தச் சுவையான கதையை எழுதியிருக்கிறார். தற்செயலாக இதைப் படிக்க நேர்ந்த போது இன்னும் டயட் பற்றியும், தானிய, மற்ற உணவு வகைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் பாதாம் வாழ்வின் அடிப்படை ஆரோக்கியத்திற்கே உதவி செய்கிறது என்றபோது மேலும் படிக்கும் ஆர்வம் ஏற்பட்டது. அதிலுள்ள தாமிரச் சத்து, பி வைட்டமின் சத்து பற்றியெல்லாம் எழுதியிருந்தார்கள்.

அதுசரி, பாதாம் முதலில் விலை ஜாஸ்தி. தவிரவும் இதை வாங்கி ஊறப்போட்டு அரைத்து... இன்றைய நவீன அவசர உலகில் யாருக்குப் பொறுமை இருக்கிறது. அப்போதுதான் மின்னல் அடித்தது. எம்.டி.ஆர். பாதாம் ஃபீஸ்ட் (பாதாம் விருந்து) அறிமுகப்படுத்தி இருக்கிறார்களே! ஆனால் இப்படிப்பட்ட பானங்

★ தொழிற்சாலையில்....



களில் எவ்வளவைத்தான் சேர்ப்பார்களோ தவிர உண்மையான பாதாமையா சேர்க்கப் போகிறார்கள்? சந்தேகம் வந்தது. பெங்களூருக்குத் தொடர்பு கொண்ட போது எம்.டி. ஆர். உணவுத் தயாரிப்பாளர்களில் ஒருவரான சதானந்தமய்யா சிரித்தார்.

''நாங்கள் என்ன செய்கிறோம் என்பதை நேரிலேயே வந்து பாருங்களேன்,...''

போனோம். எம்.டி.ஆரின் புகழ் பெற்ற ரவா இட்லியும், மசால் தோசையும், காப்பியும் நாவை விட்டு நீங்காதே. சாப்பிட்டு விட்டு அவருடைய தொழிற்சாலைக்குப் படையெடுத்தோம்.

''அதென்ன பாதாம் ஃபீஸ்ட் என்று பெயர் வைத்திருக்கிறீர்கள்? சாதாரணமாக மற்றவர்கள் தயாரிக்கும் பானங்கள் போலத்தானே உங்களுடையதும்? அப்புறம் விருந்து என்று என்ன பெயர்?''

''நாங்கள் என்ன போடுகிறோம் என்பதை பேக்டரியில் பார்ப்பீர்கள். விருந்து என்று பெயர் வைத்ததற்குக் காரணம் பாதாம் பருப்பிற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. அதன் சத்துக் குணங்களைப் பற்றிப் பார்க்கும் போது நிறைய சொல்லலாம். ஆனால் அதன் சுவைக்கு ஈடு வேறு ஒன்றுமேயில்லை என்றுதான் சொல்லவேண்டும். பாதாம் கீர், பாதாம் அல்வா செய்து ஒரு விருந்து வைத்தாலே அது உயர்தரமான விருந்து என அர்த்தமாகி விடும். எங்களுடைய பாதாம் ஃபீஸ்ட் பானமாக மட்டுமில்லாமல் விருந்தையும் செய்யும் என்பதால்தான் அந்தப் பெயர் வைத்தோம்.

சாதாரண எந்தப் பானங்களையும் போல இதையும் பாலில் கலந்து சாப்

என்னதான் சொன்னாலும் மனதில் உறுத்தல் மட்டும் போகவில்லை. பாதாம் பருப்பு என்பது ஒரு ஆடம்பரப் பொருள். உடம்பைப் பெருக்கச் செய்யும் பணக்கார உணவுதானே. இல்லை என்றார் டயட்டீஷியன் மாயா மோகன். இவர்கள் கலந்துரையாடலும் சுவையாகத்தான் இருந்தது.

**கலந்து கொண்டவர்கள் :**

டாக்டர் ஸ்ரீநிவாஸன் (மூத்த, ஆயுர்வேத மருத்துவர்)

திருமதி மாயா மோகன் (கன்சல்டன்ட் டயட்டீஷியன், ஸ்பாஸ்டிக் சொஸைடி ஆஃப் இந்தியா, லைஃப் மெம்பர், இன்டியன் டயடிடிக் அசோசியேஷன்.)

திருமதி காமாட்சி சந்தானம் (வங்கி அதிகாரி, தன் குழந்தைக்குப் பாதாம் அளிப்பவர்.)

திருமதி ஜெயந்தி (டயட்டீஷியன், தமிழ்நாடு மருத்துவமனை.)

டாக்டர் பார்த்தசாரதி (தலைவர், இரத்த சேமிப்பு வங்கி, தமிழ்நாடு மருத்துவமனை.)

திரு சதானந்தமய்யா (எம்.டி..ஆர் நிறுவனம்.)

திரு சுரேஷ் குமார் (மார்கெட்டிங் கன்சல்டன்ட், எம்.டி..ஆர்:)

மாயா மோகன் : ''உங்கள் பாதாம். ஃபீஸ்டில் பாதாம் பருப்பு எவ்வளவு சேர்க்கிறீர்கள்?''

சதானந்தமய்யா ''ஐந்தில் ஒரு பங்கு பாதாம் பருப்பு, அதே போல சிறிது குங்குமப் பூவும் இருக்கும்.

ஜெயந்தி : ''ஈரப்பதம்.....?''

சதானந்தமய்யா : ''4%.''

பார்த்தசாரதி : ''அது நல்லதுதான். ஈரப் பதம் குறைவாக இருந்தால் ஷெல்ஃப் லைஃப் அதிகமாக இருக்கும்.''

மாயா : ''பாதாம் பருப்பைப் பொறுத்தவரை அது மற்றெல்லா கொட்டை வகை உணவுகளைப் போலவே சத்து நிறைந்தது. அவ்வளவுதான். இதில் இருக்கும் அதே சத்துக்கள் வேர்க் கடலையிலும் இருக்கிறது.''

பார்த்தசாரதி : ''ஆனால் வேர்க் கடலையில் கீர் செய்ய முடியாதே. தவிரவும் பாதாமில் தாமிரச் சத்து இருக்கிறது. இது ரத்த அணுக்களை வலுவுள்ளதாக ஆக்க உதவுகிறது. அதே போல இரத்தத்தைச் சுத்தப்படுத்தும் சக்தியுடையதாகவும் இருக்கிறது.''

மங்களா ரமேஷ் : ''மாயா, நீங்கள் கம்மா கம்மா'பாதாம் பருப்பு எல்லா பருப்புக்களையும் போலத்தான்



● பார்த்தசாரதி, ஜெயந்தி, மாயா, காமாட்சி...

பிடலாம். இதிலேயே இன்னொரு சிறப்பு மற்ற பானங்களுக்கான பொடிகளை சூடான பால் அல்லது நீரில்தான் கலக்க முடியும். ஆனால் பாதாம் ஃபீஸ்ட்டைக் குளிர்ந்த பாலிலேயே கலக்கலாம். ஃப்ரிட்ஜில் வைத்துச் சாப்பிடலாம். சூடாகவும் சாப்பிடலாம். இதே பௌடரைக் கொண்டு ஐஸ்கிரீம், பாதாம் கீர், பாலத்தி எனப் பல சிறப்பு அயிட்டங்களையும் மிக எளிதில் தயாரித்து விடமுடியும், ஒரு சிறிய சமையல் குறிப்புப் புத்தகத்தையும் வைத்திருக்கிறோம்.''

ஆனால் பாதாம் முழுவதும் கரையாமல் கரகரவென்று தொண்டையில் நெருடிக் கொண்டே இருக்கும் இல்லையா....?''

''ஆமாம். பாதாம் பருப்பினைச் சாதாரணமாக முழுமையான பௌடராக்க முடியாது. ஆனால் நான் குறிப்பிட்ட ஒரு முறையில் அதனை மற்ற பொருட்களுடன் சேர்த்து முழுமையான பௌடராக்குகிறேன். அது வியாபார இரகசியம்....'' என மர்மமாகச் சிரிக்கிறார் சதானந்தமய்யா.

அதற்குள் பொம்மனுப்பேட்டையிலுள்ள அவர்களுடைய தொழிற்சாலை வந்து விடுகிறது. இடிக்கப்படும் சாம்பார் பொடி, ரசப் பொடி, மஞ்சள் பொடி வாசனைகளின் கூட்டுக் கலவை. அடுத்த தொழிற்சாலையில் இன்ஸ்டன்ட் ரவா இட்லி பொடி, இன்ஸ்டன்ட் குலோப்ஜாமூன் பௌடர் தயாரிக்கும் மென்மையான வாசனை.

பாதாம் பவுடர் பொடிக்கவென்று தனியாக மெஷின் மற்றவற்றிலிருந்து விலகி 'பந்தா'வாக அமர்ந்திருக்கிறது. கொட்டை கொட்டையான பாதாம்

அப்படீங்கறீங்க. பாதாம் பாதாம்தானே. எல்லா நடிகைகளும் நடிகைகள்தான். ஆனாலும் குஷ்பூன்னா குஷ்புதானே?''. (ஒரே சிரிப்பு.)

ஸ்ரீநிவாஸன் : ''பாதாம் பருப்பை எங்கள் ஆயுர்வேதத்தில் அரி . தாகத்தான் பயன் படுத்துவோம். 'விதளம்' என்று சொல்லப்படும் இரண்டாக உடையும் இத்தகைய பருப்புகளை 'அமிர்த் ப்ராசக்ருதம்' எனப் படும் மருந்திற்குப் பயன்படுத்துவோம்..டி.பி., ப்ராங்கைல் ஆஸ்துமா உடையவர்களுக்குச் சிபாரிசு செய்வோம். அதே போல பாதாம் எண்ணெயைக் கர்ப்பிணிப் பெண் கள் வயிற்றில் தடவிக் கொண்டால் வயிற்று இறுக்கம் விட்டுப் போகும். பாதாம் சிரப் குழந்தைகளுக்குக் · கொடுப்பதுண்டு.''

காமாட்சி : ''என் குழந்தைக்கு டாக்டர் பாதாம் பருப்பை அரைத்துத் தரச் சொன்னார். அதனால் தினமும் பருப்பு ஊறப் போட்டு அரைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தேன். நான் வேலை பார்க்கும் பெண். சிரமமாகத்தான் இருந்தது. ஆனால் இப்போது எம்.டி..ஆர். ரெடிமேடாகவே தந்து விடுவதால் சௌகர்யமாக இருக்கிறது. இதில் ஐஸ்கிரீம் செய்வேன். ரொம்ப நன்றாக வரும்.''

பார்த்தசாரதி : ''கொலஸ்ட்ரால் வருமோ?''

மாயா : ''பாதாம்பருப்பில் கொலஸ்ட்ரால் தரும் தன்மை கிடையாது. ஏனென்றால் பொதுவாகவே காய்கறிகள், மரங்களிலிருந்து வரும் எந்த உணவுப் பொருளுக்குமே கொலஸ்ட்ராலை அதிகரிக்கும் தன்மை இல்லை. மிருகக் கொழுப்போ அல்லது மிருகத்திலிருந்து நாம் எடுத்துக் கொள்ளும் உணவுகளுக்குத்தான் அந்தக் குணம் உண்டு.''

சுரேஷ் குமார் : ''நாங்கள் பெங்களூரில் குழந்தைகளிடம் பாதாம் ஃபீஸ்ட்டைக் கொடுத்தோம். அதன் கலரும், சுவையும் அவர்களுக்கு ரொம்பவும் பிடித்திருந்ததால் விரும்பிச் சாப்பிட்டார்கள்.''



....ஸ்ரீநிவாஸன், சதானந்தமய்யா, சுரேஷ்குமார்.

படங்கள் : ஓம். சுப்ரமணியம்



நில்லை. இயற்கையான எளிய வண்ணங்கள் அவர்களுக்குப் பிடித்துத்தான் இருக்கிறது...'' என்கிறார் சதானந்தமய்யா.

அடுத்து அவர்களுடைய உணவுத் தரத்திற்கான பரிசோதனைக் கூடத்தைப் பார்த்தோம். பெங்களூரிலேயே சிறந்த பரிசோதனைக் கூடங்களில் ஒன்றான அதன் தலைமையாளர் ராமண்ணாவிடம் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு உபயோகமான தகவலைச் சொன்னார்.

பருப்பு, சர்க்கரை, காஷ்மீரக் குங்குமப் பூ. இவற்றை நம்மெதிரிலேயே கலக்கிறார்கள். பிறகு அதற்கான மிஷினில் போடுகிறார்கள். நைஸ் பவுடராக வெளிவருகிறது. அதற்குப் பிறகு பால் பவுடரைக் கலந்து எல்லாம் முழுமையாகக் கலக்க மற்றொரு மிஷினில் போட அது திருப்பித் திருப்பிச் சுழற்றிப் பாதாம் ஃபேஸ்ட்டாகத் தருகிறது.

''நாங்கள் உபயோகிப்பது அமெரிக்காவிலிருந்து வரும் இனிப்பு பாதாம் பருப்பு. இது கொட்டையாக இந்தியாவிற்கு வரும். இங்கு இறக்குமதி செய்து கொட்டையை உடைத்துப் பருப்பை எடுத்துப் பெங்களூருக்கு வரவழைக்கிறோம். பிறகு மற்ற பொருட்களையும் சேர்த்து அரைக்கிறோம்.''

''என்ன 'பிரசர்வெடிவ்' உபயோகிக்கிறீர்கள்?''

''ஒன்றும் இல்லை. இதற்குத் தேவையில்லை. அதே போல உணவுப் பொருட்களுக்கு உபயோகப்படுத்தும் கலரும் நாங்கள் சேர்ப்பதில்லை. சில சமயங்களில் மிக மைல்டாகச் சேர்க்கிறோம். பாதாமும், குங்குமப்பூவும் இணைவதால் அதன் இயற்கை நிறமான லைட் மஞ்சள் கலரே இதற்குப் போதும்...''

''ஆனால் பாதாம் கீர் என்றாலே நல்ல மஞ்சள் நிறம்தானே நினைவுக்கு வரும்....''

''அது சரியில்லை. இயற்கையான மெல்லிய மஞ்சள் வண்ணமே போதும். செயற்கையான கலரூட்டல் தேவையில்லை. இதனுடைய சிறப்பை மக்களுக்கு உணர்த்தினோமானால் அவர்களே புரிந்து கொள்வார்கள். தவிரவும் மக்களே இப்பொழுதெல்லாம் 'காடி' கலரை விரும்புவ

'' மிளகாய்ப் பொடி போன்றவற்றை வீட்டில் அரைப்பதுதான் நல்லது. அல்லது தரமான கம்பெனிகளிடமிருந்து வாங்குங்கள். மிளகாய்ப் பொடிகளில் சாயம் கலந்து செக்கச் செவேலென விற்பார்கள். உடம்பிற்கு அவ்வளவும் கெடுதல். அதில் சாயம் கலந்து இருக்கிறார்களா எனப் பார்க்க ஒரு எளிய வழி -

ஒரு டிஷ்யூ பேப்பரில் கொஞ்சம் பொடியை எடுத்து இரண்டு சொட்டு நீர் விடுங்கள். அந்நீரை பேப்பர் உறிஞ்சிப் பரவும். அந்தப் பரவுகின்ற நீர் கலர் இல்லாமல் இருந்தால் அது சாயம் கலக்காத பொடி. இல்லையென்றால் பேப்பர் முழுக்க சாயம் பரவி சிவப்பாக இருக்கும்.

அதே போல மற்றொரு தீங்கு டீயில் சாயம் கலப்பது. பத்துகப் டீ தயாரிக்க அதற்கான டீயைப் போடமாட்டார்கள். ஐந்து கப்பிற்கான டீயைப் போட்டு விட்டு, மீதிக்கு கலர் வருவதற்காக சாயத்தைக் கலப்பார்கள். பார்க்கும் போது வித்தியாசமே தெரியாது. உடம்பிற்கு அத்தனையும் கெடுதல். டீப்பொடியைத் தரமான கம்பெனிகளிடம் மட்டுமே வாங்குங்கள்.

விலை குறைவாக இருக்கிறதே என தரம் குறைந்த பொருளை எப்போதுமே வாங்காதீர்கள். உடல் நலம் கெட்டால் மருத்துவச் செலவும் சேருமே....''

பாதாம் ஆராய்ச்சியை அதோடு முடித்துக் கொண்டு கிளம்பினோம்.

**- பவித்ரா**

# வெட்கப்படுகிறேன்; ஆணாகப் பிறந்ததற்கு!

சென்ற இதழில் ஆபாசப் பாடல்களைக் கண்டித்து வந்திருந்த 'சில பிரச்னைகள்; சில வார்த்தைகள்!' கட்டுரைக்கு ஏகமான வரவேற்பு. வாசக, வாசகியரின் ஏகோபித்த ஆதரவிற்கு இரு கரம் கூப்பி நன்றி. நாம் அனைவரும் ஓரணியில் திரண்டு நின்றோமானால் மிகுந்த பலன் உண்டு. சென்ற மாதம் நான் சென்ற இடங்கள், கலந்து கொண்ட விழாக்களில் எல்லாம் இதைப் பற்றித்தான் பேச்சு. பல பெண்கள் ஆவேசத்தோடு, "நாம ஏதாவது செய்யணுங்க" என்றார்கள்.

மனம் நொந்து எழுதியிருந்த மிகப் பல கடிதங்களில் சிலவற்றை மட்டுமே எங்களால் பிரசுரிக்க முடிகிறது.

– ஆசிரியர்.

★ கட்டுரையைப் படித்து விட்டு வருந்தினேன், ஆணாகப் பிறந்ததற்காக! கீழ்த்தரமான எண்ணங்களை எல்லாம் பாடலாக வசனமாக நடிப்பாக வெளிப்படுத்திய திரைப்படத் துறையினருக்கு – முற்றுப் புள்ளி வையுங்கள், இந்த ஈனமான செய்கைக்கு! உங்களை ஈன்ற தாய், பாலூட்டி, தாலாட்டி, சீராட்டி, பள்ளி யனுப்பி, இரவு பகலாக மாடாய் உழைத்து உங்களைப் பேணி வளர்த்த தாய்க்குலம் குமுறிக் குமுறிக் கதறுகிறாள், உங்கள் கீழ்த்தரமான செய்கைக்காக!

இந்தச் செயலுக்கு உங்களுக்குப் பரிசு....

போரா! புகழா! சகோதரிகளே வயிற்றுப் பிழைப்புக்காக, மானத்தை கப்பலேற்ற வேண்டுமா! பாவ புண்ணியத்திற்குப் பயந்து, மானமுடன் வாழும் லட்சோபலட்சம் தாய்க்குலத்திற்குப் பங்கம் விளையுமாறு உங்கள் அங்க சேஷ்டைகளை ஆண் வர்க்கத்துடன் ஆடி ஓடி நடிக்க வேண்டுமா? இதுவும் ஒரு கேளிக்கையா? என்றாவது ஒரு நாள் ஓர் இல்லத்தில் கண்ணியமாக, கட்டுப்பாடாக, கௌரவமாக வாழ எண்ணமே இல்லையா! துணிவாக, திடபுத்தியுடன் புறக்கணியுங்கள் இந்த ஆபாசக் காட்சிகளுக்கு.

மைசூர், எஸ்.தண்டபாணி.

★ பாடல்களை எழுதியவர்களின் மகளைக் கூப்பிட்டு உன் அப்பா இப்படி எழுதியுள்ளாரே! மனைவியைக் கூப்பிட்டு உன் கணவர் இப்படி எழுதியுள்ளாரே என்று மாதர் சங்கங்கள் கேட்க வேண்டுமென்பது மணியான யோசனை.

ஈரோடு-1, எம்.என். மாசிலாமணி.

★ "நல்ல மாட்டுக்கு ஒரு சூடு" என்ற சொல்லுக்கு ஏற்ப தங்களின் சில பிரச்னைகள் சில வார்த்தைகள் அருமையிலும் அருமை. அதிலேயும், "தவறுகள் உள்ளன என்றால் உடனே மேடையேறி பதில் சொல்லத்தான் ஆயத்தமாகிறார்கள்" சத்தியமான சாட்டையடி.

சென்னை-90, ரேவதி.

★ ஒரு வருத்த வேண்டிய செய்தி என்னவென்றால் 'அடலஸண்ட்' பெண்களுக்கு இந்தப் பாடல்களின் மீது ஒரு மோகம் இருக்கிறது. 'சோளிக்கே பீச்சே' போன்ற இலக்கியத் தரம் வாய்ந்த பாடல்களுக்கு நிறைய ரசிகைகள் உள்ளனர். நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?

சென்னை-15, பிரேமா சேதுநாராயணன்.

★ அதிலும் குழந்தைகள் மழலையில் இந்தப் பாட்டுக்களை பாடும் போது, உயிரே போய் விடும்.

பரமக்குடி, பா.உஷாராணி.

★ கேட்டால் ரசிகர்கள் இதைத்தான் விரும்புகிறார்கள் என்று பழியைத் தூக்கி ரசிகர்கள் மீது போடுவார்கள். (இது கூட பரவாயில்லீங்க. ஒரு பத்து வயசு சிறுவன், எப்படி, எப்படி சமைஞ்சது எப்படி?னு சினிமா பாட்டு பாடியதைக் கேட்டு நொந்து போயிட்டேன். இளைய தலை முறையை நினைச்சா பயமா இருக்கு).

சேலம்-1, கே.ராஜுபாஜு.

★ கட்டுரையில் குறிப்பிட்டிருந்த படி, சம்பந்தப்பட்டவர்களின் மனைவி, மக்களிடம் இது பற்றிப் பேசுவதே எனக்குச் சிறந்த வழியாகப் புலப்படுகிறது. இப்படி எழுதுபவர்கள் மனத்திலும் உடம்பிலும் துளியாவது கூச்சம் இருந்தால், தன் வீட்டுப் பெண்களிடம் இப்படி எழுதுவதில் என்ன தவறு என்று வாதிட மாட்டார்கள்.

சென்னை-114, – பாரதிசந்திரன்.

★ சென்னையில் பரவாயில்லை. எல்லாமே அரசுப் பேருந்துகள். ஆனால் இங்கு நிறைய தனியார் பேருந்துகள். அவற்றில் காலையில், மாலையில், போடும் பாடல்களைக் கேட்க வேண்டிய கட்டாய நிலை. கல்லூரி மாணவிகள், மாணவர்கள், வேலைக்குச் செல்வோர், குழந்தைகள் ஒரே பேருந்தில் பிரயாணம் செய்யும் சமயம் உடல் உறவைப் பகிரங்கப்படுத்தும் பாடல்களைக் கேட்கும்போது கூசிப் போகிறோம். கவிஞர்களை, எழுத்தாளர்களை, ஆசிரியர்களை சரஸ்வதி தேவியின் பிரதிநிதியாகக் கருதும் நம் நாட்டிற்கா இந்நிலை?

திருச்சி, – எஸ்.ராதிகா.

★ இரவு நேர பஸ்களில் தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் பயணம் செய்ய நேரிடுகிறது. அப்போது வீடியோ என்ற பெயரில் (அவர்களுக்கு அந்தப் படங்கள் எப்படிக் கிடைக்குமோ) மனதில் அருவருக்கத் தக்க எண்ணங்களை உண்டுபண்ணும் படங்கள். ஏற்கனவே எந்தச் சரக்கைப் போட்டுக் கொண்டு யார் ஏறியிருக்கிறார்கள் எனத் தெரியாது. அதில் இது மாதிரி படங்கள் வேறு வெறித்தனத்தை தூண்ட.. இன்னும் என்னவெல்லாம் கேவலங்களை நாம் சந்திக்க வேண்டுமோ தெரியவில்லை. சுதந்திரம் என்ற பெயரில் எத்தனை அவலங்கள் ஆண்டவனே.

திண்டுக்கல், எஸ்.சியாமளா.

★ அந்த காசுக் கவிஞர்களுக்கு இது "செவிடர் காது சங்கு சமாசாரம்" என்பது ஒன்றேதான் வேதனைச் சமாசாரம்!!

சிதம்பரம், த.சூர்யா.

# சொல்ல விரும்புகிறோம்!

## ‘எப்போது பெயரை மாற்றிக் கொண்டீர்கள்?’

★ சித்த வைத்தியம் பார்க்கும் பிரம்மானந்த ஸ்வாமிகள் பற்றிய செய்தியும், அவர் வழங்கும் எளிய அதே சமயத்தில் பயன் தரக்கூடிய மருத்துவ முறை பற்றியும் எழுதியிருந்தீர்கள். இப்பொழுதெல்லாம் ஆங்கில மோகம் இருப்பது போல் ஆங்கில வைத்திய முறை (அலோபதி)களிலும் மோகம் கொண்டு தங்கள் உடலைக் கெடுத்துக் கொள்ளும் நோயாளிகள் இம்மாதிரி சித்தவைத்திய முறையை இனம் கண்டு கொண்டு (இந்திய வைத்ய முறையை) மேற்கொண்டால் உடலுக்கு நல்லது.
திருச்சுழி - 626 129, கந்தர்-அழகேசன்.

★ சுற்றுலா செல்ல நினைப்பவர்களுக்கு நிரந்தரமாக பயன்தரக் கூடிய வகையில் படைக்கப்பட்டிருந்தது. குறிப்பாக மலை வாசஸ்தலங்களைப் பற்றிய (சில மலைவாசஸ்தலங்கள்) தகவல்கள் இரத்தினச் சுருக்கமாகவும் அதே சமயம் தெளிவாகவும் தொகுத்தளிக்கப்பட்டிருந்தது குறிப்பிடத் தக்கது.
சென்னை-78, மேகலா மாணிக்கம்.

★ மலை வாசஸ்தலங்களைப் பற்றிய தகவல்கள், அந்த மலை வாசஸ்தலங்களின் சிறப்புக்களை மானசீகமாக நினைத்து மகிழச் செய்திடும்படி இருந்தது. குறிப்பாக சிம்லா செல்வது எப்படி? என்ற தகவல், எங்களது எதிர்காலத் திட்டத்திற்கு (சிம்லா டிரிப்) பெரிதும் உதவிக்கரமாக இருந்தது.
கோவை-44, ஜி.ஜெயந்தி.

★ சின்னப் பெண் சிறுகதை படித்தேன் ‘எல்லாரும் எல்லாம் பண்ண முடியாதுங்க. நம்ம தேச்சருக்கு ஒத்துப் போகிற விஷயத்திலதான் வெற்றிபெற முயற்சிக்கணும்’ என்ற வார்த்தைகள் யதார்த்தமான அர்த்த முள்ள வார்த்தைகள்.
திருவண்ணாமலை-1, ஆர்.அருணாசலம்.

★ ‘எத்தனை நாட்களில் எங்கு போகலாம்?’ என்ற தலைப்பில் தொகுத்தளிக்கப்பட்டிருந்த மூன்று வகை சுற்றுலா பற்றிய தகவல்கள், பதட்டப்படாமல் நிதானமாகத் திட்டமிட்டு குடும்பத்தார் அனைவருடன் ஒன்று சேர்ந்து சுற்றுலா சென்று வருவதற்கான பட்ஜெட் ஒன்றினை உருவாக்க வழி கோலியிருந்தது.
திருச்சி-2, ராஜேஸ்வரி ராம்குமார்.

★ பெண் புரோகிதர்கள் திருமணம் நடத்தி வைக்கிறார்கள் என்ற செய்தி இனித்தது. கோவில்களிலும் பெண் அர்ச்சகர்கள் பணி புரிந்தால் சிரத்தையும், பக்தியும் கூடும்.
தஞ்சாவூர், கோ. சுஜாதா.

★ எறும்புப் பொடிக்கோ, மஞ்சள் பொடிக்கோ நீங்காத எறும்புத் தொல்லை, மங்கையர் மலரின் யோசனைப்படி பெருங்காயத் தூளைத் தூவியதில் அறவே நீங்கி விட்டது.
மதுரை-625016, எஸ்.ஸ்வேதா.

★ வித்யா, சுப்ரமணியம் அவர்களின் ‘‘உச்சி தனை முகர்ந்தால்’’ தொடர் கதையின் முடிவு வெகு இயல்பாகவும் நாட்டு நடப்பிற்கு ஏற்றாற்போலவும் அமைந்திருந்தது. படைத்த ஆசிரியர்க்கும், வெளியிட்ட ஆசிரியர்க்கும் பாராட்டுக்கள்.
திருவிடை மருதூர்-612104, ஏ.சிந்துபாரதி.

★ சிறுசிறு துணுக்குகளாகத் தமிழ்நாட்டில் சுற்றிப்பார்க்க வேண்டிய இடங்கள், கட்டுரையாக இந்தியாவில் உள்ள சுற்றுலாத் தலங்கள், முதலியவற்றைப் பற்றி விரிவாக வெளியிட்டு, கோடை விடுமுறைக்கு எங்கு போவது என்பதை தீர்மானிப்பதை எளிதாக்கி விட்டீர்கள். அதே சமயம் எதைத் தேர்ந்தெடுப்பது எதை விடுவது என்று முடிவு செய்வது சிரமமாகி விட்டது (அனைத்துமே அருமையாக இருப்பதால்) என்பதையும் மறுப்பதற்கில்லை.
திருப்பரங்குன்றம், டி.கே.சுப்பிரமணியன்.

★ தென்னக இரயில்வேயில் மக்கள் தொடர்பு அதிகாரியான என்னுடைய பெயர் எம். ஷண்முகம். ஆனால் என் பெயரை ப. ஷண்முகம் என்று போட்டுவிட்டு புகைப்படத்திலும் சுவாமிநாதன் என்று போட்டு விட்டீர்களே? ‘எப்போது உங்கள் பெயரை மாற்றிக் கொண்டீர்கள்?’ என்று என் நண்பர்கள் கேலி செய்கிறார்கள்.
எம். ஷண்முகம், சென்னை.

அட்டை வண்ணப்படம் :
டி.சி.நாகேஷ்

# ஹா...ஹூ... கராத்தே: பெண்களுக்கு ஏற்றது!

பெண்கள் தனியாக கால நேரம் பார்க்காமல் வெளியே பல இடங்களுக்கும் செல்ல வேண்டிய காலம் இது. படிக்கவும், பல கலைகள் பயிலவும், பிழைப்பிற்காக வேலை தேடி- தனியே ஊரைவிட்டு ஒதுக்குப்புறமான (சில சமயம் ஆள் அரவமே இல்லாத) இடங்களுக்கும் கூட செல்ல வேண்டி வரும் போது நமக்குப் பாதுகாப்பாக யாரை அழைத்துக் கொள்ள முடியும்? பெண் குழந்தைகளுக்கு 5 வயதாகு முன்பே பாட்டு, டான்ஸ், இசைக் கருவிகள் எனப் பலவற்றைச் சொல்லிக் கொடுப்பது போல கராத்தேயும் கற்பிப்பது- ஒரு சரியான பாதுகாப்பை நாம் தருவது போலாகும்.

கராத்தே சண்டைப் பயிற்சியில் அகில இந்திய அளவில் 16முதல் 18 வயதுடைய பெண்களில் தங்கப் பதக்கம் (இந்த ஆண்டு) பெற்று முதன்மையாக நிற்பவர் செல்வி. யோகிதா. 12-ம் வகுப்பு மாணவியான இவர் பிளாக் பெல்ட்டில் முதல் நிலை பெற்றுள்ளார்.

''எனக்குச் சிறிய வயதிலிருந்தே கராத்தே கற்றுக் கொள்ளும் எண்ணமிருந்தது. ஆனால் 7-வது படிக்கும் போது தான் இந்தப் பயிற்சியில் சேர்ந்தேன். என்னுடைய தோழிகள் சிலர் இப்பயிற்சி பெறுவதை என் பெற்றோரிடம் சொல்லி பிடிவாதம் பிடித்து கராத்தே வகுப்பில் சேர்ந்தேன்.

முதலில் இப்பயிற்சிக்கான சீருடையுடனேயே வெள்ளை பெல்ட் தரப்படும். இந்த பெல்ட்டிலும் இரண்டு நிலையுண்டு. ஜூனியர், சீனியர். முதல் ஆறுமாதம் ஜூனியராகவும், பின் ஆறு மாதங்கள் சீனியராகவும் கணக்கிடப்படும். இரண்டாவது வருடம் (அடுத்தது) பச்சை பெல்ட். இதிலும் ஜூனியர், சீனியர் இரண்டு நிலை உண்டு. இதற்கான பயிற்சி முன்பை விடச் சற்று கடினமாகவேயிருக்கும். அடுத்த பயிற்சி பிரௌன் பெல்ட்டிற்காக. இதில் ஜூனியர், சீனியர் மற்றும் சீனியர் மோஸ்ட் என்ற மூன்று நிலை உண்டு.

இப்பயிற்சி முடிந்து அடுத்த நிலைக்குச் செல்ல ஏறக்குறைய 1½ வருடமாகும். அடுத்து தரப்படுவதுதான் பிளாக் பெல்ட். இதில் மொத்தம் பத்து நிலை உண்டு. நான் இப்போது 2-வது நிலைக்கான பயிற்சியில் இருக்கிறேன். இப்பயிற்சியினால் சதை நன்கு கெட்டியாகும். உடல் நன்கு இளைத்து அளவோடு, அழகாக இருக்கும். சிலர் தவறாக நினைப்பது போல கராத்தே சொல்லிக் கொள்வதால் அழகு ஒருநாளும் குறையாது. உரத்தக் குரல் இப்பயிற்சிக்கு ஒரு பிளஸ் பாயிண்ட். அதிக எமோஷனுடன் - குரல் கொடுத்துக் கொண்டே அடிப்பதினால் எதிரி நிலைகுலையும் நிலை ஏற்படும். சென்னையில் மட்டும் இந்தக் கலைக்கு ஒரு நல்ல 'ரெஸ்பான்ஸ்' உள்ளது. 150 முதல் 200 பெண்கள் இப்பயிற்சி பெறுகின்றனர். மற்ற இடங்களில் இந்தக் கலைக்கு இன்னும் வரவேற்பு ஏற்பட வேண்டும்.



வாரத்திற்கு மூன்று கிளாஸ்கள் உண்டு. குறைந்தபட்சம் 2 வகுப்புகளுக்காவது வர வேண்டும். நான் இப்பயிற்சியில் சேர்ந்த முதல் ஆண்டிலேயே மாவட்ட அளவில் 3-ம் இடத்தைப் பிடித்தேன். இது வரை ஆண்டுக்குக் குறைந்தது 3 போட்டிகளிலாவது நான் பங்கு பெறுகிறேன். அவற்றில் முதல் அல்லது இரண்டாவது பரிசும் பெற்று வருகிறேன். இப்பயிற்சிக்காக தனியான உணவுக் கட்டுப்பாடு இல்லை. நல்ல சத்துள்ள உணவுகளை நன்கு உண்ண வேண்டும். வெளியூரில் போட்டிகள் நடக்கும் நேரத்தில் மட்டும் பள்ளிக்கு லீவு போட வேண்டிய கட்டாயம் உண்டு. என் பெற்றோர்களுக்கும் தற்போது இதில் விருப்பம் வந்து விடவே என் முன்னேற்றத்திற்கு முடிந்த அளவில் உதவியும், ஊக்கமும் தருகின்றனர். (ஆரம்பத்தில் அரை மனதுடன் சம்மதித்தனர்.)

உலக அளவிலான போட்டிகளில் - ஒலிம்பிக் பந்தயங்களில் கலந்து கொள்ள எனக்கு மிகுந்த விருப்பம். இவைகளில் கலந்து கொண்டு நல்ல ஓர் இடத்தைப் பெறுவதுதான் என் எதிர்கால நோக்கம். தற்காப்பிற்கு இது ஒரு சிறந்த கலை என்பதை யாராலும் மறுக்கவே முடியாது'' என்றார் செல்வி யோகிதா.

இக்கலை பற்றி மேலும் விவரங்களை யோகிதாவின் குருவான மாஸ்டர் ஆர்.ஏ. கோவிந்தராஜன் அவர்களிடம் கேட்டபோது:-

''இப்பயிற்சியைத் தொடங்க குறைந்தபட்ச வயது 70 மாதங்கள். எந்த ஒரு விளையாட்டும் புரியும் நேரம் இந்த வயது. முதலிலே ஒரு மணிநேரப் பயற்சி - சில சாதாரண உடற்பயிற்சிதான். பிறகுதான் தொழில்நுட்பம் துவங்கும். முதல்லே மாவட்ட அளவிலான போட்டிகளிலும், பின்பு மாநில அளவு, அகில இந்திய அளவு எனப் போட்டிகள் தொடர்ந்து ஆசிய அளவிலும் - உலக அளவிலும் செல்லலாம். பிளாக் பெல்ட்டில் 10 நிலை உண்டு. 10-வது நிலை என்பதுதான் சிவப்பு பெல்ட். உலக அளவில் இந்த சிவப்பு பெல்ட் பெற்றவர்கள் ஜப்பானியர் மட்டுமே. நான் தற்போது 5-வது நிலையில் இருக்கிறேன். உலக அளவில் 'ரெட் பெல்ட்' பெற்ற பெண்கள் யாருமே கிடையாது. சிவப்பு பெல்ட் பெறும்போது 60 வயது தாண்டிவிடும். இவர்களை 'கிராண்ட் மாஸ்டர்' என்பார்கள். எங்களுடைய கிராண்ட் மாஸ்டர் கென்னி மாபுனி ஜப்பானில் இருக்கிறார். இந்த ஆண்டு ஜனவரி மாதம் திருவனந்தபுரத்திற்கு வந்திருந்தார். எங்களுடைய சீனியர் மாஸ்டர் 'மோனஸ் திலக்'- திருவனந்தபுரத்தில் இருக்கிறார்.

இக்கலை தற்காப்புக்கு மட்டுமின்றி உடல், மனம் இரண்டுமே வலிமை பெறவும், நினைவாற்றல் பெருகவும் உதவும். சிவப்பு பெல்ட் பெற்றவர்கள் கடவுளுக்கு ஒப்பானவராக மதிக்கப்படுவர்.

இதை ஒரு விளையாட்டாகக் கருதி போட்டிகள் நடத்தினாலும் சில சமயம் நம்மையும் மீறி அடிபட வாய்ப்பிருப்பதால் போட்டிகள் நடக்கும் நேரம் அவசியம் டாக்டர்கள் அருகே இருக்க வேண்டும். நான் இத்துறையில் பயிற்சி பெற ஆரம்பித்து 18 வருடங்கள் ஆகிவிட்டது. முதலில் விழுந்தால் அடிபடாத வகையில்தான் பயிற்சி தரப்படுகிறது. ஆனாலும் தற்காப்புக்காகப் போராடும்போது அடிபடாமல் முடியுமா? இந்தப் பயிற்சிக்கு முக்கிய தேவை பெற்றோர் தரும் ஊக்கமே. பெண்களின் இதில் சேர வரும்போது இந்த ஊக்கம் மேலும் தரப்பட வேண்டும். திருமணம் ஆகும் வரை பயிற்சி செய்வது போல திருமணம் ஆன பின்பு இப்பயிற்சியைச் செய்ய சூழ்நிலை அமைவது கடினம். திருமணமான பின்பு இப்படிப் பயின்ற பெண்களில் பலர் இன்று பயிற்சியாளராகவும் நடுவராகவும் உள்ளனர்.

மனதளவில் ஒரு வணக்கம், கீழ்ப்படிதல், நல்லதொரு ஒழுக்கம் - இவையனைத்தையுமே தரும் இக்கலை இன்றைய நிலையில் பெண்களுக்கு மிக மிக அவசியமானது. இதைக் கற்பதற்கு வயது ஒரு தடையல்ல. எந்த வயதிலுமே கற்க முடியும். 45-வயது தாண்டிய ஒருவர் தற்போது என்னிடம் பயின்று வருகிறார். இதைக் கற்க உயரம், எடை ஆகியவை எதுவும் குறிப்பிட்டபடி அமைய வேண்டும் என்பதில்லை. முக்கியத் தேவையானது ஒன்றே ஒன்றுதான்- அது 'என்னால் முடியும் என்ற நம்பிக்கை' ஒன்றுதான்!'' என்றார் திரு. கோவிந்தராஜன்.

ஆம்! முடிக்க முடியும் என்ற எண்ணம் ஒன்றே ஆயிரம் சாதனைகள் புரிய வழி வகுக்குமில்லையா?

– வைதேகிதேசிகன்

# OWN YOUR FLAT AT MADRAS

**FLATS UNDER CONSTRUCTION**




- ▲ We offer deluxe flats and villas at various decent areas in Madras, suitable to your budget.
- ▲ Payment linked with the progress at site through interest free instalments or cashdown with 10% discount.
- ▲ Finance arranged from leading financial institutions.
- ▲ Aesthetically, Tastefully completed with all modern amenities.
- ▲ Quality construction and Timely possession.




## ASSOCIATED BUILDERS


2nd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017. INDIA
Ph : Off : 440224 / 440210. Res : 2345244. Fax : (044) 2344333

## மேஷ ராசி:

அசுவினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

சுபச் செலவு ஒன்று ஏற்படும். வீடு, மனை வாங்கும் விதத்திலோ அல்லது திருமணம் போன்ற வகையிலோ அது ஏற்படலாம். சகல கலைகளுக்கும் காரகனாகிய சுக்கிரன் உச்சம் பெற்றும் வித்யாகாரகனாகிய புதன் இலாபத்தில் அமர்ந்தும் இருப்பதால் இந்த ராசியில் பிறந்துள்ள குழந்தைகள் மாதத்தின் முற்பகுதியில் ஏதேனும் கலை ஒன்றைக் கற்கும் வாய்ப்பினைப் பெறுவார்கள். தேர்வு எழுதும் மாணவர்களுக்கும்கூட மாதத்தின் முற்பகுதி சாதகமாக உள்ளது. பிற்பகுதியில் எதிர்கொள்ளும் தேர்விற்கு நன்கு தயாரித்துக் கொண்டு முதலிடத்தைப் பெற முந்துங்கள். சந்திரகுமாரனான புதனும், சூரிய குமாரனான சனியும் இலாபத்தில் இருப்பதால் தொழிலில் எதிர்பார்த்த முன்னேற்றம் உண்டு. நன்றாக இருக்கிறதே என பிற்பகுதியில் மெத்தனமாக இருந்து விட வேண்டாம். முயற்சி தொடரட்டும். முன்னேற்றம் ஏற்படும்.இது எத்துறையினருக்கும் பொருந்தும். எட்டில் உள்ள ராகு பிரயாணத்தினாலும், மற்றும் சூதாட்டம் போன்றவைகளில் ஈடுபடத் தூண்டும் என்பதாலும் பணம் கைவிட்டுப் போகும். அதனுடன் மன அமைதியும் கெடும். எனவே துர்க்கைக்கும் இராகு, கேதுவுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. அரசியலில் ஈடுபட்டவர்கள் சூரியனை வணங்குங்கள். கீர்த்தியும், புகழும் உங்களைத் தேடி வரும்.



# இந்த மாதம் எப்படி? ஏப்ரல் '94

## ரிஷப ராசி:

கிருத்திகை 2,3,4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1,2-ஆம் பாதங்கள்.

இராசிநாதன் மாதத்தின் முற்பகுதியில் உச்சம் பெற்றும், இலாபஸ்தானத்தில் அமர்ந்தும் இருப்பதால் கலை உலகத் தாரகைகளும், வாத்திய இசைக் கலைஞர்களும் அரசுத் துறையினரும், அரசியலில் ஈடுபட்டிருப்பவர்களும் புது முயற்சியிலோ அல்லது ஏற்கனவே செய்யும் பணியிலோ நல்லதொரு இலாபத்தை அடைவார்கள். நேத்திர அறுவைசிகிச்சைக்கு நேர்த்தியான நேரம். அத்துடன் விளையாட்டுத் துறையினர் பாராட்டும், பரிசும் பெறுவர். தந்தை வழிப்பாட்டனார் உடல்நிலை பாதிக்கப்படலாம். மாதத்தின் பிற்பகுதியில் தாயுடன் கூடப்பிறந்தவர்களைப் பற்றியதொரு கவலை ஏற்படலாம். சொத்து விஷயமாக இருந்தால் நீதிமன்றத்தை நாட வேண்டி வரும். ஸ்ரீநரசிம்மஸ்தோத்திரத்தைப் படியுங்கள். மாணவர்கள் மாதத்தின் பிற்பகுதியில் வரும் தேர்வுகளில் கடினமான வினாக்களை எதிர்நோக்கி அதற்கேற்ப கவனத்துடன் தயாரித்துக் கொள்வது நல்லது. சோதிடன் சொன்னாலும் மதியுடன் கூடிய உங்கள் முயற்சியால் விதியையும் வெல்லலாம். உங்கள் சக்தியும் அதே சமயம் பக்தியும் நேர்வழியில் இருந்தால் வெற்றி உங்களுக்கே.

## மிதுன ராசி:

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3-ஆம் பாதங்கள்.

இராசிநாதனால் மாதத்தின் முற்பகுதியில் பிரச்னைகள் ஏதும் எழாது. ஆனால் பிற்பகுதியில் அத்தகைய சூழ்நிலை இல்லை. எனவே, சி.ஏ.மற்றும் கணிதச் சம்பந்தமானத் தேர்வுகளை எதிர்நோக்குபவர்கள், நீதிமன்றத்தில் நின்று வாதாடும் வழக்குரைஞர்கள் ஆகியவர்கள் ஸ்ரீஜெயதேவரின் மதுராஷ்டகத்தைப் பொருளுணர்ந்து படிப்பதோ அல்லது கேட்பதோ நன்று. வாக்கும், பார்வையும், சாதுர்யமும் மேற்கண்ட துறை

யினருக்குச் செழிப்பினைத் தரும். குருவின் பார்வையும் இராசிக்கு இருப்பதால் மற்ற துறையினர்க்கும், மக்கள் நலம், தாம்பத்திய உறவு, பொருளாதார நிலை நன்கு அமையும். ஆறில் உள்ள இராகு இரட்சிப்பார். ஆனால் கேதுவோ செலவினைக் கொடுப்பார். கன்னிப் பெண்களுக்கும், திருமணத்திற்காகக் காத்திருக்கும் காளையர்களுக்கும் மணமேடை ஏறும் வாய்ப்பு கனிந்து வந்துள்ளது. முதலில் வரும் ஜாதகங்களைப் பரிசீலிக்க ஆரம்பித்தால் நாட்கள்தான் நகரும். மற்றபடி மாதத்தின் மூன்றாவது வாரத்தில் எதிர்பாராத தன லாபமோ, பதவி உயர்வோ, பாராட்டோ, பரிசோ, அல்லது இலாபகரமான பிரயாணமோ ஏற்பட வாய்ப்பு உள்ளது.

## கடக ராசி:

புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த மாதம். மாதத்தின் முற்பகுதியில் உதவும் புதன் பிற்பகுதியில் பலவீனமடைகிறார். ஆனால் சூரியனோ இதற்கு மாறாக முதலில் சோதனைகளைத் தந்து, பிற்பகுதியில் வெற்றியைத் தருகிறார். எனவே இந்த மாதத்தில் தேர்வுகளை சந்திக்க இருக்கும் மாணவர்கள் 11ல் பலமுடன் இருக்கும் கேதுவையும், விநாயகக் கடவுளையும் பக்தி சிரத்தையுடன் மனதில் இருத்தி அவரது தும்பிக்கை கைகொடுக்கும் என நம்பிக்கையுடன் முயற்சி செய்யுங்கள். முழு வெற்றி கிடைக்கும். தாய் வழி உறவினர் ஒருவரால் மன அமைதியையும், சற்று நிதியையும் கூட இழக்க வேண்டி வரலாம். அது அவரது உடல் நிலை காரணமாகவும் இருக்கலாம். அல்லது அவர் அம்மாவுக்குத் தர வேண்டியதைத் தராமல் சும்மா இருப்பதால், நீதித் துறையை நாட வேண்டியதன் காரணமாகவும் அமையலாம். புதன்கிழமை தோறும் திருமாலின் நாமங்களைச் சொல்லுங்கள். வேங்கடவனை நினைத்தால் வேண்டியதைத் தந்து சங்கடங்களைத் தீர்த்து வைப்பார். இந்த மாதம் எத்துறையினர்க்கும் எந்நிலையில் உள்ளவர்களுக்கும் மேற்கண்ட ஏற்றத் தாழ்வுகள் உண்டாகலாம். எனினும் பூசம், ஆயில்யம் ஆகிய நட்சத்திரத்தில் பிறந்து, தசாபுத்திகள் சாதகமாக உள்ளவர்களுக்குச் சுப நிகழ்ச்சிகளை நடத்தும் வாய்ப்பு உண்டாகும். புத்திரோத்பத்திக்கும் வாய்ப்பு உண்டு.

## சிம்ம ராசி:

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

சிம்மலக்னம், சிம்மராசி என்றாலே ஒரு தனி மவுசுதான். இவர்களில் ஆணாயினும், பெண்ணாயினும் ஏதோ விஷயத்தில் சிம்மத்திற்கு ஒப்பான கம்பீரத்தையும், காரியத்தை சாதிப்பதில் சாதனையாளர்களாகவும் திகழ்வார்கள். குறிப்பாக இந்த மாதத்தில் பிற்பகுதியில் இராசிநாதன் உச்சத்தைப் பெறும் சமயம், ஒரு பெரும் சோதனையில் வெற்றிப் பெற்று பலருடைய பாராட்டினைப் பெறுவீர்கள். பத்திரிகைத் துறையினர், அரசியல்துறை மற்றும் நீதித் துறையில் உள்ளவர்கள் தங்கள் ஆற்றலை நன்கு வெளிப்படுத்தி, அதனால் பாராட்டையும், பரிசையும் பெறுவீர்கள். குடும்பத்தில் அமைதி இருக்கும். தாம்பத்திய உறவில் அன்யோன்யம் நீடிக்கும். இனி இவர் அவ்வளவுதான் என மற்றவர்கள் நினைக்கும் நேரத்தில், உங்களது தைரியமும், மனோ பலமும் மறுமலர்ச்சிப் பெற்று, மண்ணில் விழ இருந்த நேரத்தில், பறந்து உங்கள் சாத

## இஞ்சி சாம்பார்

தேவையான பொருட்கள் :
துவரம் பருப்பு - 1/2 ஆழாக்கு.
இஞ்சி - 1" துண்டு.
பச்சை மிளகாய் - 4.
கொத்துமல்லித் தழை - ஒரு சிறு கொத்து.
பெருங்காயம் - புளியங்கொட்டை அளவு.
உப்பு, மஞ்சள் பொடி - தேவையான அளவு.
எலுமிச்சம்பழம் - 2.
தாளிக்க : எண்ணெய் 2 ஸ்பூன், சீரகம், வெந்தயம், கடுகு ஒவ்வொன்றும் 1/2 டீஸ்பூன்.

இஞ்சி பச்சை மிளகாயைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். துவரம்பருப்பைக் குழைய வேகவைக்கவும். எண்ணெயைக் காய வைத்துப் பெருங்காயத்தைப் போட்டுப் பொரித்தவுடன் வெந்தயம், சீரகம், கடுகு போட்டுத் தாளிக்கவும். அதில் பச்சை மிளகாயைப் போட்டு நன்றாக வதக்கியபின் 2 ஆழாக்கு தண்ணீர் சேர்க்கவும். உப்பு, மஞ்சள்பொடி போட்டு நன்றாகக் கொதிக்க வைத்த பின், வெந்த துவரம்பருப்பையும் சேர்த்து 2 நிமிஷம் கொதிக்க வைத்து இறக்கவும். எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து, பச்சை கொத்துமல்லி போட்டுப் பரிமாறவும்.

- தேவகி



ஒரு சமயம் நண்பர்களைச்
சாப்பிட அழைத்தபோது, ஆப்பிள்கள்
வாங்கி வந்திருந்தார்கள். என் பேரன்
உடனே நறுக்கித் தரவேண்டுமென்று
அடம் பிடித்ததால் நறுக்கினேன். சாப்பிட்ட
வுடன் குழந்தையின் முகம் அஷ்டகோணலாகி
விட்டது. ஒரே புளிப்பு. ஒருவரிடமும் யோசனை
கேட்காமல் மளமளவென்று ஆப்பிளைத் தோலைச்
சீவி சிறு துண்டுகளாக நறுக்கினேன். உப்புப் பொடி,
மிளகாய்ப் பொடி, வெந்தயப் பொடி, பெருங்காயப்
பொடி இவற்றைச் சேர்த்துக் கடுகு தாளித்து டேபிள்மேல்
வைத்து விட்டேன். ஊறுகாய் ருசியோ ருசி.
- தேவகி

னைகளைக் காட்டுவீர்கள். அந்த அளவுக்கு மாதத்தின் பிற்பகுதியில் சூரியன் உங்களுக் குரிய ஆற்றலைத் தர இருக்கிறார். ஸ்ரீ காயத்ரி மந்திரத்தை 11 முறை தினமும் உச்சரி யுங்கள். காலையில் எழுந்ததும் கதிரவனின் கிரணங்கள் உங்கள் உடலில் படும்படி நின்று பக்தியுடன் அவரை வணங்கிப் பிறகு உங்கள் செயலில் ஈடுபடுங்கள். முடிந்தால் சூரியனார்க் கோவில் சென்று வாருங் களேன்.

## கன்னி ராசி:

உத்திரம் 2,3,4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2, - ஆம் பாதங்கள்.

இந்த இராசிக்காரர்களுக்கு நல்லதொரு சூழ்நிலை நிலவும். ஓரிரண்டு கிரகங்களைத் தவிர மற்றவை உதவும் நிலை உண்டு. மாத ஆரம்பத்தில் உதவும் இராசிநாதனாகிய புதன், இறுதியில் சில்லறைச் சச்சரவுகளைத் தோற்றுவிப்பார். குடும்பத்தில் முதலிரண்டு வாரங்களில் தாம்பத்திய உறவில் கூட சிறு சஞ்சலங்கள் தோன்றிப் பிறகு சரியாகும். சூரியனால் உஷ்ண சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம். குறிப்பாக வயிறு பாதிக்கப் படலாம். மண்காரகனாகிய செவ்வாய் நிலம் ஒன்று வாங்கும் நிலையை உருவாக்கு வார். குரு நல்ல நிலையில் சஞ்சரிப்ப தாலும், பிற்பகுதியில் உச்ச சூரியனையும், அவர் பார்ப்பதாலும் கெடுபலன்கள் குறை யும். குறிப்பாக, இந்த மாதத்தின் பிற்பகுதி மாணவர்களுக்குச் சற்று தேர்வு சம்பந்த மான பிரச்னைகளை உருவாக்கலாம். எனவே, கலைமகளையும், கணபதியையும் வேண்டுவது நல்லது. உங்கள் முயற்சி ஒன்றில் தோல்வியும், செலவும் ஏற்படும் எனத் தெரிவதால், புது முயற்சிகளில் ஈடுபட வேண்டாம் . குறிப்பாக, அரசுப் பணியில் உள்ளவர்கள் காலம் இடமறிந்து தேவையான இடத்திற்கு மாற்றல் கேட்பது நல்லது. இல்லையேல் விரும்பத் தகாத இடத்திற்குப் போக வேண்டி வரலாம்.

## துலா ராசி:

சித்திரை 3,4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 - ஆம் பாதங்கள்.

இராசிநாதன் உச்சம் பெற்ற போதிலும், மாதம் பூராவும் தாம்பத்திய உறவில் சற்று சலனம் உண்டாகலாம். குருவின் பார்வை மற்ற கிரகங்களைக் கட்டுப்படுத்திய போதி லும், சர்ப்பக்கிரகங்கள், எக்ஸிமா மற்றும் ஸைபயோரியா போன்றவற்றை உண்டாக்கி உடலைப் பாதிக்கச் செய்தாலும், இராசி நாதன் உச்சமாக இருப்பதால் கவலைப் படும் அளவிற்குக் கடுமையாக இருக்காது. கண் சற்று பாதிக்கப்பட்டுச் சரியாகும். இந்த ராசிக்காரர்கள் எதையும் யோசித்து செய்வது நல்லது. பெரும்பதவியில் உள்ளவர்களும், பணப் பொறுப்பில் உள்ளவர்களும் நிதி யைக் கையாளும் போதும், காசோலை களில் கையெழுத்திடும்போதும், பணம் பட்டுவாடா செய்யும் போதும் கவனத் துடன் செயல்பட வேண்டியது அவசியம். ஸ்ரீலட்சுமி ஸ்தோத்திரம், நரசிம்ம ஸ்தோத் திரம் போன்றவற்றைப் படிப்பது நல்லது. மாணவர்களின் முன்னேற்றத்திற்குப் பெற் றோர்கள் உற்சாகமும் தைரியமும் அளிக்க வேண்டியது அவசியம்.

## விருச்சிக ராசி:

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

மாதத்தின் பிற்பகுதி நன்றாக உள்ளது. முற்பகுதியில் சுக்கிரனால் சுகமுண்டு. பிற் பகுதியில் சூரியனால் கீர்த்தி உண்டு. பரிசோ, பாராட்டோ, விரும்பும் இடத் திற்குப் பணிமாற்றமோ கிடைக்கும். வீடு

மாற்ற அல்லது விற்கக் கூடிய நிலை ஏற்படலாம். அது நல்லதொரு மாற்றமாக அமையலாம். சுபநிகழ்ச்சி ஒன்றுக்கு வாய்ப்பு உள்ளது. விரயத்தில் குரு இருப்ப தால் புது முயற்சி எதையும் செய்யாம லிருப்பது நல்லது. வீடு விஷயத்தில் கூட தாபுத்தி நன்றாக இருந்தாலொழிய திடீர் மாற்றத்தைத் தவிர்ப்பது நல்லது. உங்களை விடத் தாழ்ந்த நிலையில் உள்ள ஒரு பெண்ணால் மனக்குழப்பம் உண்டாகலாம். அது உங்களிடம் பணிபுரிபவளாகவும் இருக் கலாம். அல்லது வெளியிடத்துப் பெண் ணாகவும் இருக்கலாம். இது எந்தத் துறையில் உள்ளவர்களுக்கும், எப்பா லவர்க்கும் பொருந்தும். பணி மாற்றம் விரும்பும் இடத்திற்குக் கிடைத்தால் ஏற்றுக் கொள்ளுவது நல்லது. முற்பகுதியில் நடிப் பாற்றல் உள்ள நகைச்சுவை நடிகர்களுக் கும்,இசைக் கலைஞர்களுக்கும் புது ஒப்பந் தங்கள் ஏற்பட்டுச் சுபிட்சத்தை நோக்கி முன்னேறும் வாய்ப்பு தெரிகிறது. ஸ்ரீ சுப்ர மணிய புஜங்கத்தைப் படித்து ஆறுமுக னுக்கு அர்ச்சனை செய்வது நல்லது.

## தனுசு ராசி:

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

ராகு உச்சத்தில் இருப்பதால் கெடுபலன் குறைவு. மற்ற கிரகங்கள் நல்ல நிலையி லேயே சஞ்சரிக்கிறார்கள். தனுசு ராசிக்காரர் களுக்குத் தன லாபம், பலவிதத்தில் வரும். நடிப்புத்துறையினர்க்கு நல்லதொரு அறு வடை. ஆகவே பார்க்க வேண்டியவர்க ளைப் பார்த்துக் கேட்கவேண்டியதைக் கேட் டால் காரியானுகூலம் ஏற்படும். கண் சற்று பாதிக்கப்படலாம். இதற்கு மருத்துவம் செய்வதே பரிகாரமாகும். இசைக் கலைஞர் கள் மற்றும் மின் அணுத்துறையினர் கருப் புக்கல் வியாபாரிகள், இரும்புத் தொழில் துறையினர் பொறியியல் துறையினர் ஆகிய அனைவருக்கும் ஏற்றதொரு சூழ்நிலை. பண வரவோ, பதவி உயர்வோ, சுப நிகழ்ச் சியோ நடந்து மகிழ்ச்சியைத் தரும். சுபச் செலவுகளும், ஏற்படும். அவசர அவசரமாக ஒரு திருமணத்தை நடத்தி முடிப்பீர்கள். அதனால் ஒரு நிம்மதியையும் அடைவீர்கள். எம்.பி.ஏ., சி.ஏ.போன்ற தேர்வுகளை எழுது பவர்களுக்குக் கட்டாயம் வெற்றி உண்டு. புதன் நீசம் பெற்றுள்ளது பற்றிய கவலை தேவையில்லை. குரு சுக்கிர பரிவர்த்தனை யோகத்தைத் தரும்.

## மகர ராசி:

உத்திராடம் 2,3,4 - ஆம் பாதங்கள், திரு வோணம், அவிட்டம் 1,2 - ஆம் பாதங்கள்.

இராசிநாதன் 2ல் ஆட்சி. செவ்வாய் புதன் சேர்க்கை. குரு பார்வையும் உள்ளது. சுக்கிரனும் உச்சம். ஆனால் ஏழரை சனியின் பிடியில் இராசி உள்ளதே என்ற மனக் கவலை இருக்கும். நல்லவை என அதிகமாக நடக்காவிட்டாலும் கெடு பலன்களைக் கொடுக்கும் நிலையில் யாரும் இல்லை. இராசிநாதனுக்கே குரு பார்வையும், ஆட்சி புரியும் நிலை உள்ளதால், உள்ளத்தில் குழப் பம் வேண்டியதில்லை. கை கூடிவந்த திரு மணங்கள் இதுவரைத் தட்டிச் சென்றிருக் கலாம். வசதியும், வாய்ப்பும் இருக்குமா னால் கிருஷ்ணகிரிக்கு 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள வேற்பணப்பள்ளி ஸ்ரீ ராமர் கோவில் சென்று அபிசேகம் செய்து வேண்டினால் திருமணத் தடங்கலும், தொழில்முறையில் ஏற்பட்டுள்ள முடக்க மும் நீங்கி சுபிட்சம் பெறுவீர்கள். இது அனுபவப் பூர்வமான உண்மை என்பதைச் சென்று வந்தபிறகு உணரமுடியும். மற்றபடி நல்லதொரு மாதம்.



தேங்காய் மூடியை 2 அல்லது 3 நாட்கள் குளிர் சாதனப் பெட்டியில் வைத்திருந்த பிறகு மிக்ஸியில் துருவினால், துருவல் மிகவும் மிருது வாக பூப்போல இருக்கும். ஆனால், பண்டிகை நாட்களில் தேங்காயை உடைத்தவுடன் மிக்ஸி யில் போட்டால், ஈரப்பசை காரணமாக தேங் காய் சிறுசிறு உருண்டைகளாகவே தங்கிவிடும். உடைத்தவுடன் தேங்காயைச் சிறு துண்டுக ளாக்கி, வாணலியில் ஈரம் காயும் அளவுக்கு 3 - 5 நிமிஷங்கள் புரட்டிய பிறகு மிக்ஸியில் போட்டால் பூவோ பூதான். முயன்று பாருங்க ளேன்!

- தேவகி

## கும்ப ராசி:

அவிட்டம் 3,4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1,2,3 - ஆம் பாதங்கள்.

இந்த ராசிக்கு, ராசி நாதன் வருகை தந்தது பற்றிப் பலவிதமான கருத்துக்களைக் கேட்டிருக்கலாம். நிச்சயமாக சனீஸ்வர பகவான் கும்பத்திற்கு வந்து, இந்த இராசிக்காரர்களுக்கு நல்லது செய்ய இருக்கிறார். அத்துடன் குருவின் அருட்பார்வை உள்ளது. எனவே கலக்கம் தேவையில்லை. சென்னைவாசிகள், மயிலை மாஸ்க் தெருவில் உள்ள அபயஹஸ்தத்துடன் காட்சி தருகின்ற ஆஞ்சநேயருக்கு ஒருமுறை வெண்ணெய் சாற்றி வணங்குங்கள். எதையும் சாதிக்கும் ஆற்றலையும், எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ளும் சக்தியினையும் பெறுவீர்கள். அவரால் ஆகாதது என ஏதேனும் உண்டா என்ன! மற்றபடி தொழில், வியாபாரம், கல்வி, நடிப்பு மற்றும் அரசியல், அரசுப் பணி அனைத்திலும் உள்ளவர்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் சோதனை உண்டு என்றாலும், இனி அவை நல்ல முறையில் முடியும். பிரயாணத்தின்போதும், யாரிடம் பேசும் போதும், பொருட்களை வாங்கும் போதும் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது.

## மீன ராசி:

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

இராசிநாதனும், உச்ச நாதனும் பரிவர்த்தனை. 12ல் மூன்று கிரகங்கள். இராசியில் முதலிரண்டு வாரங்கள் புதன் நீச்சம். இந்தச் சூழ்நிலையில் புதுத் தொழில் ஆரம்பிப்பது விவேகமல்ல. செய்ய வேண்டுமென்ற வேகம் இருக்கும். சிந்தித்துச் செயல்படுங்கள். கேது கொடுப்பார். கலைஞர்களுக்கு ஆதாயம் உண்டு. வீடு ஒன்றை விற்கும் வாய்ப்பு உண்டு. தாய் மாமன் வகையில் ஆதரவு கிடைக்காது. அஷ்டமத்துக் குருவினால் உடல்நிலை, மனநிலை பாதிக்கும், என்றாலும், குரு, சுக்கிர பரிவர்த்தனையில் தீமை ஏதும் ஏற்படாமல், மனநிம்மதி கிடைக்கும். விஷ்ணு சகஸ்ர நாமமும், தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும் கேளுங்கள். சில விஷ்ணு ஆலயங்களுக்குச் சென்று வாருங்கள். அன்றிலிருந்தே நல்லது நடக்கும். மௌனமாகத் தியானம் செய்யுங்கள். எல்லாத் துறையினர்க்கும் இது பொருந்தும்.

– ஜெயலட்சுமி கிருஷ்ணன்

"இந்தத் தலைமுறையினர் எதுவுமே வேகமாக நடந்துவிட வேண்டும், எதற்குமே வேகமான நிவாரணம் வேண்டும் என்று பறக்கிறார்கள். இந்த வேகம்தான் அவர்களின் மனநிலையையும், உடல்நிலையையும் கெடுக்கிறது'' என்கிறார் பதினெண் சித்த மருத்துவமனையின் தலைமை மருத்துவர் பிரம்மானந்த சுவாமிகள்.

''தலைவலி வருதா, உடனே ஒரு மாத்திரையைப் போட்டுக் கொண்டு விடுவார்கள். பத்து நிமிடத்தில் தலைவலி சரியாகிவிடும். ஆனால் மீண்டும் தலைவலி வரும்போது ஒரு மாத்திரை போதாது. இரண்டு மாத்திரை போடுவார்கள். எனக்குத் தெரிந்த ஒருவர் ஒரு நாளைக்கு ஒன்பது மாத்திரைகள் சாப்பிடுவார்! இதனுடைய பக்கவிளைவுகளே தலைவலியும் கழுத்துவலியும், தலைவலியும் நெஞ்சுவலியும், உடம்பெல்லாம் கட்டிகள் போன்றவை.

எந்த வலியோ, உபாதையோ சட்டென்று வேகமாகக் குறையச் செய்யக் கூடாது. தலைவலியென்றால் மாத்திரைகள் தலைவலியை மட்டும் 'சட்'டென்று நிறுத்துகிறது. எதனால் வந்த தலைவலி என யார் பார்க்கிறார்கள்? அந்தக் காரணம் மட்டும் அப்படியே உடம்பில் புரையோடிவிடும். நோய் அதிகமாகும். தலைவலி திருகுவலியில் முடிந்த கதை இதுதான்.

ஆனால் சித்த மருத்துவத்தில் தலைவலி என்றால் அது எதனால் வந்தது என்று பார்ப்பார்கள். வாதத்தால் வந்ததா, பித்தத்தால் ஏற்பட்டதா, சிலேட்டுமத்தால் வந்ததா? என ஆராய வேண்டும். எது அதிகமானதோ அதைக் குறைக்க மருந்து சாப்பிட வேண்டும். அப்போது நிரந்தரமாகக் குணம் ஏற்படும். இல்லையென்றால் நிரந்தரமாகத் தலைவலி வந்து கொண்டேதான் இருக்கும்.

என்னிடம் ஒரு கேஸ் வந்தது. இருபத்தி ஐந்து வருடமாக விடாத தலைவலி அவருக்கு. சாதாரண பித்தத் தலைவலியாக ஆரம்பித்தது, அடிப்படை நோய்க் காரணத்தை ஒழிக்காமல் வெறும் வலி நிவாரணியே சாப்பிட்டுக் கொண்டிருந்ததால் பிரச்னைகள் அதிகமாகிவிட்டது. விடாத தலைவலி. நிறைய செலவழித்துவிட்டார். அப்புறம்தான் என்னிடம் வந்தார். நான் அவரைப் பரிசோதித்துக் கொஞ்சம் கொஞ்சமாகச் சரிசெய்து ஒரு வருடத்தில் தலைவலியை ஒழித்தேன்.''

# தலைவலி போய்



* ஸ்நேகலதா, பிரம்மானந்த ஸ்வாமிகள்.

# திருகுவலி வரும்...

''இந்தத் தலைவலி குழந்தைகளுக்கும் வருகிறது. டென்ஷன் நிறைந்த வேலைகள் இருப்பவர்களுக்கும் வருகிறதே, அதை எப்படி ஒழிப்பது?''

''அடிப்படையில் குழந்தைகளை நரம்பு பலம் மிகுந்தவர்களாக வளர்க்க வேண்டும். அதேபோலப் பெரியவர்களும் நரம்பு பலவீனமடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குழந்தைகளுக்குக் காப்பியைக் கொடுக்கவே கூடாது. காப்பியே நரம்புத் தளர்ச்சியை ஏற்படுத்துகிறது. அதிகக் காப்பி விஷம். காப்பி குடித்தால் தலைவலி போகும் என்பதெல்லாம் நாமே நினைக்கும் பிரமை.

தலைவலி வந்த ஒருவர் கம்பளியை எடுத்து மடித்துத் தலைக்கும் கழுத்துக்குமாக வைத்துக் கொண்டு பேசாமல், முக்கியமாக மனம் அமைதியாகப் பத்து நிமிடம் படுத்துக் கொண்டுவிட வேண்டும். தலைவலி தானாகப் போய்விடும்.

அதேபோல ஒவ்வொரு காரியத்திற்கும் டென்ஷன் கொள்வது மிகவும் தவறு. நாம் நம்மால் முடிந்தவரை நம்மிடம் கொடுத்த காரியத்தைச் சிறப்பாகச் செய்துவிட வேண்டும். பலன் நல்லதாக வரும் என விட்டுவிட வேண்டும். இதை நீங்கள் ப்ராக்டீஸ் செய்து பாருங்கள். உங்கள் வாழ்க்கையே அற்புதமாக மாறும். தலைவலியே வராது.''

''குழந்தைகள் நரம்பு பலம் மிகுந்தவர்களாக வளர வேண்டும் என்கிறீர்கள். நாங்கள் சத்தான ஆகாரம்தானே கொடுக்கிறோம்? அப்போதும் சோர்ந்து போய் விடுகிறார்கள்...''

''ஏன் போக மாட்டார்கள்? இந்தக் காலத்துக் குழந்தைகள் பிரெட், ஜாம் அல்லவா சாப்பிடுகிறார்கள்! அல்லது சத்து மிகுந்த பானம் என விளம்பரம் செய்யப்படுபவை. முழு பயறு எனச் சொல்லப்படும் பச்சைப் பயறு இருக்கிறதே, அதைப் போல சத்தான உணவு குழந்தைகளுக்கு வேறு எதுவும் இல்லை.

காலையில் முழுபயறை வேகவிட்டு தேங்காய் துருவிப் போட்டு ஒரு மிளகாய் வறுத்துக் கொடுங்கள். அத்தனைக்கத்தனை சத்து. முளைகட்டிய பயறு இன்னும் அற்புதம். மாலையில் அரிசியையும், முழு பயறையும் (முளை கட்டாதது. ஏனெனில் இரவு ஜீரணமாகாது.) சேர்த்து வேக வைத்துக் கஞ்சி போலச் செய்தோ, உப்போ சர்க்கரையோ போட்டுக் கொடுங்கள். அதற்கு ஃபேஷனாக ஒரு பெயர் சூட்டி விடுங்கள். உங்கள் குழந்தைகள் உடல்நலத்திலும் படிப்பிலும் எப்படி உயருகிறார்கள் என்று பாருங்கள்.

அதேபோல பச்சரிசியையும், தேங்காய்த் துருவலையும் சிவக்க வறுத்து மிக்ஸியில் பொடி செய்து வைத்துக் கொள்ளுங்கள். இதை உப்புமாவாக, கஞ்சியாக, பானமாக, பொங்கலாக எப்படி வேண்டுமானாலும் காலை டிபனாகச் செய்யலாம். இந்தப் பொடி ஆறு மாதம் வரை கெடாது. முழுக்க முழுக்கச் சத்து மாவு இது.

முழு பயறு உடம்பின் உள்ளே சலவை செய்தது போல சுத்தம் செய்யக் கூடிய தன்மை உடையது. எனவே நிறைய முழு பயறை உங்கள் உணவில் சேர்த்துக் கொள்ளுங்கள். இதனால் மூளையும், நரம்புகளும் பலப்படும். அப்போது நரம்பு பலவீனப்பட்டுத் தலைவலி வரும் வாய்ப்பே கிடையாது.

''மற்றொரு முக்கியமான விஷயம். இரவு ஒன்பது மணி அல்லது பத்து மணிக்குத் தூங்கிவிட வேண்டும். காலையில் ஐந்து மணிக்கு எழுந்து காற்றோட்டமான அறையில் ஆழ்ந்த மூச்சுவிட வேண்டும்.

இப்படிச் சில அடிப்படையான வாழ்வியல் உண்மைகளை நாம் தெரிந்து கொண்டு ஆரோக்கியமாக வாழ்ந்தால் கண்டிப்பாக எந்த நோய் நொடியும் வராது.'' என்கிறார் இம்மருத்துவமனையை நடத்தும் ஸ்நேகலதா.

– ஜ்வாலா

---

## தயாரிப்பாளருக்கு ஒரு யோசனை

பெண்களின் தவிர்க்க முடியாத அந்த 3 நாட்களுக்குப் பயன்படுத்தும் சானிடரி நாப்கின் தயாரிப்பாளர்கள் அதன் அளவை நீள வாக்கிலேயே அதிகப்படுத்துகிறார்கள். அத்தனை வசதியாய் இருப்பதில்லை. இதையே அகலவாக்கில் பெரிது பண்ணினால் மிகவும் பயன் உடையதாய் இருக்கும் என்பது என் போன்ற அநேக சகோதரிகளின் யோசனையும், எதிர்பார்ப்பும். தயாரிப்பாளர்கள் யோசித்துச் செயல்படுவார்களா?




– உங்களில் ஒரு சகோதரி



# மங்கையர் மலர் & புதிய மீரா

மூலிகை சியக்காய் மற்றும் பூங்கங்காய் பவுடர்

'முடி அதிகம் கொட்டுகிறது'

'பொடுகு நிறைய உள்ளது' என்று நிறைய வாசகிகள் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்குமான பதில்-

கூந்தலைப் பாதுகாக்கச் சத்துணவு மிகவும் முக்கியம். கூந்தலுக்குத் தேவையான சத்துக்கள் கீரைகள், முட்டை கோஸ், முட்டை, மாமிசம், மோர், தேன், பருப்பு வகைகள், பழங்கள், ஈஸ்ட், பாதாம் பருப்பு, முந்திரிப் பருப்பு இவைகளிலிருந்து கிடைக்கிறது.

சர்க்கரை, காபி, டீ, ஐஸ்கிரீம் குளிர் பானங்கள் அதிகமாக உட்கொள்வதாலும் முடி அதிகம் கொட்டும்.

பொடுகு - நம் உடலிலுள்ள எண்ணெய்ச் சுரப்பிகள் வறண்டு போவதாலேயே தோல் வறண்டு ஒருவித சொர சொரப்பு நம் தேகத்தில் ஏற்படுகிறது. உடலில் உஷ்ணம் அதிகரிப்பதாலும் சுகாதாரக் குறைவினாலும் பொடுகு ஏற்படும்.

பால், வெண்ணெய்ச் சத்துள்ள ஆகாரங்கள் சாப்பிடுவதாலும், தலைமுடியைச் சுத்தமாக வைப்பதாலும் பொடுகைத் தவிர்க்கலாம். தேங்காய் எண்ணெயையும், ஆலிவ் எண்ணெயையும் இலேசாக சூடாக்கிக் கூந்தலின் அடிப்பாகத்தில் தடவவேண்டும். எண்ணெய் இலேசாகச் சூடாக இருப்பதால் தலையில் உள்ள மயிர்க் கால் துவாரங்கள் திறந்து எண்ணெய் உள்ளே செல்லும். வாரம் இருமுறை இவ்வாறு செய்தால் பொடுகு வருவதைத் தடுக்கலாம்.

ஆ.சாந்தி, பெத்த ரெங்கபுரம்.

**இயற்கையிலேயே கறுப்பாக இருக்கும் முடியை ஃபேஷனுக்காக ப்ளீச் செய்து கொள்கிறார்கள் சிலர். இவ்வாறு செய்வதால் முடியின் ஆரோக்கியம் பாதிக்கப்படாதா? கோடை காலங்களில் முடியின் நுனிகள் இரண்டாக வெடித்துக் காணப்படுகின்றன. இதைப் போக்க என்ன செய்ய வேண்டும்?**

ஃபேஷனுக்காக முடியை ப்ளீச் செய்வதால் கூந்தலின் இயற்கைத் தன்மை பாதிக்கப்படும்.

கூந்தலின் நுனியில் பிளவுகள் இருந்தால் தலை குளித்த அன்று முடி நன்கு உலர்ந்த பிறகு கூந்தலின் நுனியை அரை அங்குலம் வெட்ட வேண்டும். இதை ஆறு வாரத்திற்கு ஒருமுறை செய்யலாம்.

ஆர். ஸ்வர்ணலதா, சென்னை-90.

**முடியை வெட்டுவதால் அதிகம் வளருமா?**

முடியை வெட்டுவதால் முடி நன்கு வளரும்.

ராதா, திருவல்லிக்கேணி.

**என்னுடைய அக்காவிற்கு டைபாய்ட் வந்தது. அதற்குப் பின்னர் அவருடைய தலை முடி கொட்டி விட்டது. இப்பொழுது அவள் 'போனிடெய்ல்' தான் போட்டுக் கொள்**



வாசகர்கள் பயன் பெறுவதற்காக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது இந்தப் பக்கம்.
அளிப்பவர்கள்: மீரா ஹெர்பல் பவுடர்.

**புனிதமான எண்ணெய்க் குளியலும் மீரா சியக்காயும்**

மங்கலம் பொங்கிடும் வெள்ளிக் கிழமைகளில் மங்கையரின் புனிதமான எண்ணெய்க் குளியலுக்கு உறுதுணையானது சியக்காய். மீரா ஹெர்பல் சியக்காய் பவுடரில் நறுமணம் தரும் சியக்காயுடன் துளசி, மருதாணி, ரோஜா இதழ்கள், வெண் மிளகு, வெந்தயம், ஆம்லா மற்றும் பல்வேறு நலம்தரும் இயற்கை மூலிகைகள் சேர்க்கப்பட்டுள்ளன. இவை உங்களது கேசத்துக்குப் பாதுகாப்பும் போஷாக்கும் அளிப்பவை. எண்ணெய்க் குளியலின் சிறப்புக்குச் சிறப்பு சேர்ப்பது மீரா ஹெர்பல் சியக்காய் பவுடர்.

# கூந்தல் பராமரிப்புப் பக்கங்கள்

கிறாள். முடிவளர ஏதாவது வழி கூறுங்கள். என்னுடைய தலைமுடியின் அடிப்பாகம் வெடித்து வளராமல் உள்ளது?

(முதல் பதிலில் விவரித்திருக்கிறேன்) டைபாய்டு வந்தால் முடி உதிரக் கூடும். அதற்குத் தகுந்தாற் போல் நல்ல உணவு, டானிக்குகளைச் சாப்பிட்டு இக்குறையைப் போக்க வேண்டும். மருதாணி தைலத்தை உபயோகித்தால் கூந்தல் நன்கு வளரும்.

வெ.லட்சுமி, காஞ்சிபுரம்.

எனது தலையாய பிரச்சனை தலைமுடி. முடி அதிகமாகக் கொட்டுவதுதான். முன்பு எனக்கு நல்ல நீண்ட அடர்த்தியான முடி இருந்தது. டைபாய்டு, மஞ்சள் காமாலை பாதித்த பின்புதான் மிக அதிகமாகக் கொட்டி யது. நான் வழக்கமாக மருதாணி இலையை இட்டுக் காய்ச்சிய தேங்காய் எண்ணெய்தான் உபயோகப் படுத்துகிறேன். அதிகமாக ஷாம்பூ உபயோகிப்பதில்லை. நான் வெய்யி லில் நிறைய அலைய வேண்டியதாக உள்ளது. மேலும் எனது கூந்தல் மிகவும் வறண்டு இருக் கிறது. எனது கூந்தல் பழைய நிலைக்குத் திரும்ப உதவும் படி கேட்டுக் கொள்கிறேன்.

தலைமுடி அதிகமாகக் கொட்டுவதற்கு காரணம், உடல் உஷ்ணமும், வெயிலில் அலைவதாலும் தலைமுடி பாதிக்கப்படு வதே. வாரம் மூன்று முறையாவது இரவில் படுக்கும்முன் விளக்கெண்ணெயை மயிர்க் கால்களில் அழுந்த தேய்க்கவும். பிறகு 10 நிமிடம் கழித்து நன்கு முடியைச் சீவவும் காலையில் சீயக்காய் போட்டு தலைக்குக் குளிக்கவும். முடி கொட்டுவது நிற்கும். வெயிலில் தலைமுடி பாதிக்காமல் குடை யை எடுத்துப் போகவும். தலைமுடி நன்கு வளர நல்ல சத்துணவு, மற்றும் சுகாதாரம் இவற்றுடன் டென்ஷன் இல்லாமல் இருக்க வேண்டும். முடிவளர மருதாணி தைலம் நல்ல பலன் கொடுக்கும்.

ஜெயலதா, மாம்பலம்.

என்னுடைய சகோதரனுக்கு 30 வயதி லேயே சொட்டை (நடுமண்டையில்) விழ ஆரம்பித்து இப்போது 35 வயதில் பெரிய வட்டமாக ஆகிக் கொண்டிருக்கிறது. முகம் பார்த்துக் கொள்ளலாமா? என்று எல்லோரும் கேலி செய்கிறார்கள். சொட்டை மறைய வழி சொல்லுங்கள்.

வழுக்கை அவரவர் பரம்பரையைப் பொறுத்தது. சொட்டையான இடத்தில் முடி வளர சாத்தியங்கள் அவ்வளவாக இருக் காது. உடலில் உஷ்ணம் அதிகரிப்பதாலும், அதனால் ஏற்படும் வியாதிகளினால் மயிர் உதிர்தலும் ஏற்படும். வெந்தயத்தைப் பாலில் அரைத்து தலைமுழுகிவர முடி உதிர் வதைத் தவிர்க்கலாம்.

பதில்கள்: ஹேமா லக்ஷ்மணன்
அழகு மற்றும் சிகையலங்கார நிபுணர்.

**என் ஆரோக்கியமான**

# கூந்தலின் ரகசியம்!

### பரிசு பெற்ற கட்டுரை

1) தேங்காய் நாள்பட்டு கெட்டு விட்டாலோ அழுகிவிட்டாலோ அதை எறிந்து விடாமல் அந்த அழுகின தேங்காயைத் துருவி, ஆட்டுக்கல்லிலோ கிரைண்டரிலோ போட்டுக் கொஞ்சம் நீர்விட்டு ஆட்டி எடுத்து அந்த விழுதைத் தலையில் தடவிக் கொண்டு பின் சிறிது நேரம் ஊறியதும், தலைமுடியைச் சீயக்காய்ப் பொடியினால் அலசவும். தலைமுடியின் செழிப்பிற்கு உத்தரவாதம் தரும் நல்ல முறை இது.

2) சாதம் வடிக்கும் கஞ்சியை (இதற்காகவே அவ்வப்போது குக்கரில் சமைக்காமல் கஞ்சிக்காக சாதம் வடித்து வைக்க வேண்டும்) ஒருநாள் பத்திரப்படுத்தி வைத்திருந்து அந்தப் பழைய கஞ்சியினால் தலையைத் தேய்த்துக் குளிக்கவும். இது உடலின் அதிகப் படியான சூட்டைத் தணித்து குளிர்ச்சியைத் தந்து முடியின் வளர்ச்சியைத் துரிதமாக்கும்.

3) புளித்துப் போன தயிரை வெளியே கொட்டிவிடாமல் அத்துடன் எலுமிச்சம் பழச் சாறு கலந்து தலைமுடியைப் பிரித்து மயிர்க் காலில் படும்படித் தேய்த்து விட்டுப் பின் சிறிது நேரம் கழித்து தலைக்குக் குளித்து விட்டால் முடியின் ஆரோக்கியம் நன்றாக இருக்கும்.

4) கசகசாவை நீர்விட்டு அம்மியில் அரைத்து அந்த விழுதைத் தலையில் தடவிக் கொண்ட பின் சிறிது நேரம் கழித்துக் குளித்தால் தலை முடி பளபளவென மின்னும். தலையை நன்கு அலசிக் காய வைத்துப் பிரஷ் கொண்டு சீவிக் கொண்டால் முடி உதிராது. அடர்த்தியாக வளரும்.

5) அருகம் புல்லை எடுத்துத் துண்டுகளாக்கி ஒரு பாத்திரத்தில் இட்டு அதனுள் நல்ல எண்ணெய் ஊற்றி சூர்ய வெப்பத்தில் 1 வாரம் வைத்து விட்டுப் பிறகு ஒரு முறை தலையில் தேய்த்துப் பின் வெந்நீரில் குளிக்கவும். இளநரை நாளடைவில் மறைந்து தலை முடி கறுகறுவென இருக்கும். கண்களும் பிரகாசமாய் இருக்கும்.

6) பூச்சி வெட்டின் தாக்குதலினால் தலையில் சில இடங்களில் சொட்டை விழுந்து முடி வளராது இருந்தால் அதற்கு மருந்துக் கடையில் விற்கப்படும் குமுட்டிக் காய் வாங்கி வந்து பாதியாக நறுக்கி எலுமிச்சம் பழத்தில் சாறு பிழிவது போல் குமுட்டிக் காயின் சாறை சொட்டை விழுந்த இடத்தில் பிழிந்துவிட்டுத் தேய்த்து வந்தால் சிறிது நாட்களில் முடிவளர்ந்துவிடும். குமுட்டிக் காய் தடவிய பின் உடனே குளித்து விடாமல் இருப்பது நல்லது. பூச்சி வெட்டு எனப்படும் நோய்க்கு இது கை கண்ட முறையாகும்.

7) அவ்வப்போது செம்பருத்தி இலை, கருவேப்பிலை இலைகளை (ஏதேனும் ஒன்று) அரைத்து அந்த விழுதைத் தலையில் தடவிப் பின் சிறிது நேரம் ஊறியபின் குளிப்பது முடியின் ஆரோக்கியத்துக்குத் துணை செய்யும்.

பொதுவாக தினம் சுத்தமான தேங்காய் எண்ணெயத் தலைக்கு தடவி நுனிவரை பின்னல் போட்டுவர முடியின் நுனி வெடிக்காமல் சரசரவென முடி நீண்டு வளர்ந்து நம்மைத் திகைக்க வைக்கும். இதுவே என் கூந்தல் ஆரோக்கியத்தின் ரகசியமாகும்.

– வி.தனுசு, திருச்சி-14

பரிசு பெற்ற கட்டுரைக்கு

**மீரா வழங்கும் பரிசு**

**7.5 லிட்டர்**

**பிரஷர் குக்கர் &**

**பிரஷர் பான்**

அடுத்த மாதத்திற்கான தலைப்பு :–

***'எங்கள் வீட்டுச் சீயக்காய்ப் பொடியின் இரகசியம்...'***

*(என்னென்ன பொருட்களைச் சேர்த்துச் சிறப்பாகத் தயாரிக்கிறீர்கள்?)*

கடைசி தேதி: 9-4-94.

அரும்புகள் மலரும் ஆசைகள் நிறைவேறும்

# பவர்பின்

கண் இமைப்பதற்குள் உங்கள் அரும்பு மகள்
பருவ மங்கையாக வளர்ந்து விடுவாள்.
அவள் ஆசைக் கனவுகளை நனவாக்குவது
உங்கள் தலையாய பொறுப்பாகிறது.
அதை நிறைவேற்ற, 'பவர்பின்' மூலம்
முன் கூட்டியே திட்டமிடுங்கள்.

பவர்பின் இணையற்ற பாதுகாப்புடன்
வியப்பூட்டும் வளர்ச்சியும் தருகிறது. ஒவ்வொரு
காலாண்டுக்கும் 14.16% வட்டி விகிதத்திலும்
மறுமுதலீட்டுத் திட்டத்தின் கீழ் 20.12% வரை
வட்டியும் முறையாக வழங்குகிறது.
'பவர்பின் திட்டங்கள் தனியார் மற்றும்
அறக்கட்டளைகளுக்கு மிகவும் ஏற்றதாகும்.

**(வருமான வரிச் சட்டம் பிரிவு 80-Lன் கீழ்
வருமான வரிச் சலுகை உண்டு).**




மேலும் விவரங்களுக்கும், விண்ணப்பப் படிவங்களுக்கும்
தொடர்பு கொள்க:
**தமிழ்நாடு மின் விசை நிதி மற்றும்
அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்,**
(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்பேட்டை,
சென்னை-600018.
(ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில்)
**தொலைபேசி : 4997689**

பவர்பின் - பாதுகாப்பு நிறைந்த மனநிம்மதி தரும் ஒரு முதலீட்டு வாய்ப்பு.

( 6.8.'93 அன்று '[illegible]' நாளிதழில் வெளிவந்த விளம்பரத்தின் தொடர்ச்சி )

## தொடர் கதை 3

**கோ**ர்ட்டுக்குப் போகும் அவசரத்தில் வாசலை நோக்கிப் பறந்த போது போஸ்ட் மேன் தோன்றி வசந்தா கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

அதை ஒரு அவசர நோட்டம் விட்ட போது, கவர்ன்மெண்ட் விஷயம் என்று தோன்றியது. முத்திரைகள் நிறைந்த பழைய கவரில் 'எகானமி ஸ்லிப்' ஒட்டியிருந்தது. பிரசாத் பெயரில் வந்திருந்தது.

உள்ளே தூக்கி கடாசலாம் என்று முதலில் நினைக்க, அடுத்த கணம் மனத்தை மாற்றி கைப்பையைத் திறந்து அதற்குள் அதைச் செலுத்தி விட்டாள்.

வெளியே சாலையில் பத்து மணி கறுகறுப்புப் பற்றி விட்டது.

அங்கங்கே சாலை சந்திப்புகளில் வாகனக் கொத்துக்கள் தேக்கம் இட்டிருந்தன.

அவளது கார் ஒரு மாட்டு வண்டி ஆகியது. அவளது புருவமும் நெற்றியும் அடிக்கடி சுருங்கின. கோர்ட்டு எல்லையை அடைவதற்குள் அவளது எல்லா அவசரங்களும் பிழிபட்டு விட்டன.

கோர்ட் மைதானத்தில் ஜன சந்தடி பரவி இருந்தது. கறுப்பு அங்கிகள் அவர்களிடையே வேகமாக ஊடுருவிக் கொண்டிருந்தன.

கோர்ட் கல்படிகளில் ஏறியபோது ஜூனியர் மகாலட்சுமி எதிர்ப்பட்டாள்.

''குட்மார்னிங் மேடம்! கொஞ்சம் பொறுக்கலாம்! எதிர் கட்சி அட்ஜர்ன்மெண்ட் வாங்கிக்கிறாங்க!'' என்றாள்.

ஒரு பெரிய சுவாசம் அவளிடம் வந்தது. ''அம்மா'' என்றொரு வார்த்தை அவளது அசதியை எல்லாம் வெளிவிட்டது.

''நீ அட்டெண்ட் பண்ணிட்டு ரூமுக்கு வா! உன்கிட்டே பேசணும்!'' என்றாள். சேம்பரில் தடுப்புகளிடையே ஒன்றில் புகுந்து கதவை மூடினாள்.

வெளிச்சத்தங்கள் சின்ன அரவமாக மாறியிருந்தது.

டிப் டிப் டிப் என்று டைப் ஒலிகள் அந்த அரவத்தைத் துண்டு துண்டாக வெட்டிக் கொண் டிருந்தன.

மெதுவாக கைப்பையைத் திறந்தாள். கவரை வெளியே எடுத்தாள். சாதாரணமாகக் கணவருக்கு வரும் கடிதங்களை அவள் படிப்பதில்லை! ஆனால் அந்தக் கவர் கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது. அவர்களது பழைய விலாசத்திற்குப் போய்விட்டுத் திரும்பி வந்திருந்தது.

மேலே ஒட்டியிருந்த லேபிளைப் பிரித்தாள். உள்ளே இன்னொரு கவரும் ஒரு கடிதமும் இருந்தன. கடிதத்தை எடுத்துப் படித்தாள்.

எட்டு வருடங்களுக்கு முன் நடந்த டி.சி. விமான விபத்தை நினைவு ஊட்டி, ''அந்த விபத்தில் சிதறிய ஒரு தபால் பை சமீபத்தில் தான் கிடைத்தது. தங்கள் விலாசத்திற்குரிய 'கவர்' ஒன்று அதில் இருந்தது. அதை இத்துடன் அனுப்பி இருக்கிறோம். எட்டு வருடம் தாமதித்து கடிதத்தை விநியோகிப்பதற்கு வருந்துகிறோம்'' என்று தபால் இலாகா எழுதி யிருந்தது.

# ப்ரியகாயத்ரி

## ஸ்ரீவேணுகோபாலன்

கடிதத்தோடு உள்ள கவரை எடுத்தாள். எட்டு வருடத்திற்கு முன் உள்ள முத்திரை யோடு இருந்தது.

பிரசாத்துக்கு முகவரி இட்டிருந்தது.

அவர்களது பழைய விலாசம் குறிக்கப் பட்டிருந்தது.

எழுத்துக்கள் ஒரு பெண்ணின் கையெ ழுத்துப் போலிருந்தன.

ஆவல் தலை தூக்கியது.

கடித மடிப்பை மெள்ள பிரித்தாள்.

உள்ளே நல்ல வெளுப்பில் கடிதம்.

அது நாலாக மடிக்கப்பட்டிருந்தது.

பிரித்தாள்.

உள்ளே குண்டு குண்டாகப் பெண் கை யெழுத்து தெரிந்தது.

மை டியரஸ்ட்,

தாங்கள் விரும்பியபடி விமானத்திற்கு வேண்டிய விஷமத்தைச் செய்தாகிவிட்டது. உங்கள் பணக்கஷ்டம் தீர்ந்து விடும். சென்னை வந்ததும் சீக்கிரம் சந்திக்கிறேன். எப்படிச் சந்திப்பது?

உங்கள் ப்ரிய காயத்ரி

கடிதத்தின் கீழே மிக நுண்ணியதாக நம்பர். 39 பவநகர் எக்ஸ்டென்ஷன் முதல் தெரு என்று விலாசம் இருந்தது.

கடிதத்தை இரண்டு மூன்று முறை படித்தாள். அந்தக் கடிதம் தாங்கிய கவரை பல முறை பார்த்தாள்.

எட்டு வருடங்களுக்கு முன் பிரசாத் துக்கு வந்திருக்க வேண்டிய கடிதம்! இப் போது காலம் கடந்து வந்திருக்கிறது.

ஒரு சின்ன நடுக்கம் எழுந்தது. அவளது கணவனின் மன அந்தரங்கங்களை அவள் பரிசோதிப்பது போல் இருந்தது.

சரியாக மூச்சிட முடியவில்லை! நினை வுகள் கன்னா பின்னாவாக இழுத்தன.

ஓரளவு சீரடைந்தபோது யார் இந்த ப்ரிய காயத்ரி? இவளுக்கும் இவருக்கும் என்ன உறவு? விமானத்தில் இவர்கள் என்ன விஷமம் செய்தார்கள்? கடிதம் ஒரு மர்ம மாக இருக்கிறதே!

பிரசாத் இதற்கு எல்லாம் உடந்தையா?

கடிதத்தை மேஜைமீது நழுவ விட் டாள். பின்னால் நன்றாக சாய்ந்தாள்.

ப்ரிய காயத்ரி, ப்ரிய காயத்திரி..ப்ரிய காயத்ரி...

யார் அவள்?



பிரசாத்துக்கு முன்னமே ஒரு காதல் உண்டா?

என்ன உரிமையோடு ''டியரஸ்ட்'' என்று எழுதுகிறாள்?

சபாபதிக்கு ஏன் பயப்படுகிறார் என்று நினைத்தது போக, இப்போது புதிதாக மற்றொரு விஷயம் முளைக்கிறதே!

பதினைந்து நிமிடம் சென்றிருக்கும்.

கதவைத் திறந்து உள்ளே மகாலட்சுமி வந்தாள்.

''மேடம்! நீங்க வரலையான்னு ஜட்ஜ் கேட்டார்!'' என்று சிரித்த வண்ணம் சொல்லி அவள் அமர்ந்தாள்.

கண்களை மட்டும் வசந்தா பிரித்தாள். மகா சொன்னதை அவள் பொருட்படுத்த வில்லை என்று தெரிந்தது.

''என்ன மேடம்! உடம்பு சரியில் லையா?'' என்றாள் மகா.

வசந்தாவிடம் அந்த மௌனம் ஆச்சரிய மாக இருந்தது.

''ஏன், மேடம்! உங்களுக்கு என்ன?''

வசந்தா மெள்ள தன்னைத் தளர்த்தி னாள்.

''மகா...''

''என் வாழ்க்கையில் இப்போது புயல் வந்திருக்கு!''

''உங்க வாழ்க்கையிலா?''

''ஏன்? நான் ஒரு விதிவிலக்கா?''

''இல்லை மேடம்! எங்களைப் பொறுத்த வரை வாழ்க்கையிலே சில அதிர்ஷ்டசாலி கள் உண்டு. அதிலே நீங்க ஒருத்தர்னு நினைச்சோம்.''

''நானும் நினைச்சேன்! ஆனா... அது...''

''மேடம்! நீங்க சொல்றது ஆச்சரியமா யிருக்கு. பத்து வருஷம் உங்க குடும்ப வாழ்க்கை நீடிச்சாச்சு! இதுக்கு மேலே இனியும் மாறாதுன்னு நினைக்கிறேன்!''

''ஒரு ஆண் மனம் மாறுகிறதுக்கு எவ்வளவு நேரம் வேணும்?''

''என்ன மேடம்! போன வாரம் உங்க ரெண்டு பேரையும் சேர்த்து பார்த்திருக் கிறேன். 'Made for each other' ன்னு அப்போ கூடத் தோணிச்சு!''

''நானும் நினைச்சேன்! அந்த மாதிரி இல்லை! அவரோட நடவடிக்கை எனக்கு எட்டு வருஷமாவே மர்மமா இருந்துட்டு வந்திருக்கு.''



''அடக் கடவுளே! உங்க கணவரா? பிரசாந்தா?''

''ஆமாம்...''

தன் முகத்தைக் கைக்குட்டையால் மூடினாள். வசந்தா அழுகிறாள் என்று மகா நினைத்தாள். தனது 'பாஸ்' இது போல் நொந்ததே கிடையாது! துணிகரமான துணிச்சல் ஒரு தைரியம் அவளிடம் எப்போதும் உண்டு.

சிறிது நேரத்தில் முகத்தை துடைத்து விட்டு, ஒரு தெளிந்த பளிச்சுடன் வசந்தா பேச ஆரம்பித்தாள்.

விடாமல் ஒவ்வொரு விஷயத்தையும் கூறினாள்.

கடைசியில் அந்தக் கடிதத்தையும் எடுத்துக் காட்டினள்.

மகா எல்லாவற்றையும் மௌனமாக கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவளுக்கும் ஒரு கலக்கம் வந்திருந்தது.

வசந்தாவின் இந்த துக்க நிலையில் அவள் எந்தவித அபிப்பிராயத்தையும் கூற விரும்பவில்லை.

அதற்குப் பதிலாக பேச்சைத் திசை திருப்ப எண்ணினாள்.

''ஏன் மேடம்! இந்தக் கடிதமே ஒரு போலியாகத் தோணுது'' என்றாள்.

''எப்படிச் சொல்றே?'' என்றாள் வசந்தா.

''விமானத்திலே விஷமம் பண்ணியாச்சுன்னு அந்தப் 'ப்ரிய காயத்ரி' எழுதறாங்க! அந்தக் கடிதமும் அதே விமானத்திலே எப்படி வரும்?''

''ஓ!'' என்று சொல்லி வசந்தா யோசனையில் ஆழ்ந்தாள்.

சிறிது நேரத்திலேயே ஒரு பதிலோடு திரும்ப வந்தாள்.

''ஏன், மகா! விமானத்துக்கு உண்டான விஷமத்தைக் காலையிலேயே பண்ணிட்டாளோ என்னவோ! பண்ணிட்டு அவசர அவசரமா கடிதம் எழுதிப் போட்டிருக்கலாம்! சந்தர்ப்ப வசமா அந்தக் கடிதமும் அதே விமானத்திலே பிரயாணம் செய்திருக்கலாம்,'' என்று சொன்னவள்,

திடீரென்று நினைவு வந்தவள் போல,

''ஏன் மகா! எனக்கு நல்லா ஞாபகம் இருக்கு! அந்த விபத்து நடந்த போது கொஞ்ச நாளா' தபால் ஊழியர் ஸ்ட்ரைக்! அதனாலே எல்லா மெயிலையும் விமானத்திலே ஏற்றி இருந்தாங்கன்னு பேப்பர்லே போட்டிருந்ததாக! இத்தனை வருஷம் கழிச்சும் எனக்கு நல்லா ஞாபகம் இருக்கு! அதனாலே, வழக்கமாக அன்னிக்கு ரயில்லே ஏற வேண்டிய தபாலை விமானத்துக்கு அனுப்பி இருப்பாங்க! எந்த விமானத்துக்கு விஷமம் செய்தாளோ அதே விமானத்திலே தான் அவள் கடிதமும் சிக்கி இருக்கு!... நிறைய தபால் நஷ்டமாயிருக்குன்னு தபால் இலாகா வேறே அறிக்கை கொடுத்தது,'' என்றாள்.

சரியான விளக்கமாகப் பட்டது.

''இருந்தாலும் மேடம், சட்டுன்னு எதையும் நம்பிட வேண்டாம்,'' என்றாள் மகா.

''இந்தப் பாரு மகா! நான் என்னவோ இப்ப முடிவுக்கு வந்தாற்போல நினைக்காதே! கிட்டத்தட்ட ஏழெட்டு வருஷமா எனக்கும் சந்தேகம் அப்பப்போ ஏற்பட்டுக் கிட்டே வந்திருக்கு!'' என்றாள்.

மகா பார்வையை உயர்த்தி, ''அப்படியா?'' என்றாள்.

''ஆமாம்! இதுஒரு கிளைமாக்ஸ்.''

''இருந்தாக் கூட, மேடம்! மேலெழுந்த வாரியா, சில தடயங்களை வச்சுக்கிட்டு ஒரு தீர்மானத்துக்கு வந்துவிடக்கூடாது! இது உங்களுக்கு நல்லாத் தெரியும். கோர்ட்லே எத்தனையோ கேஸ் பார்த்துட்டோம்!''

வசந்தா நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''ஒத்துக்கறேன்! ஆனா என் கேஸ் அதைத் தாண்டிப் போனாப் போல இருக்கு!''

''மேடம்! நிச்சயம் இந்த ஸ்டேஜ்லே அதைத்தாண்டிப் போகலை...''

மகா அழுத்தமாக நிறுத்தியதும், வசந்தா கண்களைக் கொட்டிக் கொண்டு அவளைப் பார்த்தாள்.

அங்கே சூழ்நிலை சூடு ஏறியது போல தோன்றியது.

வசந்தாவின் பார்வை சுருங்கி இருக்க, அவள் என்னவோ யோசிக்கிறாள் என்று தெரிந்தது.

''ரைட், மகா!'' என்று அவள் ஆரம்பித்தபோது தனது ஜூனியருக்கு அவள் விட்டுக் கொடுப்பது போல இருந்தது. ''இங்கே நான் என்ன செய்யணும்னு சொல்றே?'' என்றாள் அவள்.

''விசாரிக்கணும்! உங்களுக்கு நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை மேடம்! எத்தனை கேஸ் பார்த்திருக்கோம். நாம்ப அனுமானம் செய்ததை விட உண்மையாக நடந்தது எவ்வளவு வித்தியாசமா இருந்திருக்கு...''

''ஐ அக்ஸெப்ட்! மகா! இப்போ விசாரிக்கணும்! என்ன விசாரிக்கணும்? எங்கே விசாரிக்கணும்?''

நெல்லிக்காயை ஊறுகாய்தான் செய்ய வேண்டும் என்றில்லை. நெல்லிக்காயைக் கொட்டையை எடுத்து விட்டு, நீர் சேர்த்து மிக்ஸியில் அடித்து, வடிகட்டி ஜூஸாக உபயோகப்படுத்தலாம். அவரவர் விருப்பத்தைப் பொறுத்து உப்போ, சர்க்கரையோ, தேனோ கூடச் சேர்க்கலாம். வைட்டமின் 'சி' ஏராளமாக உள்ள சத்தான பானம்.

- பெபா



''அதையும் என்கிட்டேயே கேட்கறீங்களா? ஒரு டிடெக்டிவ் ஏஜென்ஸி கிட்டே சொல்லுவோம்! இப்போ அது போல நிறைய செய்யறாங்க.. திருமணம் செய்யறதுக்கு முன்னாடி மாப்பிள்ளை எப்படி, சம்பந்தி எப்படின்னு விசாரிக்க உண்மை தெரிஞ்சு போய் எனக்குத் தெரிஞ்ச ஒரு கல்யாணமே நின்னு போச்சு...''

''ரைட்! ஒரு ஐடியா சொல்லிட்டே! நான் யோசிக்கிறேன்! அதுக்கு முன்னாடி என் மனசு அரிச்சுக்கிட்டே இருக்கே, மகா!''

''அதுக்கு நீங்கதான் மனசைத் தேத்திக்கிடணும்! அவ்வளவுதான் எனக்குத் தோணுது!''

வசந்தா சம்மதம் அடையாமல் எழுந்திருந்தாள்.

நிச்சயமில்லாத மனத்துடன் நடக்க, அடிகளும் நிச்சயமில்லாமல் விழுந்தன. கதவு பக்கம் போகத் திரும்பினாள்.

''ஒரு விஷயம் நிச்சயம் மகா!''

மகாவும் திரும்பினாள்.

''எத்தனையோ பெண்களுக்கு 'தைரியமாக இரு'ன்னு உபதேசம் பண்ணி இருக்கேன்! என்னை எல்லோரும் தைரியசாலின்னு புகழ்வீங்க. அப்படிப்பட்டவ. நான் கேட்கிறதைக் கேட்டு என் கணவர் விழிச்சா, நான் விட மாட்டேன். ஐ வில் டேர் ஹிம் டு பீஸஸ்!'' என்று பல்லைக் கடித்துக் கூறினாள்.

அவள் கடுமை அவள் தாடை இறுக்கத்தில் தெரிந்தது.

மகாவும் உடனே எழுந்து கட்டுகளை எடுத்துக் கொண்டாள்.

வெளியே அவளை நோக்கி வந்தாள்.

''ஒரு விஷயம் மேடம்! அப்படியே உங்க கணவர் விழிச்சா கூட, அவருக்கு 'Benefit of doubt' கொடுக்கணும். நீங்களும் ப்ராக்டிகலா இருக்கணும். உணர்ச்சிவசப் படக்கூடாது. தவிர...'' என்று இழுத்தாள்.

வசந்தா திரும்பிப் பார்த்தாள். மகாவின் வாதம் அவளை வெலவெலக்க வைத்திருந்தது. அது நிதர்சனமாக அவள் முகத்தில் தெரிந்தது.

''சொல்ல வேண்டியதை இன்னும் சொல்லு, மகா, நான் கேட்டுக்கத்தான் இருக்கேன். உன் எதிர்ப் பேச்சை மதிக்கிறவள் நான்!'' என்றாள் வசந்தா.

''இல்லை மேடம்! குடும்ப வழக்கு கேஸ்களில் எத்தனையோ குழந்தைகளையும், சிறுவர் சிறுமிகளையும் பார்த்திருக்கோம். உங்களுக்கு உங்க பெண் லதா இருக்கிறா. சின்னஞ் சிறுமி! நீங்க உங்க புருஷனோடு பேசாம இருக்கலாம். பிரிஞ்சு போகலாம். தனியா இருக்கலாம். உங்களுக்கு உங்க கணவன் தேவை இல்லை! ஆனா உங்க பெண்ணுக்கு அம்மாவும் வேணும். அப்பாவும் வேணும்! இது அவளோட பிறப்புரிமை!'' என்றாள் ஆணித்தரமாக.

மகா நினைப்பதை விட அந்த விஷயங்களில் வசந்தா ஏற்கெனவே அதிகமாக பாதிப்பாகி இருந்தாள்.

அவளை அப்படியே விட்டால் ஏதாவது மூர்க்கத்தனமாகச் செய்து விடுவாளோ என்று மகாவுக்குப் பயம்!

அதை அனுமதிக்கக் கூடாது என்று மகா விரும்பினாள்.

அதனால்தான் தைரியமாக அப்படிப் பேசி விட்டாள்.

**வீ**ட்டுக்கு வந்தபோது வசந்தா குழம்பிக் கொண்டு வந்தாள். ''ஏமாந்தோமே'' என்ற எண்ணம் மனத்தை வாட்டியது. பிரசாத் அவளுக்குத் தெரியாமல் ஒரு ரகசிய வாழ்க்கை வாழ்ந்திருக்கிறார். அவளை ஏமாற்றி வந்திருக்கிறார்.

நினைக்க நினைக்க அவளுக்கு ஆத்திரம் புடைத்து ஒரு பாம்புச் சீறல் சீறியது.

எத்தனை பெண்களுக்கு 'தைரியமாக இரு' என்று உபதேசித்திருக்கிறாள். தன் வாழ்க்கையில் மட்டும் பயந்து, நெளிந்து, ஒளிந்து... கோபமாகக் கதவைத் திறந்து உள்ளே போனாள்.

முகத்தை எல்லாம் கழுவி, ஹாலுக்குள் மீண்டும் வந்தபோது, ஹாலில் சன்னல் ஓரமாக ஒரு காகிதம் விழுந்து கிடந்தது.

புருவத்தைச் சுருக்கி அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள்.

அது ஒரு ஃபாக்ஸ் காப்பியின் நகல்.

வசந்தாவிற்கு,

இங்கிருந்து ஈரோட்டிற்கு 'ஸைட்' பார்க்கப் போறோம் எங்கள் புதுத் தொழிற்சாலைக்கு அது நல்ல இடம் என்று தீர்மானித்திருக்கிறோம்.

எனவே நாலைந்து நாட்களுக்கு உன்னோடு தொடர்பு கொள்ள முடியாமல் இருக்கும். திரும்ப சேலம் வந்ததும் பேசுகிறேன்.

'பிரசாத்'

என்று கண்டிருந்தது.

மணியைப் பார்த்தாள்.

ஐந்து முப்பது.

டெலிபோனை எடுத்து நம்பரைச் சுழற்றினாள்.

(தொடரும்)

---

வாரம் ஒருமுறை, சேகரித்த பால் ஆடையினை இரவில் சிறிது தயிர் ஊற்றி உறைய வைத்து மறுநாள் காலை ஒரு சாதாரண சமையல் கரண்டியினால் கழற்றிக் கொண்டிருந்தால் ஐந்தே நிமிடங்களில் வெண்ணெய் திரண்டு விடுகிறது. கரண்ட் செலவும் மிச்சம். மிக்ஸியைக் கழுவும் வேலையும் மிச்சம்.

- அனுராதா ராவ்



# "பெயர் சொல்லியே கூப்பிடு!"

சமீபத்தில் திருமணம் முடித்த எனது மகனும் மருமகளும் எங்களுடன் சில நாட்கள் தங்கி இருக்க வந்திருந்தார்கள். மருமகள் இனிய சுபாவம் உடையவள். எனது கணவர், மற்றும் மகளுடன் கலகலப்பாகவும் அன்புடனும் பழகினாள். அதே சமயத்தில் தன்னைவிட மூன்று வயது சிறியவளான என் மகள் "மன்னி" என்று அவளைக் கூப்பிட்டபொழுது, "அதெல்லாம் வேண்டாம். என்னை ராஜி என்று பெயர் சொல்லியே கூப்பிடு," என்று உறவின் பெயரால் அழைக்கப்பட மறுத்து விட்டாள்.

இந்த இடத்தில்தான் நம்முடைய இளைய தலைமுறையினருக்கு நமது பண்பாட்டின் அருமை புரியாமல் இருப்பது வருத்தத்தை அளித்தது.



ஒருவரைப் பெயர் சொல்லி அழைப்பதை விட, உறவைச் சொல்லி அழைப்பதன் மூலம் அவருக்கும் நமக்கும் அதிக நெருக்கம் இருக்கிறது என்று தானே உணர்த்துகிறோம்? "உமா" என்று என்னை அழைத்தால், நான் வேறு யாரோ, லக்ஷ்மி, கமலா, ஜானகி போன்ற ஒரு பெண்மணிதான். 'மன்னி' என்றால் எத்தனை அர்த்தங்களும் அதன் விளைவாக ஒரு நெருக்கமும் அந்தச் சொல்லில் தெறிக்கின்றன!

வேறு எந்த நாட்டிலும் சமூகங்களிலும் இல்லாத அளவுக்கு உறவுகளுக்குப் பெயர்கள் இங்கே உண்டு. அம்மா, அப்பா, அண்ணா, தம்பி, அக்கா, தங்கை, அத்தை, சித்தி, பாட்டி, தாத்தா, அத்தங்கா, அம்மாஞ்சி (அம்மான் சேய் - மாமாவின் குழந்தை அம்மாஞ்சி ஆகிவிட்டது) மாமா, மாமி, சித்தப்பா, பெரியப்பா... எத்தனை எத்தனை உறவுப் பெயர்கள்!

கணவனைக் கூடப் பெயர் சொல்லி அழைத்து, அவன் இவன் என்று ஒருமையில் குறிப்பிடும் அளவுக்கு நாகரிகம் முற்றிப் போயிருக்கும் இந்த நாளில், என் புலம்பலை யார் கேட்கப் போகிறார்களோ!

– உமா

# பெறுவீர் சான்மேக் கிஃப்ட் கார்டு.




## 5வது ஆண்டு நிறைவு விழாவையொட்டி சான்மேக் சிட்ஸ் அளிக்கும் சிறப்புச்சலுகை

### சான்மேக் கிஃப்ட் கார்ட்

எந்தவொரு சீட்டு குரூப்பிலும், சேரும் ஒவ்வொரு சந்தாதாரரும் பெறும் சிறப்புரிமை இது.

இந்த கிஃப்ட் கார்ட் பெறுவதைத் தொடர்ந்து சான்மேக் சிட்ஸிலிருந்து மட்டுமின்றி மற்ற சான்மேக் குரூப் நிறுவனங்களிடமிருந்தும் பலப்பல பயன்களை பெறலாம்.

அறிமுகம்

விசேஷ சீட்டு குரூப்புகள் ரூ.10,000 முதல் ரூ.5 லட்சம் வரை ஒவ்வொரு சந்தாதாரருக்கும் பரிசு உண்டு.




## சான்மேக் சிட்ஸ் லிமிடெட்

தலைமை அலுவலகம்

'லஷ்மி டவர்ஸ்', 27, டாக்டர் இராதாகிருஷ்ணன் சாலை, (எல்லோ பேஜஸ் அருகில்), மயிலாப்பூர், சென்னை-600 004 போன்: 8256637, 8251232.

கிளை அலுவலகங்கள்: சென்னை: அண்ணா சாலை, போன்: 8520921 • தி.நகர், போன்: 8278515, • அசோக்நகர், போன்: 4824757 • மயிலாப்பூர், போன்: 4992488 • அண்ணாநகர் மேற்கு, போன்: 6214454 • மேற்கு தாம்பரம், போன்: 401934 (PP) • புரசைவாக்கம், போன்: 6426036 • மதுரை போன்: 23334 • கோயம்புத்தூர் போன்: 46375 • திருச்சி போன்: 25324 • திருவண்ணாமலை போன்: 22922, 23333. • கும்பகோணம் • திருநெல்வேலி: போன்: 322032. • திருப்பதி போன்: 24376.

**BID FOR A BETTER LIFE**

“படீர்''

''பட்''

''என்ன திமிர் உனக்கு? எவ்வளவு நெஞ்சழுத்தம்... சரி! இன்னிக்கு ரெண்டில் ஒண்ணு பாத்துடுவம்... நா... போறேன் ஆபீசுக்கு... வரும்போது... அம்மா.. இவ இங்க இருக்கக் கூடாது... மூட்டையக் கட்டி அனுப்பு சனியனை... அவ்வளவுதான்'' ராஜூவின் கோபமான ஆர்ப்பரிப்பு.

பைக் சத்தம் 'டப.டப.டப.டப!..

''என்னடீ இது, என்ன தைரியம் உனக்கு? கை நீட்டி அடிக்கிற அளவுக்கு உனக்குத் துணிச்சல் எப்படி வந்தது? என்னதான் படிச்சிருந்தாலும் இப்படியா! அவன்தாண்டி உனக்கு எல்லாம். நாங்கள் எவ்வளவுதான் உனக்கு அரவணைப்பா இருந்தாலும் வயசானவங்க சாஸ்வதமா என்ன? குடும்பம்னா கோபம், தாபம், சண்டை, சச்சரவு எல்லாம் இருக்கத் தான் செய்யும். அதுக்காக புருஷனை கை நீட்டி




## வஸந்தஸ்யாம்

அடிப்பாளா ஒருத்தி? நல்லாத்தான் இருக்கு! வரவர காலம் இப்படியா போகும்?''

''என்னை மன்னிச்சிடுங்கோ அத்தை. எனக்கு என்ன ஆயிடுத்துன்னே தெரியலே. இவ்வளவு தூரம் நான் நடந்துப்பேன்னு எனக்கே தெரியல. எனக்குப் பயமா இருக்கு அத்தை. எனக்குப் பைத்தியம் கித்தியம் புடுச்சுடுத்தோ என்னவோ...'' அத்தையின் மடியிலேயே விழுந்து ஓவென்று அழுதேன்.

''அழுது என்ன ப்ரயோசனம்? கொஞ்சமாவது பொறுமை வேண்டாமா! நீ அவனை இவ்வளவு தூரம் எதிர்த்துப் பேசும் பொழுதே நெனச்சேன் 'என்னாச்சு இவளுக்கு இன்னிக்கு'ன்னு. ஆனா அவனை கை நீட்டி அடிக்கிற அளவுக்குப் போவேன்னு நினைக்கல. சே...சே...!''

நான் அழுது கொண்டு அப்படியே உட்கார்ந்திருந்தேன். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு அத்தை.



''சரி! சரி! இப்படியே
அழுதுண்டே உக்காந்
திண்டே இருந்தா செஞ்ச
காரியம் இல்லன்னு ஆயி
டுமா. மடமடன்னு எழுந்
திருந்து காரியத்தைப்
பாரு. மூஞ்சியை அலம்
பிட்டு சாப்பிடு. நா கோவி
லுக்குப் போய்ட்டு
வரேன். எனக்காகக் காத்
திண்டிருக்காம சாப்பிடு.
இனிமேலாவது பொறு
மையா இருக்கப் பழ
கிக்கோ...!'' அத்தை
போய்விட்டாள்.

அத்தைக்குத் தாங்
கொணாத வருத்தம்,
கோபம்... தன் மகன் ஒரு
பெண் கையால் அடிபட்டு
விட்டானே என்ற ஆத்தி
ரம். அத்தையென்றால்
மாமியாரும் கூட எனக்கு.
என் அத்தை மகன் ராஜு.
அத்தையின் கண் எதிரி
லேயே பிறந்து வளர்ந்து
சண்டை போட்டு, விளை
யாடியவர்கள் தான்
நானும் ராஜுவும். நான்
அவனை, வாடா போடா'
என்று தான் கூப்பிட்டுக்
கொண்டிருந்தேன் 'எல்
லோரும் எங்களை சரி
யான ஜோடி என்று கேலி
செய்வார்கள். கேலிக்குக்
காரணம் புரிய ஆரம்பித்
ததும் 'வாடா' மறைந்து
'வா'வாகியது.

என் அப்பாவிற்கு
பம்பாயில் ஒரு தனியார்
கம்பெனியில் வேலை.

சின்ன வயதிலிருந்தே
அத்தை தன் மூன்றாவது
மகன் ராஜுவுக்கு என்னை
'கொடுப்பதாக'ப் பேச்சு.
ராஜுக்கு பேங்கில் நல்ல
வேலை. வரதட்சிணை
இல்லாமல் என்னைக்
கல்யாணம் பண்ணிக்
கொண்டு தன் தம்பிக்குக்
கொஞ்சமாவது உதவ
லாமே என்ற நல்லெண்
ணம். நான் எங்கள் அம்மா
அப்பாவுடன் பம்பாயில்
சர்க்கார் வேலையில்
இருந்தேன். ராஜு பூனே
யில் வேலை பார்த்து வந்
தான். வந்தார்.... என்

கல்யாணத்தினால் என் பெற்றோருக்கு ஒரு பாரமாவது குறையுமே! கல்யாண நாள் நெருங்க நெருங்க மகிழ்ச்சியும், துக்கமும் வந்தது.

தம்பி மகள் என்பதனால் தானே அத்தை என்னிடம் பிரியமாக இருந்து என்னையே மருமகளாக்கிக் கொண்டாள். கூடப் பிறந்தவர்களைப் பார்க்கப் போவதற்கு என்னை அனுமதிக்க மாட்டாளா என்ன! பாசமுள்ள அத்தை! நிச்சயம் என்னை வாரம் ஒரு முறை இல்லாவிட்டாலும் பத்து நாட்களுக்கு ஒரு முறையாவது பாம்பே போக அனுமதிப்பாள்.

"கங்க்ராஜுலேஷன்ஸ்"

"டபிள் கங்க்ராஜுலேஷன்ஸ்"

ஓ! நான் மணப்பந்தலில் அமர்ந்திருக்கிறேனா! என்னையே மறந்து விட்டேன். 'கங்ராஜுலேஷன்ஸ்' சரி. டபிள் கங்ராஜுலேஷன்ஸ் எதற்கு? ஒரு வேளை ப்ரமோஷன் கிமோஷன் ஆகியிருக்கோ இவருக்கு! ஐயையோ!... சீ... ஏன் ஐயையோ... என்கிறேன்... ப்ரமோஷன் என்றால் மாற்றி விடுவார்களே பூனாவை விட்டு.

தலையை நிமிர்ந்து 'என்ன' என்பதைப் போல் பார்த்தேன். அவர் நண்பர் சொன்னார். "ராஜு திருச்சிக்கு மாற்றலுக்கு அப்ளை பண்ணியிருந்தானல்லவா? மாற்றல் கிடைத்து விட்டது. எல்லாம் பானை பிடித்தவள் பாக்கியம்"

முதல் அடி! கல்யாணப் பேச்சு ஆரம்பித்ததும் ராஜு எனக்கு எத்தனை லெட்டர் போட்டிருக்கிறார். ஒரு லெட்டரிலாவது தான் மாற்றலுக்கு அப்ளை பண்ணி இருப்பதாக எழுதினாரா! சே! ஆரம்பத்திலேயே இப்படி மறைக்கிறாரே!

கல்யாணம் நன்றாகவே நடந்தது. கல்யாணம் கிராமத்தில் நடந்ததால் போட்டோ எடுக்க ஆள் கிடைக்கவில்லை. டவுனிலிருந்து போடோக்ராபரைக் கூட்டிக் கொண்டு வருவதெல்லாம் அனாவசியச் செலவு. டௌரி இல்லாமல் வந்தவள் போட்டோ ஆசையெல்லாம் படலாமா! போட்டோ ஆசையை 'பட்' என்று மண்டையில் தட்டி அடக்கிவேன். பிறகு கல்யாணப் பத்திரிகை. என் நண்பர்கள், தோழிகள் எல்லோரும் மராட்டிக்காரர்கள். அவர்களுக்கு இங்கிலீஷ் பத்திரிகை அடிக்கக் கூடாதா? தமிழ்ப் பத்திரிகையையே அவர்களுக்கு அனுப்பி, அவர்கள் என்னைக் கேலி செய்ய, வெளியில் சிரித்து மழுப்பினாலும் மனசுக்குள் மிகவும் வருத்தமாகத்தான் இருந்தது. 'இதெல்லாம் சின்ன விஷயம்' என்று என்னை அடக்கி விட்டேன். அப்பொழுது எனக்கு வயது பத்தொன்பது.

கல்யாணம் முடிந்த கையோடு ராஜு என்னிடம் சொன்னார் " மீனா! உனக்கு ஸ்டேட் கவர்ன்மெண்ட் வேலை. தமிழ்நாட்டிற்கு மாற்றல் கிடைப்பது கஷ்டம். என் சம்பளமே நம் குடும்பத்துக்குப் போதும். வேலையை விட்டு விடேன்."

'விட்டு விடேன்!' என்றால் விட்டுவிடத்தான் வேண்டும் என்று அர்த்தம். கணவனே கண் கண்ட தெய்வம் என்று எனக்கு யாரும் சொல்லித் தரவில்லை. ஆனாலும் 'நீ இனி அவனுக்கு அடிமை, அவன்தான் உனக்குச் சோறு போடுபவன். அவன் சொன்னபடி தான் நீ கேட்க வேண்டும்' என்று பக்குவப்படாத, தன்னம்பிக்கையும் தைரியமும் இல்லாத என் மனம் கூறியதை ஏற்று நிரந்தர சர்க்கார் வேலையை ராஜினாமா செய்தேன். கண்ணீர் சிந்தாமல் மனதுக்குள் அழுதேன். இது எனக்கு விழுந்த இரண்டாவது அடி.

'வாழ்க்கையில் வரும் துன்பங்களைக் கண்டு பயப்படாமல் எதிர்நீச்சல் போட வேண்டும்' என்று எங்கள் 'காட்கில் டீச்சர் சொல்வதில் 'எதிர்நீச்சல்' என்ற வார்த்தைக்கு அர்த்தம் புரிந்து கொள்ளாமல் வாழ்க்கை என்னை இழுத்துச் செல்லும் போக்கிலேயே நீச்சலடித்துக் கொண்டிருந்தேன்.

எப்படியோ என் பிறந்த வீட்டாரையும் என் வேலையையும் விட்டு விட்டு திருச்சியில் குடித்தனம் நடத்த ஆரம்பித்தேன்.



3 டம்ளர் பயத்தம் பருப்புக்கு 1 டம்ளர் பச்சரிசி என்ற விகிதத்தில் கலந்து உப்பு, பச்சை மிளகாய், பெருங்காயம் கலந்து அரைத்து தோசை வார்த்தால் சூப்பராக இருக்கும். தொட்டுக் கொள்ள கொத்தமல்லி சட்னியோ தக்காளி சட்னியோ நன்றாக இருக்கும். ஆனால் இந்த தோசையைச் சூடாகச் சாப்பிட வேண்டும். அடை மாதிரி இருக்கும். வாயுத் தொல்லை இருக்கும் என்று நினைப்பவர்கள் அரைக்கும் போது கொஞ்சம் இஞ்சி சேர்த்து அரைக்கலாம்.

- உஷா நாராயணன்

# வேர்க்குருவை எதிர்க்க

சருமப்பாதுகாப்பிற்கு
18 மூலிகைகள்!

## மெடிமிக்ஸ்

ஆயுர்வேத டாய்லட் சோப்

முகப்பரு
பொடுகு
கரும்புள்ளி
சொறி
தேமல்











ZEST/MS/115

அத்தையின் மடி ஆதாரம். பிறகு அடுப்பு சமையல், மதுரைத் தமிழ் எல்லாமே எனக்குப் புதிது.

பல சரக்கு சாமான்கள் வாங்க, ரேஷன் கடை எல்லாம் போகப் பழகுவதற்குள் ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டேன். பம்பாயில் நான் கடைக்கெல்லாம் போனதே கிடையாது. பலசரக்குக் கடையில் சாமான்கள் வாங்கும்பொழுது எல்லாரும் என்னையே பார்ப்பது போல் இருக்கும். பொருத்தமில்லாத இடத்தில் நான் நிற்பது போல் தோன்றும். கல்யாணமாகி விட்டது. இனி நான் பெரியவள். அனாவசியமாகக் கூச்சப்பட்டால் குடும்பம் எப்படி நடத்துவது, என்று எப்படியோ ஒருவாறு பழக்கிக் கொண்டு விட்டேன்.

அடுத்த வருஷம் 'நிலேஷ்' பிறந்தான். அவனை வளர்ப்பதிலும் குழந்தையுடன் விளையாடுவதிலும் ஐந்து வருடங்கள் ஓடி விட்டன. பிறகு ச்யாமா பிறந்தாள். இவ்வாறு இன்னும் ஐந்து வருடங்கள் ஓடின. இதற்குள் இவர் எனக்குக் கொஞ்சம் நகை, கேஸ் அடுப்பு,பிறகு ஒரு ரேடியோ எல்லாம் வாங்கிக் கொடுத்தார்.

இப்பொழுது குழந்தைகள் படிப்புப் பிரச்னை. எனக்கு அவர்களை இங்கிலீஷ் மீடியத்தில் சேர்க்க வேண்டும் என்று ஆசை.

''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். நீ இங்கிலீஷ் மீடியத்தில படிச்சியே! என்ன பெரிசாக் கிழிச்சுட்டே! எல்லாம் தமிழ்ல படிச்சாலே போதும்'' என்று மாமியாரும் இவரும் சேர்ந்து ஒரே அடியாக அடித்து விட்டார்கள்.

என் குழந்தைகள் படிப்பைப் பற்றி என் அபிப்பிராயம் கூட நிராகரிக்கப்படுகிறதே... சே... எனக்கு ஒரு உரிமையும் கிடையாதா... ப்ச். நான் யார் இந்த வீட்டில்?... இதை யாரிடம் சொல்லி அழ முடியும். சொன்னாலும் அவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள்... மேலோட்டமாக ''இது ஒரு பெரிய குறையா என்ன! அன்பான கணவன், ஆசைக்கும் ஆஸ்திக்குமாக இரு செல்வங்கள். ஏன் அனாவசியமாக குறைப்பட்டுக் கொள்கிறாய் என்றுதான் சொல்வார்கள். கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது.

பிறகு பேங்கில் கடன் வாங்கி வீடு கட்டுவதாக ப்ளான். வீட்டுக்கு ப்ளான் போடும்பொழுதோ போட்ட பிறகோ கூட என்னிடம் காட்டவே இல்லை. எல்லாம் முடிந்து ப்ளான் அப்ருவல் ஆன பிறகு என் பிடுங்கல் தாளாமல் என்னிடம் காட்டினார். கல்யாணமாகி இத்தனை வருடங்கள் ஆகி விட்டதே என்ற உரிமையில், ''இந்த ஹால் நடுவே இல்லாமல் இப்படி இடது பக்கம்...'' என் எண்ணத்தைச் சொல்லவே விடவில்லை அத்தை. ''அதெல்லாம் கூடாது. நீளமாக கொல்லை முதல் வாசல் வரை இருக்க வேண்டும். அதுதான் சாஸ்திரம்'' அவ்வளவுதான். எதுக்கு என் குரலை வீணடிக்கணும். ஏன் இவர்கள் என்னை ஒரு பொருட்டாகவே மதிப்பதில்லை. ஏன் இப்படி என் மனதை நோக அடிக்கிறார். நான் ஏன் அடிபட்டுக் கொண்டே இருக்கிறேன். எப்படி, எப்பொழுது நிமிரப் போகிறேன். சாவு வருவதற்குள் ஒரு முறையாவது நிமிர்ந்து நிற்பேனா... ச்சீ... என்னைக் கண்டால் எனக்கே பிடிக்கவில்லை. கோழை.

ஆனால் எனக்குச் சாப்பாட்டுக்கோ, துணிமணிகளுக்கோ ஒரு குறையும் இல்லை. கல்யாணம் ஆன புதிதில் ஹனிமூன் எங்கே தெரியுமா? திருச்சியில் உள்ள எல்லா பாட்டிகள் வீட்டிற்கும் விருந்து சாப்பிடச் செல்ல வேண்டும். சாப்பிட்ட பிறகு ஒரு ரவிக்கைத்துணி வைத்துக் கொடுப்பார்கள். நமஸ்காரம் பண்ணிவிட்டு அதை வாங்கிக் கொள்ள வேண்டும். இந்தப் பெண் எப்படிச் சாப்பிடுகிறாள் எவ்வளவு சாப்பிடுகிறாள்? சாப்பிட்ட பிறகு அந்த இடத்தைச் சுத்தம் செய்ய 'சாணம்' பயன்படுத்துகிறாளா என்பதைப் பல ஜோடி கண்கள் பார்த்துக் கொண்டே இருக்கும். 'இல்லை இருக்கட்டும்மா. நான் எடுத்துச் சுத்தம் பண்ணுகிறேன். நீ புதுப் பொண்ணு' வாய்தான் சொல்லுமே தவிர கை அப்படியே நிற்கும். இந்த 'எச்சில் இடும்' பரீட்சைதான் எனக்கு 'ஹனிமூன்'. சரி. இப்போது எதற்கு 'மலரும் நினைவுகள்!'

எப்படியோ வீடுகட்ட ஆரம்பித்தாகி விட்டது. 'வாஸ்து பூஜை'க்குக் கூட என்னை கூட்டிப் போனதாக ஞாபகம் இல்லை. வீடு கட்டிக் கொண்டிருக்கும் பொழுது கூட என்னை ஒரு முறை கூடக் கூட்டிக் கொண்டு காண்பிக்கவில்லை. எனக்கு ஆவலை அடக்க முடியவில்லை. ஒருநாள் மதியம் இவர் ஆபீஸ் போன பிறகு பக்கத்து வீட்டு கல்யாணி, லக்ஷ்மி - இருவருக்கும் காலேஜ் லீவு - இருவருடன் நானும் மூன்று வாடகை

மாவிளக்கு போட்டு, யாரும் சாப்பிடாமல் வீணாகிறதா? கவலைப்படாதீர்கள். சிறிது நீர் தெளித்துப் பிசைந்து, தட்டி எண்ணெயில் போடுங்கள். இந்தத் திடீர் அதிரசம் உடன் பறந்துவிடும்.

– பெரபா



பல் ஈறு வீங்கிக் கொண்டு வலிக்கிறதா? படிகாரத்தைச் சிறிது தூளாக்கி வெந்நீரில் போட்டு வாயைக் கொப்பளிக்கவும். வலி மறைந்துவிடும். நகக் கணுக்கள் வீங்கிக் கொண்டு வலித்தாலும், படிகாரத் தூளை வெந்நீரில் போட்டுக் கைவிரல்களைச் சிறிதுநேரம் அதில் வைத்தால் வலி நிவாரணம் கிடைக்கும்.

– பத்மினி



சைக்கிளில் போய்ப் பார்த்தோம். அப்பொழுது அத்தை ஊரில் இல்லை. துரதிர்ஷ்டவசமாக இன்னொரு நண்பர், இவருடன் பேங்கில் வேலை பார்க்கிறவர் - கண்ணன் தன் மனைவியுடன் தன் வீட்டைப் பார்க்க வந்திருந்தார். கண்ணன் மனைவி கொடுத்து வைத்தவள். அவர் மூலமாக நாங்கள் மூவரும் சென்றது இவருக்குத் தெரிய வந்தது. திட்டுவதற்குக் கேட்கவா வேண்டும்?

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இவர் திட்டுவதைக் கேட்டால் யாரும் இவர் பேரில் தப்பே சொல்ல மாட்டார்கள். அப்படி அழகான பொறுப்பான வார்த்தைகளையே உபயோகிப்பார். ''என்ன தைரியம் உனக்கு! பக்கத்து வீட்டுப் பெண்களையும் கூட்டிக் கொண்டு சைக்கிளில் போயிருக்கிறாயே! இது என்ன பம்பாய்னு நெனச்சயா? எங்காவது விழுந்து ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆச்சுன்னா யார் பொறுப்பு? மூளை வேண்டாம்!'' வாய் பொறுப்பான வார்த்தைகளைக் கொட்டியது. கை பொறுப்பில்லாமல் கொஞ்சம் கூட இங்கிதம் இல்லாமல் பளீர் என்று அறைந்தது.

சே! அடிக்கும் அளவுக்கு நான் என்ன தப்பு பண்ணிட்டேன். பக்கத்து வீட்டுப் பெண்கள் தினமும் சைக்கிளில் காலேஜ் செல்பவர்கள்தான். நான் பாம்பே தெருவில் பள்ளிக்கே சைக்கிளில் சென்று கொண்டிருந்தவள்தான். இப்படி நான் செய்ததற்குக் காரணம் யார்? இவர் ஏன் இப்படி என் ஈகோவை பாதிக்கும்படி நடந்து கொள்கிறார். இந்த அடி என்னைக் கொஞ்சம் உசுப்பி விட்டது. இப்படி எத்தனையோ! பனியன் நன்றாக வெளுக்கவில்லை என்பதற்காக அடி - மண்ணெண்ணை ஸ்டவ்வை ஊதி அணைத்ததற்காக ஒரு அடி. என் உயிர்மேல் அவ்வளவு அன்பாம்.

எப்படியோ! புது வீடு கிரகப்பிரவேச நாள் நிச்சயிக்கப்பட்டது. புது வீட்டில் தண்ணீர் வசதி போதாததால் அங்கு பால் காய்ச்சி டிபன் காபி முடித்துவிட்டுப் பழைய வீட்டில் சாப்பாடு என்பது ஏற்பாடு. எல்லோரும் காலை 5.00 மணிக்கே கிளம்பி புது வீட்டிற்குச் சென்று விட்டோம். ஹோமம் முடிந்து பால் காய்ச்சும் நேரம். என் ஓர்ப்படி வாத்தியார் மகள். அவளுக்குப் பூஜை, ஆசாரம் எல்லாம் முறைப்படி தெரியும். அதனால் அவளிடம் கேட்டேன்.

''மன்னி! பால் காய்ச்சட்டுமா! இல்லாட்டா வாத்தியார் வந்து மந்திரம் ஏதாவது சொல்லணுமா! ''

''இதுக்கென்னடி மந்திரம். பால் காய்ச்ச வேண்டியதுதான். நீ போய்த் தட்டில் வெத்திலை பாக்கு எடுத்துவை'' என்று என்னை விரட்டினாள்.

அதையெல்லாம் எடுத்து வைத்து விட்டு உள்ளே வந்தால் அவள் பால் காய்ச்சி எல்லோருக்கும் ஒரு தம்ளரில் ஊற்றிக் கொடுத்துக் கொண்டு இருக்கிறாள். சே! என்ன வீடு! என்னைக் கேட்காமல் கட்டி னாலும் இது என் வீடுதானே! அதில் பால் காய்ச்சக் கூட நான் கொடுத்து வைக்கவில்லை பாத்தியா! மனசுக்குள் ரொம்ப அழுதேன். அழுகையை அடக்கும் முயற்சியில் மூக்கு வலித்தது.

புது வீட்டிற்குக் குடி வந்தோம். வருடங்கள் அதே மாதிரி ஓடின. குழந்தைகள் வளர்ந்து விட்டார்கள் என்ற போதிலும் இவர் அடியை நிறுத்தவில்லை. இவரிடம் ஒரு குறையும் கிடையாது. தங்கமானவர். வீட்டில் எல்லாப் பொருட்களும் - ஆடம்பரப் பொருட்களும் வாங்கிப் போட்டார். ப்ரிஜ், டீ.வி., க்ரைண்டர் என்று ஒரு குறையும் இல்லை. ஆனால் இவரிடம் உள்ள குறையை எடுத்துச் சொன்னால் அதை ஒப்புக் கொள்ளவே மாட்டார். தன் குறை தனக்குத் தெரியாது. ஒத்துக்கொள்ளா விட்டாலும் பரவாயில்லை. ஆனால் அதற்காகக் குறையை எடுத்துச் சொல்பவர்மேல் கோபப்பட்டு என்ன பிரயோஜனம். அதுவும் அந்தக் குறை என்னால் எடுத்துச் சொல்லப்பட்டால் வார்த்தைகள் வளர்ந்து, சண்டை வந்து 'பட்' என்று அடித்துவிடுவார். இதுதான் அவருடைய பலவீனம். இத்தனை வயசாகியும் இப்படி இருந்தால் எந்த மனைவி பொறுத்துக் கொள்வாள்.

ஒரு முறை ரொட்டி இடும் அப்பளக் குழவியால் என்னை அடித்தார். காலேஜ்

படிக்கும் மகன் குறுக்கே வந்து தடுத்தான். ''இது புருஷன் பொண்டாட்டி விஷயம். நீ குறுக்கே வரவேண்டிய அவசியமில்லை'' என்றார், அவனிடம்... எப்படி இருக்கும்? அவனும் ''சாரிப்பா'' என்று சொல்லி அங்கிருந்து நகர்ந்து விட்டான். சீ... வெட்கமாக இல்லை?

சில சமயம் நினைத்துக் கொள்வேன். இவர் என்ன? குடித்து விட்டா அடிக்கிறார். எப்பவாவது கோபம் அதிகம் வந்தால் தானே அடிக்கிறார். அதுவும் எப்பவாவது தானே! தினம் அடிபடுவதை விட எப்பவாவது அடிபடுவது உசத்தி தானே... சீ, படித்த பெண் பேசும் பேச்சா இது! கல்யாணம் ஆன புதிதில் பல்தேய்க்க ப்ரஷ்ஷில் பேஸ்ட் வைத்துக் கொடுக்க வேண்டும். கக்கூசு போகும் பொழுது வாளியில் தண்ணீர் பிடித்து வைக்க வேண்டும். குளிக்க வெந்நீர் சரியான பதத்தில் தண்ணீர் கலந்து வைக்க வேண்டும். சோப் எடுத்துக் கையில் கொடுக்க வேண்டும். துண்டு, ஜட்டி, பனியன், பேண்ட், ஷர்ட் எல்லாம் பெண்டாட்டி எடுத்துக் கொடுக்க வேண்டும். அதுதான் ஆம்பிளைக்கு அழகாம். படுக்கை விரிப்பது, எடுத்து வைப்பது, காபியை ஆற்றிக் கொள்வது, தான் சாப்பிடும் தட்டைத் தானே எடுத்து வைத்துக் கொள்வது, தன் தட்டைத் தானே கழுவுவது இதெல்லாம் செய்தால் இவரை ஆண் பிள்ளை என்று சொல்ல மாட்டார்களே. இதற்குத்தானே கல்யாணம் பண்ணிக் கொள்கிறான் ஒவ்வொரு கையாலாகாத ஆண் பிள்ளையும், இதற்குத் தூபம் போடும் மாமியார். இதை மனத்தளவிலே மட்டும் எதிர்த்துச் செயலிலே காட்டப் பயப்படும் என் போன்ற மனைவிகள் எத்தனை பேரோ? சே... திருப்பித் திருப்பி பழைய நினைவுகளிலேயே மூழ்கிவிடுகிறேனே!

ஒரு நாள் என் அப்பா அம்மா பம்பாயி விருந்து வந்திருந்தார்கள். மகள் வீட்டில் டீ.வி. மிக்ஸி என்றும் பழங்கள், காய்கறிகள், காம்ப்ளான் என்றும் சௌக்கியமாக இருப்பதைப் பார்த்து பூரித்துப் போனார்கள். என் அப்பாவிற்கு தேங்காய் கலந்த சேவை என்றால் ரொம்ப பிடிக்கும். இவருக்கு மோர்க்குழம்பு கலந்த சேவை பிடிக்கும். ஆகையால் இரண்டும் செய்து முடித்துத் தட்டை வைத்தேன். அப்பொழுது பம்பாயில் கிரைண்டர் வசதி கிடையாதாகையால் சேவை இட்டிலி எல்லாம் அம்மாவால் அதிகம் செய்ய முடியாது. எல்லாரும் உட்கார்ந்தார்கள். தேங்காய் சேவையை அப்பாவுக்குக் கொஞ்சம் போட்டதும் அருகில் உட்கார்ந்திருக்கும் இவருக்கும் கொஞ்சம் போட்டேன். பிறகு எல்லா சேவையையும் எல்லோரும் சாப்பிட்டு திருப்தியாக ஏப்பம் விட்டுக் கொண்டே எழுந்தார்கள்.

''மீனா! தேங்காய் சேவை ரொம்ப ஜோர்!'' என்றார் அப்பா. சந்தோஷமும் பெருமையுமாக இவர் முகத்தைப் பார்த்தேன். 'நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே!' என்ற அர்த்தத்தில். இவர் கண்ணாடி முன் நின்று பல்லைக் குத்திக் கொண்டிருந்தார். வராந்தாவில் எதிர்த்த வீட்டு கலாவும், அவள் தம்பி ரமேஷும் டீ.வி பார்த்துக் கொண்டிருந்தார்கள். காலேஜ் லீவு. டீ.வி. வந்த புதிது.

''பல்லில் என்ன'' - என்றேன்.

''என்னவா! இந்தத் தேங்காய் சேவை சனியனை எல்லாம் ஏன் எனக்குப் போட்டே? அதுதான் பல்லில் மாட்டிக் கொண்டு ப்ராணனை வாங்கறது.''

''உங்களுக்குப் பிடிக்காட்டா சாப்பிட்டிருக்க வேண்டாமே! அதுக்காக சனியன் - கினியன்னு எதுக்குச் சொல்லணும். அதை விரும்பிச் சாப்பிடறவாளுக்கு எப்படி இருக்கும்?''

''எப்படி இருக்கும்! எனக்குப் பிடிக்கலைன்னு தெரியும்ல? ஆம்படையானுக்கு அப்படிப் பார்த்துப் பார்த்து சாப்பாடு போடணும்.''

....'என்னவோ சொல்லிக் கொண்டே போனார்.'



கொழுக்கட்டை மேல் மாவு (அரிசி மாவு) அதிகமாகிவிட்டால், அதில் உப்பு, காரம், பெருங்காயம் போட்டு நன்றாகப் பிசைந்து, சிறு உருளைக் கிழங்கு சைஸில் உருட்டிப் போட்டு, நிறைய எண்ணெய் விட்டுக் கடுகு தாளித்து உருளைக்கிழங்கு ரோஸ்ட் செய்வது போல் ரோஸ்ட் செய்யவும். மிக மிகச் சுவையாக இருக்கும். இதற்கு மணிக் கொழுக்கட்டை என்று பெயர்.

- சித்ரா கிருஷ்ணஸ்வாமி

''சனியன்னு சொல்ல வேண்டாம்னு சொன்னதுக்கு இவ்வளவு பேச்சா?''

''அப்படித்தான் பேசுவேன் - என்னடி செய்வே?''

பதில் சொல்லாமல் டிபன் பாக்ஸைக் கொண்டு வந்து நீட்டினேன்.

''உன் டிபனும் வேல[illegible]ம் ஒன்னும் வேண்டாம்!'' டிபன் பாக்ஸை விசிறி அடித்ததில் என் இடது கண் புருவத்தில் பட்டு ரத்தம் வரத் தொடங்கியது.

திரும்பிப் பார்த்து விட்டுப் பாராதது போல் கோபமாக ஆபீஸ் போய் விட்டார். பிறகு ஆஸ்பத்திரி போய் மருந்து போட்டு அவஸ்தைபட்டது எல்லாம் சாதாரண விஷயம். ஆனால் இந்த அடி என் வாழ்நாளிலேயே மறக்க முடியாத அடி. இனி என்னால் தாங்க முடியாது. இனி எதிர்ப்பதைத் தவிர வேறு வழி இல்லை. என் கோபத்தை என் திருமங்கல்யத்தில்தான் காட்ட முடிந்தது அப்போதைக்கு. கழற்றி விசிறி அடித்தேன் தாலியை. என் அம்மா பதறிப் போய் அதை எடுத்து என்னைச் சமாதானப் படுத்தினாள். பயனில்லை. நான் மட்டும்தான் இவரிடம் தோற்க வேண்டுமா? என் அம்மாவும் என்னிடம் தோற்கட்டுமே! என் அம்மாவும் பத்தாம் பசலி இல்லை. சிறிது நேரம் முயன்று பிறகு பேசாமல் போய் விட்டாள். அன்றிலிருந்து தாலி இல்லாத சங்கிலி மட்டும்தான் என் கழுத்தில் தொங்கியது. மனைவியென்றால் உணர்ச்சி அற்ற, ஆசை அற்ற அடிமைப் பெண் என்பது அவருடைய அகராதி என்றால் 'திருமாங்கல்யம்' என்பது தாலியற்ற, வெறும் சங்கிலி என்பது என் அகராதி.

என் அப்பா அம்மா முன் என்னை அடித்து விட்டுத்தான் தான் ஒரு ஆண் பிள்ளை என்று நிரூபிக்க வேண்டுமா, என்ன? இவன்தான் சரியான ஆண் பிள்ளை பெண்டாட்டியை அடக்க-அடிக்கத் தெரிந்த வீரன் என்று ஊர் புகழும்.

என் அப்பா அம்மா மனது என்ன பாடு படும்! இதெல்லாம் இவருக்கு எங்கே தெரியப் போகிறது? என் கோபத்தை ஆவேசமாக மாற்றியது இந்த நிகழ்ச்சி. மனம் பழிவாங்கத் தருணம் பார்த்துக் கொண்டே இருந்தது. குழந்தைகள் இருவருக்கும் கல்யாணமாகி மகள் புக்ககம் போய் விட்டாள். மகனுக்கு டில்லியில் வேலை. அவனும் மனைவியுடன் டெல்லி சென்று விட்டான். இத்தனை வருடங்களுக்குப் பிறகு இவரிடம் கோபத்தைக் காட்டி என்ன பிரயோஜனம்? இவருக்கு வயது அறுபது ஆகப் போகிறது. பாவம், ரிடையராகப் போகிறார். கிழவனைப் பழி தீர்த்து இனி என்ன ஆகப் போகிறது.

ஆனால் இந்தப் 'பாவம் - போனால் போகிறது' என்ற மருந்தினால் என் மனப் புண் ஆறவில்லை.

ஒரு முறை மாமியார் வந்திருந்தார். மாமியாரால் அதிகம் நடக்க முடியாது.



வெண்டைக்காய் கறி வதக்கும்போது, அதை அடுப்பி லிருந்து இறக்கி வைப்பதற்குச் சற்றுமுன், வேர்க் கடலையைக் கொஞ்சம் வறுத்து ஒன்றிரண்டாகப் பொடி செய்து அதில் போட்டு வதக்கினால் குழந்தை கள் விரும்பிச் சாப்பிடும். சுவையும் அதிகமாக இருக்கும்.

- ஜானகி ரங்கநாதன்

தள்ளாமை வந்துவிட்டது. நாங்கள் மூன்று பேர்தான் வீட்டில். காலையில் ஐந்து மணிக்குப் பால்காரன் வருவான். நான் பாலை வாங்கி வைத்து விட்டுக் குளிக்கப் போவேன். சில சமயம் அவன் லேட்டாக வருவான். நான் குளிக்கும்பொழுது பால் வந்தால் இவர் வாங்கி வைத்து விடுவார். அன்றும் நான் குளிக்கும் பொழுது மணிச் சத்தம் கேட்டது. இவரும் எழுந்திருக்க வில்லை. மாமியாரும் குரல் கொடுக்க வில்லை. பால் காரன் அப்புறம் கொடுத்துக் கொள்ளலாம் என்று நினைத்துப் போயிருப் பான். அப்புறம் என்றால் எட்டு மணி.

இவர் எழுந்ததும் சொன்னேன். 'பால் காரன்' மணி அடித்தான் நீங்கள் தூங்கி விட் டீர்கள். போய் விட்டான்.''

பால் வாங்குவது ஆண் பிள்ளையின் வேலையா என்ன! ஏதோ போனால் போகிற தென்று என்னிக்காவது வாங்கினால்... என்னை என்ன வேலைக்காரன் என்று நினைத்து விட்டாளா! இதெல்லாம் அவர் வாயினால் சொல்லவில்லை. முகம் சொல் லியது.

''அதற்காக பால் வாங்க ஆளா போட முடியும்'' என்றார்.

''ஆள் போடச் சொன்னேனா! அதுக்குத் தான் சர்க்கார் பாலே வாங்கலாம்னேன். அவன் பாட்டுக்குப் பால் கவரை பாத்திரத் தில போட்டுட்டுப் போயிடுவான்.''

இப்படியே பேச்சு வளர்ந்தது. எட்டு மணிவரை காபி கிடைக்காது என்ற கோபம். இவள் என்னைக் குறை சொல்வதாவது! என்ற ஆத்திரம். சர்க்கார் பால் வாங்கச் சொல்லி இவள் சொல்லி நான் கேட்ப தாவது என்ற ஆணாதிக்கம். இந்த மூன்றும் எவரிடம் இருக்கோ அவருக்குத் தன் குறை தெரியாது.

''பேச்சை நிறுத்து. அதிகம் பேசினே பல்லை ஒடச்சிடுவேன்.''

''ரொம்ப சமத்தும்பா! எல்லோரும் பெண்டாட்டி பல்லை ஒடைக்கத் தெரிஞ்ச ஆண் சிங்கம்னு ஒங்களுக்கு ஒரு சிலையே வெக்கடுவா!''

''என்னடி சொன்னே?''

'பட்'' - எனக்குக் கிடைத்த பரிசு. மாமி யார் முகம் தெரிகிறதா என்று பார்த்தேன். தெரிந்தது.

''பட்'' எனக்கு என்னவோ பரிசைத் திருப்பிக் கொடுத்து விடவேண்டும் என்று தோன்றியது. என் ஈகோ என்னை ஒரு வினாடியில் உசுப்பி சுறுசுறுப்பூட்டியது. தள்ளாடித் தள்ளாடி வந்த மாமியார் தன் மகனுக்குக் கிடைத்த பரிசைப் பார்த்து விக்கித்து நின்றார்.

என் தலை முதல் உள்ளங்கால் வரை யாரோ எனக்கு ஐஸ் வைத்தது போன்ற பேரானந்தம். ரோஜா இதழ்களில் குளித் தேன். பன்னீரில் நனைந்தேன். ஆகாயத்தில் பறந்தேன். பிறவிப் பயனை அடைந்தேன். இந்த ஆனந்தத்திற்கு ஈடேது? யாருக்குக் கிடைக்கும் இந்தச் சந்தோஷம். முப்பது வருட சிறை தண்டனைக்குப் பிறகு விடு தலை கிடைத்த ஆனந்தம்.

''இன்னமுமா அப்படியே ஒக்காந் துண்டிருக்கே. நல்லாயிருக்கு. மணி பத் தொண்ணு ஆகப் போறது. நான் பத்து மணிக்கு கோவிலுக்குப் போவேன். மூஞ்சி அலம்பிண்டு வா. அழுது அழுது மூஞ்சி யெல்லாம் வீங்கி...'' அத்தையின் குரல்.

''சாயங்காலம் அவன் வந்ததும் நான் சமாதானப்படுத்தறேன். நீயும் அவன்கிட்ட மன்னிப்புக் கேட்டுடு. இனிமே இப்படி கோபப்படாதே. எல்லாம் சரியாகிவிடும்.''

அத்தை சொல்லிக் கொண்டே போனாள். இனி எனக்குக் 'கணவனே கண்கண்ட தெய்வம் போல வாழத் தெரி யும்', 'மணாளனே மங்கையின் பாக்கியம்' என்று பேசத் தெரியும். 'மாதர் குல மாணிக்கமாய்' இருக்கத் தெரியும்.

அகோரப் பசியுடன் முப்பது வருடம் போராடிய என் ஈகோவுக்கு இன்று இத்தனை வருஷத்திற்குப் பிறகு 'செமை' தீனி போட்டு விட்டேன். என் மனத்தை குத்திக் குத்திப் புண்ணாக்கிய ஆண்மையை 'பட்' என்று ஒரே அடியில் தரை மட்டமாக்கி விட்டேன். அதற்காக மிகவும் வருத்தப் படுபவள் போல் நடிக்கத் தெரியும். இனி யாராலும் முக்கியமாய் 'இவனால்' என் ஈகோவைத் தொடக் கூட முடியாது.

'என்னை மன்னிச்சுடுங்கோ... ஏதோ கோபத்திலே....' சாயங்காலத்திற்கு ஒத்திகை பார்த்துக் கொண்டேன்.

காதுகளில் ஒலித்தது 'பட் பட் பட்' என்னை நானே சபாஷ் போட்டுக் கொண் டேன் 'குட், குட், குட்'.

"மேடம்... ரொம்ப டென்ஷன் ஆகாதீங்க" இந்த வார்த்தைகள் பெரும்பாலும் வேலைக்குச் செல்லும் பெண்களிடம் ஒதப்படுகிற வேதங்கள் போல.

பெண்களே நீங்கள் உடையுங்கள். ஆனால் அலுவலகத்தில் அல்ல. அதனால் ஏற்படும் பிரச்சனைகள் ஒன்றல்ல தெரியுமா?

"ஏன் மேடம்.. அழுநீங்க..ஸாரி..நீங்க அழுவீங்கன்னு தெரிஞ்சிருந்தா நான் உங்களை ஏதும் கேட்டேயிருக்க மாட்டேன்... பாவம் உங்களுக்கு ஏகப்பட்ட பிரச்னைகள்... என்ன செய்யறது..வேலைக்கு வரணும்னு உங்க தலையெழுத்து..." என்று அவர்கள் உங்களிடம் கூறும்போது உங்களை ஆட்கொள்கிறதே கழிவிரக்கம், அதுதான் உங்களுக்கு நீங்களே தோண்டிக் கொள்ளும் குழி.

ஒரு சகோதரிக்கு நேர்ந்த கதி என்ன தெரியுமா? சாதாரண ஒரு விரிசல் அவள் குடும்பத்தில் - இத்தனைக்கும் அவள் கணவன் மிகவும் சாது, கூடவே அப்படி ஒரு ஒத்துழைப்பு. அந்தச் சகோதரி அவள் குடும்பத்திற்கு ஒரே பெண் என்பதால் மிகவும் செல்லம் வேறு. சாதாரணமாய் அவள் கணவன் ஒரு வார்த்தை சொல்லப் போக இவள் பதில் கூற, வார்த்தைகள் முற்றிவிட கடைசியில் அலுவலகத்தில் வெடித்து விட்டது அவளின் ஆற்றாமை.

"த்சொ...த்சொ...பாவம் மேடம்... உங்களுக்கு இருக்கிற அறிவுக்கும் அழகுக்கும்... உங்க கணவர்...சே..." என்றதுதான், அவள் அந்தச் சக ஊழியரின் சொல் அலங்

# ரொம்ப டென்ஷன் ஆகாதீங்க...




காரத்தில் உச்சி குளிர்ந்து தன்னை அடுத்தவர்களின் இரக்கத்திற்கு ஆளாக்கிக் கொண்டாள். முடிவு என்ன தெரியுமா? அதே சக ஊழியர் ஒரு கல்யாணத்தில் இந்தச் சகோதரியின் கணவரைப் பார்த்து கண்டதையும் சொல்ல இப்போது அவர்கள் நிரந்தரமாய் பிரிந்து விட்டார்கள். கொஞ்சம் அறிவு முதிர்ச்சியுடன் அந்தச் சகோதரி செயல்பட்டிருந்தால் இந்தப் பிரிவைத் தவிர்த்திருக்கலாமே.

தெரிந்ததை எல்லாம் சொல்லாதே

கேட்டதை எல்லாம் நம்பாதே

முடிந்ததையெல்லாம் செய்யாதே... இது ஒரு இத்தாலியப் பழமொழி.




வதந்தி என்பது ஒரு உயிர்க்கொல்லி தெரியுமா? நீங்கள் அலுவலகம் வந்தீர்களா? வாருங்கள். உங்களை முழுமையாக வேலையில் ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். உண்மையிலேயே உங்களுக்குத் தலை போகிற பிரச்சினையா? உங்கள் கணவருக்கும் தெரிந்த ஒரு குடும்ப நண்பரையோ அல்லது சிநேகிதியையோ ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அந்த நண்பர் உங்கள் குடும்பத்திற்கு எந்தக் கட்டத்திலும் ஊறு விளைவிக்க மாட்டார் என்ற நம்பிக்கை பெற்றபிறகு உங்களின் பிரச்னைகளை விவாதியுங்கள்.

துன்பங்கள் நிரந்தரமானவை அல்ல அவை எப்போதும் பாலத்தின் அடியில் ஓடுகின்ற தண்ணீரைப் போல ஓடிவிடும் என்று அன்னை சாரதாமணி கூறினார்.

துன்பம், கஷ்டம் இவைகளெல்லாம் எப்படி வருகிறது என்பது பற்றி ஒரு மனவியல் கருத்தரங்கம் நடந்தது.

''என்னைப் பொறுத்தவரை என் மாமியார் தான் என் பிரச்னை'' என்றாள் ஒரு பெண்.

ஒரு சகோதரி சொன்னாள், ''என் கணவர்'' என்று.

''என்னைப் பொறுத்தவரை பக்கத்து வீட்டுக் காரன்தான் என் பிரச்னைகளுக்கே காரணம்'' என்று ஒரு சகோதரர் சொன்னார்.

ஆனால் நான் மட்டும் சொன்னேன், ''துன்பங்கள் கஷ்டங்கள் என்பவை நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்வது. தானாக சில கஷ்டங்கள் ஏற்பட்டால் அதைத் தவிர்க்க முடியாது. நாமே வலிய சில பிரச்னைகளை இழுத்துக் கொண்டால் அதற்கு நாம் தானே பதில் கூற வேண்டும். வழியில் செல்லும் ஓணானை காதில் எடுத்து விட்டுக் கொண்டு, ஐயோ, குத்துகிறதே - குடைகிறதே என்று சொல்வது போல''

ஒருவன் பார வண்டியை தன்னுடைய



பலம் அனைத்தையும் இரட்டி இழுத்துப் போகிறான். அதைப் பார்க்கிற உங்களுக்கு ''ஹப்பா... எப்படித்தான் இவ்வளவு பாரத்தையும் இழுக்கிறானோ...'' என்று தோன்றும். ஆனால் அவனுக்கு ஒரே குறிக்கோள். வண்டி இழுத்தால்தான் வயிறு நிரம்பும். அதனால் அதை ஒரு சுமையாக நினைப்பது கிடையாது. அதுபோலத்தான் துன்பங்களும். நீங்கள் அதைப் பெரிதாய் நினைப்பதால்தான் அதற்கு மூலகாரணம் ஆகிறீர்கள்.

உங்கள் கஷ்டங்களை எப்போதும் மற்றவர்களிடத்தில் புலம்பாதீர்கள். அது உங்களுக்கே ஆபத்தில் முடியும்.

ஒரு சகோதரி அலுவலகம் வந்து இருக்கையில் அமர்ந்ததும் அவளைச் சுற்றி நான்கு பேர்கள் வந்து நிற்பார்கள்.

''இன்னிக்கு..என்ன சொன்னது உங்க ஆள்'' என்று கேட்டதுதான் தாமதம். அந்தச் சகோதரி வளவளவென்று பேச ஆரம்பித்து விடுவாள். ஒரு நாள் உண்மையிலேயே தாள முடியாத ஒரு பிரச்சினையில் அவள் மாட்டிக் கொள்ள வம்பளந்த கூட்டம் வேறு ஒரு இடத்தில் கூடியது.

''என்ன மேடம்..வறட்டுத் தவளைக்கு இன்னிக்கு என்ன அதிகப்படியா ஏதானும் ஆயுருச்சா...''

''க்கும்... அவங்களுக்கு வேற வேலை என்ன...? பாவம் அவங்க வீட்டுக்காரருதான்... பொழுதன்னைக்கும் அது அவங்கம்மா வீட்டுக்குப் போனா... எந்தப் புருஷன்தான் பொறுத்துப்பான்...?'' இப்படியாக இங்கொரு பேச்சு. அங்கொரு பேச்சு.

''பேசாத வார்த்தைக்கு நீ எஜமான்
பேசிய வார்த்தை உனக்கு எஜமான்''
இப்போது புரிகிறதா?

உங்களுக்கு என்ன பிரச்சினை என்று உங்கள் கணவனுடனேயே விவாதிப்பதை விடுத்து, வெளியிடங்களிலோ, அலுவலகத்திலோ விவாதிப்பாளேன். அவள் பேசிய வார்த்தைகள் அவளுக்கே எஜமானனாகி மற்றவர்களின் கேலிக்கு இடமாவதைத் தவிர்க்கலாமே. இது ஒரு புறம் இருக்க எதுவுமே பேசாமல் தன் வேலையை கவனித்துக் கொண்டு போகும் சகோதரிகளும் உண்டு. அவர்களின் பட்டப் பெயர் தெரியுமா? கர்வி, திமிர் பிடித்தவள்.

சகோதரிகளே, நீங்கள் கர்வியாகவே இருங்கள். அனாவசியமாக வாயைக் கொடுத்து மாட்டிக் கொள்வதற்கு இந்த 'கர்வி' என்ற பட்டப் பெயர் எவ்வளவோ பரவாயில்லை. அதற்காகச் சொந்தச் சகோதரன்கூட வெளியில் சென்றால் கூட வம்பு பேசுகிறார்கள் என்றால் நாம் முக்காடிட்டுக் கொண்டு உள்ளேயே முடங்க முடியாது. வதந்திகளுக்குப் பயந்து கொண்டு பேச வேண்டியவைகளையும் விட்டுவிடக் கூடாது.

பேச்சு மருந்தைப் போன்றது.

அளவோடு உபயோகித்தால் அது மருந்து. அளவுக்கு மிஞ்சினால், அது விஷமாகும்.

ஆகவே சகோதரிகளே, இனி உங்கள் வீட்டுப் பிரச்சனைகளை வீட்டோடும், அலுவலகப் பிரச்சனையை அலுவலகத்தோடும் வைத்துக் கொள்ளுங்கள்.

பிறகு என்ன உங்களுக்கு நீங்களே ராணிதான்.

**– திருமாமகள்**



ஃப்ரிட்ஜ் இல்லாதவர்களுக்கு இதோ ஒரு வரப்பிரசாதம். இட்லி மாவு, தோசை மாவு புளித்துப் போய்விடுகிறதே என்று கவலைப்பட வேண்டாம். அரைத்த மாவை பிளாஸ்டிக் டப்பா, அல்லது பக்கெட்டில் போட்டு மூடி வைத்துவிடுங்கள். எவர்சில்வரில் வைத்துப் புளித்துப் போவதைத் தடுக்கச் சிறந்த வழி இது!

*– தாரா ஷீலா*

**வா**ய்ப்பு கிடைக்கும் போது நாம் பல பெரிய நகரங்களுக்குச் செல்கிறோம். சில சமயம் அவசரமாக கிளம்பி திரும்பவும் நேரிடும். நாம் தங்கியுள்ள ஊரின் அருகில் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள், புண்ணிய ஸ்தலங்கள்,சுற்றுலா செல்லக் கூடிய இடங்கள், ஷாப்பிங் சென்டர்கள் போன்றவைகளைப் பற்றி சரியான விவ ரங்கள் இவற்றைத் தெரிந்து கொள்வது நல்லது. அடிக்கடி இது போன்ற தொலை தூர இடங்களுக்குச் செல்ல முடியுமா? உதா ரணத்திற்கு நம் நாட்டின் நான்கு பெரிய நகரங்களைச் சுற்றி வரலாமா? (எந்த ஊருக் குப் போனாலும் இது போன்ற சுற்றியுள்ள

# 4 பெரிய நகரங்களைச் சுற்றி...

* பம்பாய்

சிறந்த இடங்களைப் பார்த்து வருவது நல் லது.)

## டெல்லி :

**நம்** நாட்டின் தலைநகரம் - டெல்லி. முதலில் இதையே சுற்றலாம். பழைய டெல்லி, புதுடெல்லி என இரு பிரிவாக உள்ளதில் பழைய டெல்லியே வரலாற்றுச் சிறப்புமிக்கது. சரித்திரப் புகழ் பெற்ற பல சின்னங்களைக் கொண்டுள்ளது. தன் பெய ருக்கேற்றவாறு செந்நிறக் கற்களால் கட்டப் பட்ட செங்கோட்டையும், திவானிகாஸும் நாம் பார்க்க வேண்டியவை. இந்தியாவி லுள்ள மிகப் பெரிய மசூதிகளுள் ஒன்றான ஜும்மா மசூதியும் இங்குதான் உள்ளது. இந்த மசூதியின் அருகில் அமைந்துள் ளதுதான் ''சாந்தினிசௌக்'' என அழைக்கப் படும் 'நிலவொளி மார்க்கெட்', முத்துக்க ளாலும், வெள்ளியாலும் ஆன விதவிதமான அணிகலன்கள் இங்கு பிரசித்தம்.

புதுடெல்லியில்தான் ராஷ்டிரபதி பவன், செகரடேரியட் கட்டடங்கள், அரசு அலுவலகங்கள் உள்ளன. இங்குள்ள 'கனாட் பிளேஸ்' எனப்படும் ஷாப்பிங் சென்டர் நம் கண்களையும், மனதையும் நிறைவு செய்யும்.

ராஷ்டிரபதி பவனிலிருந்து 15 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது குதுப்மினார். இதன் அருகில் அமைந்துள்ள மசூதிகளில் பிரபலமானது 'குவாடில்-இஸ்லாம்'. இந்தி யாவில் முதன் முதலில் கட்டப்பட்ட மசூதி களில் இதுவும் ஒன்று. இதன் நடுவில்



அமைக்கப்பட்டுள்ள இரும்புக் கம்பத்தின் வயது பல நூறு ஆண்டுகள். இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் இது துருப்பிடிக்க வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கு 5 கி.மீ. தொலைவில் உள்ள 'துக்ளக் பாத்' குறிப்பிட வேண்டிய நகரம்.

டெல்லியைச் சுற்றிப் பார்க்கவெனச் செல்வோர் அக்டோபர் முதல் மார்ச் வரை சென்று வரலாம். இந்தியாவின் பல பாகங்களிலும் செய்யப்பட்ட கைவினைப் பொருட்கள் டெல்லியில் கிடைக்கும். தந்தம், பித்தளை, களிமண், செம்மரம், சந்தன மரம் - இவற்றால் ஆன பொருட்கள், பெயிண்டிங்குகள், நகைகள் போன்றவை கள் இங்கு கிடைக்கும்.

டெல்லி அருகாமையில் உள்ள ஆக்ரா வில் உலகின் அதிசயங்களில் ஒன்றான தாஜ் மஹால் உள்ளதை நாம் அறிவோம்.



✱ பம்பாய் கடற்கரை...

இவரும் டெல்லியிலிருந்து ஆக்ராவுக்குச் செல்லும் 'தாஜ் எக்ஸ்பிரஸ்' அதிவேக மானது. ஜெய்பூரிலிருந்தும், டெல்லியி லிருந்தும் ஆக்ரா செல்ல விமான வசதியும் உள்ளது. தாஜ்மஹாலை நிலவொளியில் பார்த்து அனுபவிக்க வேண்டும். சுத்தமான வெண்நிற சலவைக் கற்களால் ஆன இதைக் கட்டி முடிக்க 22 ஆண்டுகள் ஆயிற்றாம். இதைப் பார்த்த பின்பு 'ஷாஜஹான் உண் மையிலேயே தன் மனைவியிடம் கொண்ட காதல் பெரிதா? இல்லை, கட்டடக் கலை யிடம் கொண்ட காதல் பெரிதா?' என்ற சந்தேகம் நிச்சயம் எழும். இது தவிர அழகிய மசூதி ஒன்றும், இன்னும் சில அழகிய இடங்களும் ஆக்ரா கோட்டையினுள்ளே உள்ளன.

## பம்பாய் :

**வா**ணிபத்துறையின் தலை நகராகக் கருதப்படும் பம்பாயின் 'கேட்வே ஆப் இந்தியா' (ஆங்கிலேயர்களால் கட்டப்பட் டது) - பாரிசில் உள்ள 'ஆர்.டி. டிராம்பே' யை ஒத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

'கேட்வே'யிலிருந்து படகில் ஒரு மணி நேரம் பயணம் செய்தால் 'எலிபெண்டா' என்னும் அருமையான ஒரு தீவை அடை யலாம். இங்கு அருமையான கற்கோவில் கள் உள்ளன. 'கேட்வே'யிலிருந்து 40 கி.மீ. தூரத்தில் கானேரி குகைகள் உள்ளன. இங்கு புத்த மதச் சின்னங்கள் அதிகமாக உள்ளன. இங்குள்ள சிற்பங்கள் அஜந்தா, எல்லோரா வில் உள்ளவைகளை ஒத்துள்ளன.

பம்பாயில் உயர் நீதிமன்றம், பழைய செகரடேரியட் கட்டடம், பல்கலைக் கழகக் கட்டடம், மின்ட், போன்றவைகள் பார்க்க வேண்டியவை ஆகும்.

மலபார் ஹில்ஸ் பகுதியில் கமலா நேரு பூங்காவும், தொங்கும் தோட்டங்களும் அமைந்துள்ளன. கடற்கரைப் பகுதியில் மிக வும் பிரபலமானது மெரைன் டிரைவும், நக ரத்திலிருந்து 30 கி.மீ. தூரம் தள்ளியிருக்கும் ஜூஹு பீச்சும்தான். கலகொடாவில் உள்ள 'ஜஹாங்கீர் ஆர்ட் கேலரி' - மிகவும் பெரியது. மெரைன் டிரைவிலுள்ள 'தாரா

✱ குதுப்மினார்





பூரேவாலா' மீன் காட்சி சாலை பெயர் பெற்றது.

'பொரிவ்லி'யில் உள்ள சஞ்சய் காந்தி தேசிய பூங்கா (வனவிலங்குகளின் சரணாலயம்) அருமையான இயற்கைச் சூழ்நிலையில் அமைந்துள்ளது. இங்குள்ள வண்டிகளில் அமர்ந்து சென்றபடியே வனவிலங்குகளைக் காணலாம். இங்குள்ள ஏரியில் படகுப் பயணமும் செய்யலாம்.

✱ கல்கத்தா : தட்சிணேஸ்வரர் காளி கோவில்



'டவுன் ஹால்' (ஆங்கிலேயரால்) கட்டப்பட்ட கட்டடங்களில் மிக முக்கியமானது. உலகின் மிகச் சிறந்த கட்டடங்களில் ஒன்று 'விக்டோரியா டெர்மினஸ்' - புகை வண்டி நிலையமும் ஒன்று. 160' உயரமுள்ள 'டூம்' - அதன் மேல் கையில் 'தீப' விளக்குடன் நிற்கும் ஒரு பெண்ணின் சிலை (முன்னேற்றத்தின் அறிகுறியாக) நிற்பதும் இதன் சிறப்புக்குக் காரணம். 'பிரின்ஸ் ஆப் வேல்ஸ்' மியூசியத்தில் அமைந்துள்ள சலவைக் கற்களால் ஆன 'டூம்' - சூரிய ஒளியில் மின்னுவதை வெகு தொலைவிலிருந்தும் காண முடியும். பல அரிய பொக்கிஷங்களின் தொகுப்புகளைக் கொண்டது. இது ஃபோர்ட் ஏரியாவில் அமைந்துள்ளது. ஃப்ளோரா ஃபவுண்டன், விக்டோரியா கார்டன் மற்றும் மியூசியம் கண்ணையும் மனதையும் கவரும். சிற்பங்களும், கட்ட டங்களும் அமைந்துள்ள முறை கிரீஸ், ரோம் போன்றவைகளின் சாயலை நினைவுபடுத்தும்.

பல பிரபலமான தேவாலயங்கள் இங்குள்ளன. அவற்றில் முதன்மையானது செயின்ட் தாமஸ், கதீட்ரல் சர்ச், ஆப்கான் சர்ச் போன்றவை. ஹாஜி அலி மசூதியும் முக்கியமானது. மலபார்ஹில்லில் உள்ள மஹாலக்ஷ்மி கோவில் தரிசனம் செய்ய வேண்டிய ஒன்று. அலைகளின் நடுவில் பாறைகளின் மீது அமைந்துள்ளது இந்தக் கோவில். நவராத்திரியின் போது தரிசனத்திற்காக மக்கள் நீண்ட வரிசையில் காத்து நிற்பார்கள்.

இந்தியாவில் கனவுத் தொழிற்சாலையான திரையுலகம் பம்பாயின் கிழக்கு நகர்ப்புறத்தில் அமைந்துள்ளது. உள்நாட்டு, வெளிநாட்டு - பல தரப்பட்ட சரக்குகள் பலவித கைவினைப் பொருட்கள் இங்கு வாங்கலாம்.

# RANEE SAREES SUNGUDI SAREES &
# R.S.S. SUNGUDI SAREES at

## Ranee Sarees
SHOW ROOM A/C



Nayaki Kainkarya Bhushanam

**RANI V.SUNDAR RAO**
FOUNDER OF RANEE SAREES

## PADMAVATHI TEXTILES

76, SOUTH MASI ST., MADURAI-625 001

போன்: 24688 வீடு: 45650

## ராணி சாரீஸ்

### சுங்குடி புடவைகளில்

கீழே கண்ட இரண்டு உத்திரவாதமுள்ள துணி லேபிலும், R.V.S. போட்டோ ஸ்டிக்கரும் உள்ளதா என்பதை கவனித்து வாங்கவும், ராணி சாரீஸ் சுங்குடி புடவைகள் சலவைக்கும் சாயம் போகாது என்பதை உத்திரவாதம் அளிக்கிறோம்

எங்களது சேலையின் அடிதலப்பில்

RANEE SAREES
R.S.S
MADURAI-20

துணி லேபிலும்

சேலையின் மேல் பாகத்தில்



RANI V.SUNDAR RAO
FOUNDER OF
"RANEE SAREES"

"ராணி சாரீஸ்"
"RANEE SAREES"
MADURAI
SPECIAL QUALITY:
COLOURS ARE GUARANTEED
FOR DHOBI WASH

R.V.S. போட்டோ ஸ்டிக்கரும்

1st குவாலிடி
குறைந்த விலையில் சூப்பர்
டிசைனில்
பல வர்ண கலர்களில்
தயாரிக்கப்பட்டது

**R.S.S. சுங்குடி புடவைகள்**




MADURAI

**R.S.S. சுங்குடி புடவைகள்**

அடித்தலப்பில் டை முத்திரை உள்ளதா
என்பதை பார்த்து வாங்கவும்

குறிப்பு: மற்றவை நம் தயாரிப்பு அல்ல

✽ சென்னை - வி. ஜி. பி. கோல்டன் பீச்.



எல்லோரா குகை இங்கிருந்து 411 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. அஜந்தா 491 கி.மீட்டர் தொலைவிலும், அவுரங்காபாத் 400 கி.மீ. தொலைவிலும் உள்ளது. புகழ் பெற்ற ஷீர்டி இங்கிருந்து 296 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இங்குள்ள பாபாவின் சமாதியில் பக்தர்களின் கூட்டம் கரை புரளும்.

மஹரிஷி தேவேந்திர நாத் டாகூர் (ரவீந்திர நாத் டாகூரின் தந்தை).

## கல்கத்தா :

போர்ட் வில்லியம், கலெக்ட்டரேட், ரிசர்வ் வங்கி, அரசினர் விடுதி, டவுன் ஹால், உயர்நீதிமன்றம், ஸ்டேட் அசம்பிளி, போன்றவைகள் இங்கு பார்க்க வேண்டியவை. இம்பீரியல் லைப்ரரி - மிகப் பெரியது. 'காளிகாட்'டில் உள்ள காளி கோவில் மிகவும் பிரபலமானது. சௌரங்கியிலுள்ளது இண்டியன் மியுசியம் (பல அரிய பொருட்கள் இங்குள்ளன). பிர்லா பிளானட்டோரியம், விக்டோரியா மெமோரியல், சித்தரஞ்சன் அவின்யுவில் உள்ள சலவைக் கல் அரண்மனை ஆகியவை பார்ப்போரின் கண்களுக்கு விருந்தாகும். தக்ஷிணேஸ்வர் கோவிலும், காளி கோவிலும் (ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வணங்கிய காளி கோவில் இது) ஒரு கரையில் அமைந்திருக்க - இதன் மறுகரையில் அகில உலக ராமகிருஷ்ணா மடத்தின் தலைமைப் பீடம் அமைந்துள்ளது. இங்கிருந்து 650 கி.மீட்டர் தூரத்தில் அமைந்துள்ள டார்ஜிலிங் கடல் மட்டத்திலிருந்து 2134 மீட்டர் உயரத்தில் உள்ளது. சாந்தி நிகேதன் இங்கிருந்து 150 கி.மீ. தூரத்தில் உள்ளது. இதைக் கட்டியவர்

## சென்னை :

செயின்ட் ஜார்ஜ் கோட்டையும் அதிலுள்ள அலுவலகங்களும், நீண்ட கடற்கரை, அதில் நிறைந்த சிலைகள் (உலகின் 2 - வது நீண்ட கடற்கரை) அண்ணா, எம்ஜியார் சமாதிகளும், சென்னை பல்கலைக் கழக கட்டிடம், பிர்லா பிளானடோரியம் சென்னையில் பார்க்க வேண்டியவைகளில் முக்கியமானவை. சென்னையிலுள்ள கோவில்களில் கபாலி கோவில், பார்த்தசாரதி கோவில், வட பழனியாண்டவர் கோவில், திருவேற்காடு கருமாரி

✽ எல். ஐ. சி. கட்டிடம் - சென்னை





✽ மகாபலிபுரம், சென்னை.



செங்கோட்டை - டெல்லி.

அம்மன் கோவில் என்றும் பக்தர்கள் கூட்டம் நிறைந்தவை. தேவாலயங்களில் முதன்மையானது சாந்தோம் சர்ச். செட்டிநாடு அரண்மனையும், தியோசாபிகல் சொஸைடியும், கலாக்ஷேத்ராவும், ராஜாஜி ஹாலும் மனதுக்கு இதம் தரும். எலியட்ஸ் பீச் அமைதியானது. வண்டலூரில் உள்ள உயிரியல் பூங்காவில் வனவிலங்குகள் இயற்கையான சூழ்நிலையில் உள்ளது குழந்தைகளைக் கவரும். கிண்டியில் உள்ள பாம்புப் பண்ணை குழந்தைகளை மட்டுமின்றி பெரியவர்களையும் கவரும். கிண்டியிலேயே ராஜாஜி நினைவாலயம், காந்திஜி நினைவாலயம், காமராஜ் நினைவாலயம் போன்றவைகளும் உள்ளன.

மாநகராட்சியின் அலுவலகம் 'ரிப்பன் பில்டிங்'கில் இருந்து இயங்குகிறது. உயர் நீதி மன்றத்தில் உள்ள மனுநீதிச் சோழனின் சிலை அதற்கு மேலும் எழிலூட்டுகிறது. சென்னைத் துறைமுகம் காண வேண்டியவைகளில் முக்கியமானது. வள்ளுவர் கோட்டம், எல்.ஐ.சி. பில்டிங் சுற்றுலா செல்வோர் காண வேண்டிய இடம். சென்னை என்றவுடன் முதலில் நினைவில் வருவது 'பர்மா பஜார்'. இதில் பல அயல் நாட்டுப் பொருட்கள் கிடைக்கும். தென்னிந்தியாவின் 'ஹாலிவுட்' என அழைக்கப்படும் இடம் சென்னை மாநகரம். திரையுலகத்தோர் நிரம்பியுள்ள இடம் கோடம்பாக்கம்.

இங்கிருந்து 50 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள மாமல்லபுரம் பல்லவர்களின் சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் இடம். மாமல்லபுரத்திற்கு வெகு அருகாமையில் உள்ள திருக்கழுக்குன்றம். இங்குள்ள குளத்தில் இயற்கையாகவே சங்கு பிறக்கிறது என்பார்கள். மலைமேல் தினமும் பகல் 12 மணிக்கு வந்து உணவருந்தும் கழுகுகள் உலகப் பிரசித்தம். இதற்கு அருகில் உள்ள வேடந்தாங்கல் பறவைகளின் சரணாலயம். சில குறிப்பிட்ட மாதங்களில் உள்நாட்டுப் பறவைகள் மட்டுமல்லாமல் பல வெளிநாட்டுப் பறவைகளும் வெகு தொலைவிலிருந்து இங்கு வந்து தங்கிச் செல்லுகின்றன. இதைப் பார்க்க வரும் கூட்டமும் மிக அதிகம். மாமல்லபுரத்திற்குப் போகும் வழியில் கண்டுகளிக்க மேலும் சில இடங்கள் உள்ளன - விஜிபியின் தங்க கடற்கரையைச் சுற்றிப் பார்க்க ஒரு நாள் போதாது. குழந்தைகள் இதனுள் நுழைந்து விட்டால் வெளியே வருவது அவ்வளவுதான்! முட்டுக்காடுப் படகுத் துறை அமைதியானது. முதலைப் பண்ணை - அதிலுள்ள சின்னஞ்சிறு முதலைகள் - பெரியவர்களின் கால்களை யும் அங்கேயே சற்று நேரம் கட்டி நிறுத்தும். மாமல்லபுரம் செல்லும் வழியில் உள்ளது இந்த முதலைப் பண்ணை. மாமல்லபுரத்தில் உள்ள 'சில்வர் சேண்ட்ஸ்' பீச்சும் குறிப்பிடத்தக்கவைகளுள் ஒன்று.

சென்னைக்கு 60 கிலோமீட்டர் தொலைவில் உள்ள காஞ்சிபுரம் பழமையான நகரம். சங்கர மடமும், காமாட்சி அம்மன் கோவிலும், வரதராஜ பெருமாள் கோவிலும், புகழ்பெற்ற பட்டுப் புடைவைகளும் கருத்தைக் கவரும். சென்னைக்குப் பெருமை சேர்க்கும் வகையில் எத்தனையோ பல அரிய கட்டடங்கள் உருவாகிக் கொண்டே போகும் இந்த நிலையில் சென்னையை மட்டுமே சுற்றிப் பார்க்க ஒரு நாள் போதாது.

தகவல் உதவி :
இந்திய சுற்றுலா வளர்ச்சிக் கழகம்.

– தேசி



# ஊரில் கிடைக்கும் வெண்ணெய் எல்லாவற்றையும் உருக்கிப் பார்த்து விட்டேன். ஆவின் வெண்ணெய் ஒன்றுதான் அதிக நெய் தருகிறது.





உயர் தர தயாரிப்பு.
ஈரப்பதம் மிகக் குறைவு.
சுத்தமான, புத்தம் புதிய ஆவின் பால் வழங்குகிறது.
மிகத் தரமான ஆவின் வெண்ணெய்.
ஆனால் சிறப்புகள் இவ்வளவு மட்டுமேயல்ல.
முழுவதும் நவீனமான தானியங்கிக் கருவி, அதிக அளவு தண்ணீரை ஆவின் வெண்ணெயிலிருந்து பிரித்தெடுத்து வருகிறது.
விளைவு - அதிகமான புரதம்.
ஒவ்வொரு கிலோ வெண்ணெயும் பழைய முறைகளில் தயாரிக்கப்படும் வெண்ணெய்களோடு ஒப்பிட்டுப் பார்க்கப்படுகிறது.

ஒரு கிலோ ஆவின் வெண்ணெய் ரூ.64/- தான். ஆனால் பெறுகின்ற நெய்யோ ஏனைய தயாரிப்புகள் தருவதை விட 20-25 % அதிகம். அதிகப் புரதம் அதிக நெய் உண்டாக்கவும், சுவை நிறைந்த இனிப்புகள் தயாரிக்கவும் இன்னும் பல சிறப்புகளுக்கும் உதவும்.
மேலும் ஆவின் வெண்ணெய் சுத்தமான, சுகாதாரமான முறையில் பேக் செய்யப்பட்டு சீலோடு, குளிர் பதனப் புதிதாக உங்களிடம் வருகிறது. அதுவும் நியாயமான விலையில். தரம் மற்றும் சிக்கனம் நாடும் இல்லத்தரசிகளின் இனிய விருப்பம் ஆவின் வெண்ணெயாக இருப்பதில் வியப்பேதுமில்லை.

இது தவிர உங்கள் சௌகரியத்துக்காக 500 கிராம் வெண்ணெய் ரூ.32/- க்கும், 200 கிராம் ரூ.13.25/- க்கும் கிடைக்கின்றது.
எப்போது வேண்டுமென்றாலும் 20 கிலோ அளவு கூட நீங்கள் ஆர்டர் செய்யலாம்.
சென்னையிலும், அதன் சுற்றுப் புறங்களிலுமுள்ள எல்லா ஆவின் நிலையங்களிலும், தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளிலும் கிடைக்கும்.

## ஆவின்

**வெண்மை பொலியும் சமையல் வெண்ணெய்**

DIPR/235/DIS/94/SASI

**குறைந்த விலையில் உயர்ந்த தரம்.**

* விசாலாட்சி
* சித்ரா
* ராஜம்

சமையல் குறிப்புகள்

பொருள் : பழைய கால உணவு

முதல் பரிசு ரூ. 300/-

## தசமூலான்னம்

தசமூலான்ன, கலவைப் பொடிக்குத் தேவையான பொருட்கள் :

(கொட்டைகளை நீக்கி, நாலாய்ப் பிளந்து, நன்றாகச் சுக்காய் வெயிலில் காய வைத்து எடுக்கப்பட்ட) நெல்லிக்காய்த் துண்டுகள் (ஒரு கோப்பை)

(நடுக்காம்பை நீக்கி, நன்றாய்த் துடைத்து ஈரமில்லாமல் தயார் செய்த) நாரத்தை இலைகள் அல்லது எலுமிச்சை இலைகள் - 12

வெல்லம் (பொடி செய்யப்பட்டது) - 1 கரண்டி,

உளுத்தம் பருப்பு - ½ கோப்பை,

வெள்ளை எள் - 1 கரண்டி,

மிளகு - ¾ கரண்டி,

சீரகம் - 1 கரண்டி,

தனியா - 1 கரண்டி,

வற்றல் மிளகாய் - 7 அல்லது 8,

பெரிய நெல்லிக்காய் அளவு பெருங்காயம் - 1 துண்டு (தூளானால் 2 ஸ்பூன்)

நல்லெண்ணெய் - 100 கிராம்,

வேர்க்கடலைப் பருப்பு - ½ கப்,

தேங்காய்த் துருவல் - 1 கப்,

தேவையான உப்பு,

பச்சரிசி - 2 ஆழாக்கு,

கடுகு - 2 ஸ்பூன்.

குறிப்பு : நெல்லிக்காய் கைவசம் இல்லாவிட்டால் 1 கைப்பிடி புளியை நன்றாய் உதிர்த்து வெயிலில் சுக்காய் உலர்த்தி வைத்து நெல்லிக்காய்க்குப் பதிலாய் உபயோகிக்கலாம். நெல்லிக்காய், நாரத்தை இலை இரண்டும் உடம்பிற்கு ஊட்டம் + ருசி மணம் அதிகம்.

பன்னீர் தயிருக்குத் தேவையான பொருட்கள்:

பால் - ½ லிட்டர்,

புளிப்பில்லாத திராட்சை - 7, 8 (பன்னீர் திராட்சை உத்தமம்)

பன்னீர் ரோஜா இதழ்கள் - 15 முதல் 20.

சர்க்கரை - ½ ஸ்பூன்,

கெட்டித் தயிர் - 1 ஸ்பூன்,

டேபிள் ஸால்ட் - ஒரு சிட்டிகை.

கமலா கனா தோல் பச்சடிக்குத் தேவையான பொருட்கள் :

கமலா ஆரஞ்சு - 2,

புதுப் பச்சை மிளகாய் - 12,

கடலைப் பருப்பு - ½ ஆழாக்கு,

பெரிய வெங்காயத் துண்டு - 1,

நல்லெண்ணெய் - 50 கிராம்,

கடுகு - 2 ஸ்பூன்,

சாம்பார் பொடி - 4 ஸ்பூன்,

மஞ்சள் பொடி - 1 ஸ்பூன்,
வெல்லம் -1 பெரிய துண்டு,
புளி - பெரிய பந்தளவு.

கமலா ஆரஞ்சின் சுளைகளைக் கொட்டையில்லாமல் திருத்தி வைக்கவும். தோல்களை மிகப் பொடிப்பொடியாக நறுக்கிக் கொள்ளவும். பச்சை மிளகாயை நீட்டுவாக்கில் பிளந்து நறுக்கிக் கொள்ளவும்.

தசமூலான்ன சாதத்துக்குத் தொட்டுக் கொள்ளவே, இந்தப் பன்னீர் தயிரும், சுளை தோல் பச்சடியும், இத்துடன் ஜவ்வரிசி வடகமும் தொட்டுக் கொள்ளலாம். இனிமேல் செய்முறைக்கு வருவோம்.

தசமூலான்ன கலவைப் பொடி தயார் செய்யும் முறை :

முதலில் வாணலியை அடுப்பில் போட்டு எண்ணெய் சேர்க்காமல் வரிசைக் கிரமமாய் உளுத்தம் பருப்பு, வெள்ளை எள்ளு, மிளகு, சீரகம் இவற்றைத் தனித் தனியாய் நன்றாய் வறுத்து ஒரு வாயகன்ற பாத்திரத்தில் போட்டுக் கொள்ளவும். பின் ஒரு ஸ்பூன் நல்லெண்ணெயை வாணலியில் விட்டுக் காய்ந்ததும் பெருங்காயத்தைப் போட்டு பொன் நிறத்தில் வறுத்தெடுத்துக் கொள்ளவும். மிளகாய் வற்றலை கருகாமல் வறுத்தெடுத்து இரண்டையும், மற்ற சாமான்களுடன் எண்ணெயில்லாமல் வடித்து விட்டு கலக்கவும். பின் தேங்காய்த் துருவலை வாணலியில் இருக்கும் எண்ணெயில் போட்டுப் புரட்டி இளஞ்சிவப்பாய் வறுத்து, மற்ற சாமான்களுடன் கலக்கவும். தேவையான உப்பையும் போட்டு எல்லாவற்றையும் சீராய்க் குலுக்கிவிட்டு ஆறவிடவும். பிறகு இந்த மேற்படி கலவை சாமான்களை 'மிக்ஸி'யில் போட்டு மாவாகி விடாமல், பம்பாய் ரவைபோல் சன்ன ரவையாய்ப் பொடித்து, அதே பேஸினில் போட்டு வைத்துக் கொண்டு, நெல்லிக் காய்த் துண்டுகளைப் பொடி செய்து கலவைப் பொடியுடன் சேர்க்கவும். பின் நாரத்தை இலையை மிக்ஸியில் பொடித்து, அதனுடன் பொடித்த வெல்லத்தையும் சேர்த்து மிக்ஸியை இரண்டு சுற்று ஓட விடவும். அந்தத் தூளையும் கலவைப் பொடியுடன் போட்டு, பின்பு மொத்தமாக ஒன்றுசேர்வதற்காக மறுபடியும் மிக்ஸியில் போட்டு ஓட விடவும். துளிப் பொடியை வாயில் போட்டுப் பார்த்தால் உப்பு கொஞ்சம் தூக்கலாயிருக்க வேண்டும். தேவைப் பட்டால் உப்பு சேர்த்துக் கொள்ளவும். இப்போது தசமூலான்ன கலவைப் பொடி தயார். பேஸினில் போட்டு நன்றாக ஆற விடவும்.

இரண்டு ஆழாக்கு பச்சரிசியை மற்ற சித்ரான்னங்களுக்கு வடிப்பதுபோல் பொல பொலவென்று வடித்து ஆற வைத்து, வாணலியில் 100 கிராம் நல்லெண்ணெயை விட்டு அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் கடுகு தாளித்து, 50 கிராம் வேர்க்கடலையைப் போட்டு வறுத்ததும் இறக்கி விடுங்கள். சாதம், கலவைப் பொடி தேவைக்கேற்பப் போட்டுக் கலந்து கொள்ளவும். இந்தக் கலவைப் பொடி மீந்தாலும் கெட்டுப் போகாது. இட்லி, தோசைக்குத் தொட்டுக் கொள்ளலாம். சமயத்தில், வயிற்றுப் பொருமல் இருந்தால் இந்தப் பொடியை மோரில் போட்டுக் குடிக்க அஜீரணம், பொருமல் நின்றுவிடும். இதற்குத் தொட்டுக் கொள்ள ஜவ்வரிசி வடகத்தோடு பன்னீர் தயிரும், கமலா சுளை, தோல் பச்சடியும் அருமையாக இருக்கும்.

பன்னீர் தயிர் செய்முறை :

பாலை நீர் சேர்க்காமல் காய்ச்சி, வெது வெதுப்பாகும்வரை ஆறவிட்டு, திராட்சைப் பழங்களை விதை நீக்கிச் சிறு சிறு துண்டங்களாக நறுக்கிப் பாலுடன் சேர்க்கவும். 15, 20 பன்னீர் ரோஜா இதழ் களையும், அரை ஸ்பூன் சர்க்கரையையும் 1 சிட்டிகை உப்பையும் பாலில் போட்டு உடனுக்குடன் 1 ஸ்பூன் தயிரை விட்டு உறை குத்தி நன்றாக மூடிவிடவும். நன்கு உறைந்து கெட்டித் தயிரானபின் 'ப்ரிஜ்ஜில்' வைத்துவிடவும். (இதையே அந்த நாட்களில் மண் சட்டியில்



ஜெர்மன் உடலியல் அறிஞர் ஒருவர் கருவுற்றிருக்கும் தாயின் கருப்பையில் வலி இல்லாமல் கரு ஆரம்பத்திலேயே அசைய ஆரம்பித்தால், அது பெண் குழந்தைக்கும், வலியோடு கூடிய தாமதமான கரு அசைவு ஆண் குழந்தைக்கும் அறிகுறி என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

நன்றி : கலைக்கதிர்
தகவல் : ஜி. இந்திரா



குலுக்கலுக்கு முன்
பதிவு செய்ய
முந்துங்கள்

# பொன்னான வாய்ப்பு






சென்னை - பெங்களூர் நெடுஞ்சாலையில், இருங்காட்டுக் கோட்டை மோட்டார் கார் ரேஸ் மைதானம் அருகில் மனையின் அளவு 2400 ச.அடி. மாதம் ரூ.375/- வீதம் 72 மாதங்கள் கட்டலாம். அட்வான்ஸ் தேவை யில்லை. கவர்ச்சிகரமான பரிசு திட்டங்கள் உண்டு. பம்பர் பரிசு மாருதி வேன் மற்றும் கெனடிக் ஹோண்டா, கலர் டி.வி., குளிர் சாதனப் பெட்டி, டு-இன்-ஒன், தங்க நகைகள் மற்றும் ஆறுதல் பரிசுகளும் உண்டு.

---

சனி, ஞாயிறு ஆகிய நாட்களில் காலை 9.30 மணியளவில் மனையைப் பார்வையிட அலுவலகத்திலிருந்து இலவசமாக அழைத்துச் செல்கிறோம்.

---

## JSR ரியல் எஸ்டேட்ஸ் (பதிவு)

96, சேமியர்ஸ் சாலை, (இரண்டாவது மாடி),
அடையார் பார்க் ஹோட்டல் அருகில்,
சென்னை - 600 018.
போன்: 452828.

JUPITER

## குரங்கு புத்தி

அனுமன் குரங்கிற்கு
இலங்கையில்
சீதையைப் பார்த்ததும் சந்தோஷம்...
சீதை வந்ததும்
ராமனுக்கு
முதலில் வந்தது சந்தேகம்...

- விஜய வாசு



உறைய விடுவார்கள். ருசி, மணம் அலாதி யாயிருக்கும்.) முடிந்தால் நாமும் செய்ய லாம்.

கமலா களை, தோல் பச்சடி

செய்முறை :

அலுமினிய இலுப்பச் சட்டியில் 50 கிராம் நல்லெண்ணெய் விட்டு அடுப்பில் வைத்து எண்ணெய் காய்ந்ததும் 2 ஸ்பூன் கடுகு, கடலைப் பருப்பு, பெருங்காயத்தைப் போட்டு தாளித்தபின் நறுக்கிய கமலா ஆரஞ்சுத் தோல் துண்டங்கள், பச்சை மிள காய்த் துண்டுகள், கமலாப் பழச்சுளைகள் அனைத்தையும் போட்டுப் புரட்டி, வதங் கும் சமயத்தில் தேவையான உப்பு, 4 ஸ்பூன் சாம்பார் பொடி போட்டு ஊற வைத்துள்ள பெரிய பந்தளவு புளியை ஒட்ட ஓட்டக் கரைத்து வடிகட்டி இலுப்பச் சட்டியில் கொட்டவும். புளியில் மண் இருக்கக் கூடாது. வெல்லம் சேர்த்து நன்கு கொதி வந்தவுடன் கெட்டிக் குழம்பாய் வரும் போது இறக்கிவிடவும். இந்தப் பச்சடி அலாதி மணத்துடன் இருப்பதோடு பித்தத் துக்கும் நல்லது. சுளைகளில்லாமல் வெறும் தோலிலேயே கூட பச்சடி செய்யலாம்.

இந்த தசமூலான்னம், பன்னீர் தயிர், கமலா களை - தோல் பச்சடி, உணவில் நாட்டமில்லாதவர்களைக் கூட விரும்பி உண்ண வைக்கும். பசியைத் தூண்டி உடம் பைக் கலகலப்பாக்கும். மாதத்தில் இரண்டு நாட்களாவது இந்தச் சமையலைச் சாப்பிட் டால் உடலுக்கு நல்லது.

(குறிப்பு : நெல்லிக்காய் இல்லையென் றால் புளி உபயோகிப்பதானால் நன்றாய்த் தூளாய் உலர்த்தி, நாரத்தை இலையைப் பொடித்துத் தூள் செய்த பிறகு மிக்ஸியில் போட்டுத் தூளாக்கவும். முதலில் புளியைப் போட்டால் நாரத்தை இலை மசிய இடக்கு பண்ணும்.)

- விசாலாட்சி ராஜாமணி,
சென்னை - 80.

### இரண்டாம் பரிசு ரூ. 200/-

## போகிணி அப்பம் :

தேவையான பொருட்கள் :

பச்சரிசி - 2 தம்ளர்,
துவரம் பருப்பு - 2 கைப்பிடி,
உளுத்தம் பருப்பு - 2 கைப்பிடி,
தேவையான அளவு - உப்பு,
புளித்த மோர் - 2 தம்ளர்,
கடுகு - 2 டீஸ்பூன்,
பெருங்காயப் பொடி - ½ டீஸ்பூன்,
மோர் மிளகாய் - 6,
கறிவேப்பிலை - 2 ஆர்க்,
இஞ்சி பொடியாக நறுக்கியது - 1 டீஸ்பூன்,
நல்லெண்ணெய் - 4 டேபிள்ஸ்பூன்.

செய்முறை :

பச்சரிசி, துவரம்பருப்பு, உளுத்தம் பருப்பை ரவைபோல் உடைத்துக் கொள் ளவும். இதில் உப்பு, மோர் விட்டு இன்னும் ஒரு தம்ளர் தண்ணீர் விட்டுக் கரைத்து வைத்துவிடவும். காலையில் 8 மணிக்குக் கலந்து வைத்தால் மாலை 4 மணிக்கு அப்பம் வார்க்க வேண்டும். இந்தக் கரைத்த மாவு குறைந்தது 6 மணி நேரமாவது ஊற வேண் டும். இலுப்பச் சட்டியில் 2 டீஸ்பூன் எண் ணெய்விட்டு, மோர் மிளகாயை வறுத்து எடுத்துக் கொண்டு, அந்த எண்ணெயில் கடுகு, பெருங்காயம், இஞ்சி, கறிவேப் பிலை போட்டு வதக்கி, மாவில் கொட்ட வும். மிளகாயைச் சிறிது சிறிதாக உடைத்து மாவில் போட்டுக் கலக்கவும். அடி கனமான இருச்சூர் (பஞ்சலோக) போகிணியில் 1 டேபிள்ஸ்பூன் எண்ணெய் விட்டு, நான்கு கரண்டி மாவை அப்படியே போகிணியில் விடவும். அடுப்பை மிக நிதானமான தீயில் எரியவிடுவது மிகவும் அவசியம். போகிணி யின் மேலே மூடியால் மூடவும். போகிணி போல் பாத்திரம் இல்லாதவர்கள், கனமான

இலுப்பச்சட்டியில் இதை வார்க்கலாம். சிறிது நேரம் கழித்துத் திறந்து பார்த்தால் அப்பத்தின் ஓரம் பொன்னிறமாக இருக்கும். அப்போது ஒரு சாத கரண்டியின் உதவியுடன் அப்பத்தை மெள்ளத் திருப்பிப் போட வேண்டும். முதலில் விட்ட எண்ணெயே போதுமானது. மறுபுறம் திருப்பியதும் போகிணியை மூட வேண்டாம். மேல்புறம் போல் அடிப்புறமும் சிவக்க வேண்டும். இது இருபுறமும் மொறுமொறுவென்றும், உள்ளே பொலபொலவென்றும் இருக்கும். இதைக் கத்தியால் பாதியாக கட் செய்து பரிமாறவும். இதற்குத் தொட்டுக் கொள்ள புளித் துவையல் மிக நன்றாக இருக்கும். இதை முதல் நாள் வார்த்து வைத்தால், மறுநாள் கூட உபயோகிக்கலாம்.

*புளித் துவையல் :*

*தேவையான பொருட்கள் :*

நல்லெண்ணெய் - 1 டீஸ்பூன்,
கடுகு - 1 டீஸ்பூன்,
உளுத்தம்பருப்பு - 2 டேபிள் ஸ்பூன்,
மிளகாய் வற்றல் - 2,
பெருங்காயம் - சிறிதளவு,
உப்பு - தேவையான அளவு,
புளி - கொட்டைப் பாக்களவு,
வெல்லம் - 2 டீஸ்பூன்,

*செய்முறை :*

எண்ணெயில் சாமான்களை வறுத்து, புளி, உப்பு வெல்லம் சேர்த்துச் சிறிது தண்ணீர் தெளித்துக் கெட்டியாக அரைக்கவும். புளித் துவையல் தவிர, ஊறுகாய், வெல்லம் எது வேண்டுமானாலும் தொட்டுக் கொள்ளலாம். சூடாகப் பரிமாறினால் கரகரப்பாக இருக்கும். ஆறினால் கரகரப்பு இருக்காது. பழம் போகிணி அப்பம் ருசிக்குப் போட்டிதான் ஏற்படும்.

மாவு வார்ப்பதற்கு ஊத்தப்ப மாவு போல் மிகவும் கெட்டியாக இருத்தல் அவசியம்.

- சித்ரா முரளீதரன், சென்னை 28.

## மூன்றாம் பரிசு ரூ. 100/-

# மணத்தக்காளி பச்சடி

தேவையான பொருட்கள் :

மணத்தக்காளி சிறு கிண்ணம் அளவு,
மிளகாய் - 2,
தக்காளிப் பழம் - 1,
வெங்காயம் - 1,
தேங்காய் - 1/4 மூடி,
சீரகம் - கொஞ்சம்,
புளி - சிறிதளவு,
மிளகாய் வற்றல் - 2,
வெல்லம் - சிறுதுண்டு,
பெருங்காயம் - 1 சிறு துளி,
எண்ணெய் - சிறிதளவு,
உப்பு - தேவையான அளவு.

*செய்முறை :*

முதலில் மணத்தக்காளிக் காயை வாணலியில் எண்ணெயில் விட்டு வதக்கிக் கொள்ள வேண்டும். பின் அரிந்து வைத்துள்ள மிளகாய், வெங்காயம், தக்காளி இவைகளையும் போட்டு நன்கு வதங்கிய பின் புளி கரைத்த நீரை விட்டு நன்கு வேக விடவும். பின் தேங்காய், மிளகாய் வற்றல், சீரகம் இவைகளை விழுதுபோல் அரைத்து மணத்தக்காளியில் போட்டுக் கிளறவும். இறக்கி வைக்கும்போது ஒரு சிறு துண்டு வெல்லத்தைப் போட்டுக் கிளறி வைக்கவும்.

பின் கறிவேப்பிலை, கடுகு, உளுத்தம் பருப்பு இவைகளைப் போட்டுத் தாளிக்கவும்.

இது ஜீரணக் கோளாறு, வயிற்றுப் பொருமல், மலச்சிக்கல், அல்சர் போன்ற வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்குச் சிறந்த உணவாகும்.

- ராஜம் விநாயகம்,
திருநெல்வேலி - 11.



வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு சாதாரணமாக வியர்வை காரணமாக நெற்றியில் உள்ள ஸ்டிக்கர் பொட்டு விழுந்து விடும். அவசரத்துக்குப் பையில் தேடினால் கிடைக்காது. ஒரு ஸ்டிக்கர் பொட்டைக் கைக்கடியாரத்தின் அடியில் ஒட்டி வைத்தால் பஸ்ஸில் பிரயாணம் செய்யும்போது ஸ்டிக்கர் பொட்டு விழுந்து விட்டால் உடனே எடுத்து வைத்துக் கொள்ளலாம்.

- நிரஞ்சனா

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## அட்லு

தேவையான பொருட்கள் :
பாசிப் பருப்பு - 1 தம்ளர்,
பச்சரிசி - 1/4 தம்ளர்,
வெல்லம் - 1/2 கிலோ,
தேங்காய் - 1 மூடி,
ஏலக்காய் - 8,
உப்பு - 1/2 ஸ்பூன்,
தேங்காய் எண்ணெய் - 200 மில்லி.

செய்முறை :
பாசிப் பருப்பையும், அரிசியையும் மூன்று அல்லது நான்கு மணி நேரம் நன்றாக ஊற வைக்கவும். பிறகு கொஞ்சம் உப்பு போட்டு கிரைண்டர் அல்லது மிக்ஸியில் கொரகொரவென்று அரைக்கவும். நைசானால் நன்றாக இருக்காது. மாவை வழிக்கக் கொஞ்ச நேரம் இருக்கும்பொழுதே அத்துடன் தேங்காய் (துருவியது), வெல்லம், ஏலக்காய் போட்டு அரைத்து வெல்லம் கரைந்தவுடன் மாவை எடுத்து விடவும். பிறகு பணியாரச் சட்டியை மெல்லிய அனலில் வைத்து ஒவ்வொரு கரண்டியாக ஊற்றி எடுக்கவும். பணியாரச் சட்டி இல்லாதவர்கள் வாணலியில் எண்ணெயை ஊற்றி அதில் ஒவ்வொரு கரண்டி மாவாக ஊற்றி, திருப்பிப் போட்டு வெந்தவுடன் எடுக்கவும். விருப்பமானவர்கள் நெய்யிலும் சுடலாம். மாவைக் கெட்டியாக நீர் சேர்க்காமல் அரைக்கவும். வெல்லம் போடுவதால் அந்தத் தண்ணீரே சரியாக இருக்கும். சுடும் பொழுது சாப்பிடும் சுவையைவிட அதை மறுநாள் சாப்பிடும் போதுதான் மிகவும் சுவையாக இருக்கும். இரண்டு நாள் ஆனாலும் கெடாது.

- ஜி. ராஜபிரபா, திருச்சி - 3.

ஜாங்கிரி செய்தபின் மீந்துபோன சர்க்கரை ஜீராவை வீணாக்காமல் கால் தம்ளர் ஜீராவை முக்கால் தம்ளர் மோர் சேர்த்துக் கலந்து சாப்பிட, சுவையான லஸ்ஸி தயார். குடிக்கக் குடிக்க, மீண்டும் மீண்டும் கேட்கும் குழந்தைகள். ஃப்ரிஜ்ஜில் வைத்தும் சாப்பிட இந்த லஸ்ஸி அமிர்தம்தான் போங்கள்!

- ரமா சந்திரசேகரன்



## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## உளுத்தங்களி

தேவையான பொருட்கள் :
முழு உளுந்து 1/2 கிலோ,
வெல்லம் 3/4 கிலோ,
முந்திரி - 50 கிராம்,
தேங்காய் - 1/2 மூடி,
திராட்சை - 25 கிராம்,
ஏலக்காய் - 4,
உப்பு - 1/2 ஸ்பூன்,
தேவையான அளவு எண்ணெய்.

செய்முறை :
முதலில் உளுந்தை 3 மணி நேரம் ஊற வைக்கவும். பிறகு களைந்து மிக்ஸியில் போட்டுப் பெரிய ரவை பதத்திற்கு மசித்து, தோசை மாவு பதத்திற்குக் கரைத்து 1/2 மணி நேரம் மூடி வைக்கவும். தேங்காயை சன்னமாகத் துருவிக் கொள்ளவும். முந்திரி, திராட்சையைச் சிறிதளவு எண்ணெயில் வறுத்துத் தனியே எடுத்து வைக்கவும். ஏலக்காயை வறுத்துப் பொடி பண்ணிக் கொள்ளவும். வெல்லத்தைப் பொடியாக்கி நீரில் கரைத்து மண் போகும்படி வடிகட்டி 3 பெரிய தம்ளர் அளவு எடுத்துக் கொள்ளவும்.

அடி கனமான வாணலியை அடுப்பில் வைத்துச் சிறிது எண்ணெய் ஊற்றி அது காய்ந்ததும் கரைத்து வைத்துள்ள உளுந்து மாவை அதில் கொட்டவும். ஜல்லிக் கரண்டியால் கிளறிக் கொண்டே இருக்கவும். லேசாகக் கொதிக்கத் தொடங்கியதும் வெல்லத் தண்ணீரை ஊற்றி கட்டி படாமல் கிளறிக் கொண்டே இருக்கவும். பிறகு தேங்காய், திராட்சை, முந்திரி, ஏலக்காய்த் தூள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கொட்டி கட்டி தட்டா வண்ணம் கிளறி, பாத்திரத்தில் ஒட்டாமல் வரும்பொழுது 2 ஸ்பூன் நெய் விட்டுக் கிளறவும். தண்ணீர் தொட்டுக் களியில் கைவைத்துப் பார்த்தால், கையில் ஒட்டாமல் இருந்தால் அதுவே பதம். இது செய்வதும் சுலபம். செலவும் சிக்கனம். சத்தும் நிறைந்தது. காலை வேலையை எளிதாக்க, இந்தக் களியை இரவிலேயே கிண்டி, நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி பத்து நிமிடங்கள் கழித்து கத்தியால் துண்டங்கள் போடுவது போலக் கீறி வைத்து விட்டால் காலையில் கேக் துண்டங்கள் போல அழகாக வந்துவிடும்.

- ஜெயசித்ரா ஜெயராஜன்,
பெங்களூர் - 84.

# ஸ்ரீமதி சிட்பண்ட்ஸ்

8 வது ஆண்டுவிழா



14-4-1994

உங்களுக்கு
தொடர்ந்து சிறப்பாக
மேலும் பணிபுரிய நாங்கள்
எங்களை அர்ப்பணித்து கொள்கிறோம்.

நிதி முறையில் எங்கள்
சிறப்பு மிக்க நேர்மை, பரிபூரணமான
தொழில் நுட்பம், நாங்கள் பின்பற்றும் முறை,
வாடிக்கையாளர்களுக்கு சேவை செய்வதில் உள்ள ஆர்வம்
போன்ற அனைத்தும் எங்களை மேலும் திடப்படுத்தி உள்ளது.
வாடிக்கையாளர்கள் ஊக்கத்தை
தொடர்ந்து எங்களுக்கு அளிக்க தாழ்மையுடன் வேண்டுகிறோம்.

எங்களது சீட்டு அமைப்புகள்

| குரூப் | சிட்டுகாலம் (மாதங்கள்) | மாதாந்திர சந்தா (ரூ) | மொத்த தொகை (ரூ) | அதிகபடி தள்ளுபடி |
|---|---|---|---|---|
| SV | 50 | 10,000 | 5,00,000 | 30% |
| SL | 50 | 2,000 | 1,00,000 | 30% |
| SJ | 50 | 1,000 | *50,000 | 30% |
| SR | 50 | 600 | 30,000 | 30% |
| SA | 40 | 500 | 20,000 | 30% |
| SB | 40 | 250 | 10,000 | 30% |
| SC | 40 | 125 | 5,000 | 30% |
| SK | 25 | 1,000 | 25,000 | 20% |
| SI | 30 | 500 | 15,000 | 20% |
| SF | 25 | 400 | 10,000 | 20% |
| SS | 25 | 200 | 5,000 | 20% |

SCF

**ஸ்ரீமதி சிட்பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்**

பதிவு அலுவலகம் 34-B நுங்கம்பாக்கம்
நெடுஞ்சாலை சென்னை - 600 034, போன்: 8250770

* நுழைவுக் கட்டணம் தனி

புதிதாக சேருபவர்களுக்கு பரிசு உண்டு.

KAN ADS

# திருமண மலர்

## மணமகள் தேவை

★ ஈரோட்டில் ரயில்வேயில் பணிபுரியும், ரூ.2000/- சம்பாதிக்கும் 36 வயது மணமகனுக்கு, துளுவ, சோழிய வேளாளர், பிள்ளை, முதலியார் வகுப்பைச் சேர்ந்த படித்த, வேலையிலுள்ள, வேலையில்லாத கௌரவமான குடும்பப்பாங்கான, அழகான முப்பது வயதுக்குட்பட்ட மணமகள் தேவை. பெட்டி எண்: 10902.

★ பண்ருட்டி திருவளம் சைவ வேளாளர் பிள்ளை பையனுக்கு 26, 176 செ. மீ., 7000/-, பி.ஈ. ஹஸ்தம் நட்சத்திரம் கேரளாவில் வேலை பார்க்கும் நல்ல நிறம் வசதியுள்ள வரனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த படித்த பெண் தேவை. ஜாதக குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 10901

★ "மெஹராஷ்ட்ரா 40 வயது, 6 அடி விவாக மில்லாமல் விவாகரத்தான வசதியுள்ள இஞ்சினியருக்கு சுமார் 30 வயதுள்ள சென்னையில் வசிக்க இஷ்டமுள்ள டாக்டர் அல்லது பட்டதாரி விதவை மணமகள் தேவை. ஜாதகம் முழு விவரங்கள் அனுப்பவும். பெட்டி எண்: 10903.

★ தமிழ்வாதவா பிராமின், 25, 180 cms/3000/- B.A.(Corporate), D.S.A,D.P.C.S.- கம்ப்யூட்டர் Software Professional - பிராமின், தமிழ் வாதவ முதலியார் நல்ல குடும்பப்பாங்கான பட்டதாரி/ டிப்ளமோ பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ள வும். பெட்டி எண்: 10904.

★ புதுக்கோட்டை மாவட்டம், இந்து, கள்ளர், 27, +2 படித்த மத்திய அரசு நிரந்தர ஊழியர். மாத வருவாய் 1500/- அதே வகுப்பைச் சேர்ந்த +2 படித்த மணமகள் தேவை. ஜாதகக் குறிப்புடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10905



★ ஐயர், சோழிய வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், விசாகம் 33,160,எம்.எஸ்.எம்.சி, 3000 திருப்பூரில் பெரிய Export Company M.A. Asst. Manager ஆக பணிபுரியும் கும்பகோணத்தை சேர்ந்த மணமகனுக்கு குடும்ப பாங்கான மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10906

★ சோழிய வெள்ளாளர் 26, 5.6, 3000/- M.sc., P.G. D.B.A.,(MBA) சென்னையில் Public Ltd Multinational Company ல் வேலை. ஒரே மகன். சொந்தவீடு. அதே இனத்தைச் சேர்ந்த வேலையிலுள்ள/ வேலையில்லாத பட்டதாரி பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 10907

* Alliance invited from decently employed girls for Vadama Kausika Chitrai 31, 172 cms, 2600/- Central Government Delhi. Boy owns Government Accommodation. Sub-sect No bar. Reply with Horoscope and particulars to Box No: 10908

★ தமிழ் வாதவா 26, D.M.E. சொந்தமாக வட்டி கடை வைத்து அதில் 6500/- மாதவருமானமுள்ள அழகிய மணமகனுக்கு (சிதம்பரம் கடலூர், மற்றும் பண்ருட்டி வட்டத்தைச் சேர்ந்த) மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். உடன் திருமணம். பெட்டி எண்: 10909.

* Kerala Iyer, Vadamal, Bharadwaja,Swathi, Thulam, 33, 5'5'', +2, 3000/- doing own business near Melmaruvathur seeks alliance from girls employed in Government Schools/ officer. Tamil Iyers and subsects no bar. Reply Box No: 10910

★ வாணியச் செட்டியார், பி.ஏ. அசுபதி நட்சத்திரம், மேஷ ராசி, வயது 32, உயரம் 5'5'', சொந்த வீடு, இன்சூரன்சில் பணி, சம்பளம் 4500/-, வசதியான பையனுக்கு நிரந்தர பணியில் உள்ள அழகான பெண் தேவை. பெட்டி எண்: 10911.

* Employed Girl for Tamil Iyer Vadamal Kousika Visakam B.sc/Dip in comp Science 31/156cms. Employed in Delhi No Dowry Send Horoscope with Details. Box No:10912.

* Alliance invited for fair, hadsome, Sozhia Vellala, Mudaliar, D.M.E.,31,171cm, 4000 p.m. Kettai, working in State Government from respectable family girl, preferably employed in Madras. Sub sect no bar. Box NO:10913.

* Agamudayar (SERVAI), B.E., 27, 178cms working in a reputed Mutinational company at Madras seeks fair, good looking, Home loving and educated

girl between 20-24 years of the same community, Reply with Horoscope Box.No.10914.

* Madras Employed pious affectionate educated Vadamal Bride for vathulam Central Govt LDC Pooradam 30, M.A., 175cms Middle Class early decent Mariage. Box No:10915

* Vadakalai, Moudgalyam, Avittam, B.com, 37, 2500/- fair and hand some Accountant, Hyderabad (innocent legal divorcee and without encumberance) seeks alliance from Vadagalai, Thengalai employed girls preferatly from Hyderabad from good family background" Box No:10916.

★ தஞ்சை ஜில்லா அகமுடையார் பூராடம் நட்சத்திரம் பி. எஸ்ஸி, கம்ப்யூட்டர் சயின்ஸ் 27, 170 செ.மீ.,4000 நல்ல சிகப்பு, அழகுள்ள வேலையில் உள்ள அல்லது வேலைக்கு செல்ல இருக்கும் அதே இன பட்டதாரி மணமகள் ஜாதகத்துடன் வரவேற்கப்படுகிறது. பெட்டி எண்: 10917

★ தமிழ் உடையார் 33, 160 செ. மீ., 2500/- பிரபல தனி யார் நிறுவனத்தில் DRAFTSMAN நிரந்தரமாக பணிபுரிந்து வருபவருக்கு சென்னையில் அரசாங்கம், தனியார் நிறுவனத்தில் நிரந்தரமாக பணி புரிந்து வரும் மணமகள் தேவை. ஜாதி, மதம் தடையில்லை. பெட்டி எண்: 10918

★ தமிழ் ஐயர் வடமாள் பாரத்வாஜ கோத்திரம் மிருகசீரிஷம் 3ம் பாதம், எஸ். எஸ். எல். சி, வயது 34, 5'3", 2000/-, சென்னை ரயில்வேயில் பியூன் வேலை பார்க்கும் பையனுக்கு வேலை பார்க்கும், பார்க்காத குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விபரத்துடன் எழுதுக. பெட்டி எண்: 10919

★ "தெலுங்கு க்ஷத்திரிய ராஜு" இனத்தைச் சேர்ந்த தனியார் கம்பெனி ஒன்றில் ரூ.2500 சம்பாதிக்கும் 27வயது இளைஞருக்கு, தெலுங்கு பேசும் இனத்தைச் சேர்ந்த, வேலையில் உள்ள பெண் தேவை" பெட்டி எண்: 10920

* Iyer Bhayathwajam Thiruvathirai 32, 165, 5000/- Self-employed, Moolam 34, 157cms, 5000/- employed Modi Xerox Delhi, Aswini 37, 160cms, 2500/- State Govt Ramanathapuram sub-sect no bar. Reply with girl's horoscope to Box No:10921.

* Telugu Mulakanadu Brahmin Kasyaba Anusham 175 cms, 29, 8000/- M. Tech Sr. Engineer in public Sector seeks fair modest educated girls of respectable family backround apply with Horoscope to.Box No:10922.

* Telugu Mulakanadu Brahmin Kasyaba Kirthigai 180 cms, 33, 5000/- AICWA Divorcee without encumbrances seeks Telugu good looking modest educated girsl of respectable family background early marriage apply with Horoscope to Box. No:10923.

* Alliance invited for Keralite Brahmin boy Moudgalya Vadammal, Astham 33, 162cms, B.Com. self employed. Suitable Keralite girl apply with Horoscope. Box No: 10924.

★ "ஐயர், வடமாள், விசுவாமித்ர கோத்ரம் உத்திராட நக்ஷத்திரம், 30,162,3600 B.Sc. Indian telephone

Industries Limited (ITI Ltd) Bangalore ல் ஸ்டெனோவாக வேலை பார்க்கும் பையனுக்கு இன்ஷ்யூரன்ஸ், பாங்கு, பொது நிறுவனங்களில் பெங்களூரில் வேலை பார்க்கும் பட்டதாரி பெண் தேவை. ஜாதகத்துடன் அணுகவும். பெட்டி எண்: 10925.

★ "வடமாள், ஸ்ரீவத்ஸம், அஸ்வதி 27, 172 செ.மீ, கம்ப்யூட்டர் பட்டதாரி, வெளிநாட்டில் பணிபுரியும் வரனுக்கு 164 செ.மீ.க்கு குறையாத, அழகான, வெளிநாடு செல்ல சம்மதிக்கும், பட்டதாரி பெண் தேவை. விபரங்களுடன் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 10926

* Sozhia Vellala Pillai, B.Sc., D.Pharm, PGDMM, 27, 180cms, 5000/- Eployed Reputed Pharmaceutical company seeks alliance from goodlooking graduate girl preferably employed subsects Mudaliars no bar. Apply with family details Horoscope to Box No: 10927.

* Seer Karuneegar Veg, 34 years, M. Com ACS, Company Executive, Rs. 6000/-, seeks employed, unemployed graduate Veg girls. Send Horoscope family details to. Box No: 10928.

★ நல்ல நிறமும், அழகும், வசதியும் உடைய இந்து நாடார் 42, உயரம் 166 செ. மீ., அரசு வேலையில் மாதம் ரூ. 4300/- மற்றும் இதர குடும்ப வருமானம் மாதம் ரூ. 5000/- பெறும் மணமகனுக்கு 35 வயதுக்குட்பட்ட படித்த அல்லது வேலையில் உள்ள பெண் தேவை. குழந்தையில்லாத விதவை பெண்ணும் விண்ணப்பிக்கலாம் (கன்னியாகுமரி மாவட்டம்) பெட்டி எண்: 10929.

★ வன்னியர் குல க்ஷத்ரியர் வயது 27, பி. ஈ, சிவில். ரூ. 4000/- 5'8'' தனியார் கம்பெனி. மாநிறம். ஒரே பையன். பெற்றோர் உண்டு. தகப்பனார் அரசுப் பணி. மணமகளுக்கு அதே இனத்தில் பேச்சலர் டிகிரி படித்த, ஜாதகப் பொருத்தமுடைய மணமகள் தேவை. சிறிய மற்றும் ஈசன்டான குடும்பமாக இருக்க வேண்டும். பெட்டி எண்: 10930.

★ சௌராஷ்டிரா ஜாபாலி, பூராடம், 35, 186 செ.மீ., D.T.T ஆழ்தியலைஜியான விந்தி டைரக்டராக வெளிநாடு சென்றுவரும் மணமகனுக்கு, அதே இனத்தில் 25, உயரம் 160செ.மீ.க்குக் குறையாத, பட்டதாரியும், ஆங்கிலத்தில், வெளிநாடு செல்ல - நாட்டமுள்ள பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10931.

* Allicance invited from pretty, tall green card holders for washington-based youngish looking Iyer bachelor, computer professional MS(USA) 40, 170, Vadama, Pouragutsa Gotra, Visakam, Suddha Jadhakam. Father retired Class–I Officer. Elder prother-senior IAS Officer, No bars to other Brahmin sects. Mutual acceptence by the boy and the girl prime consideratin. Send full details to. Box No:10932.

* Homely attractive Brahmin spinster any sect below 31 for North Based tall fair good looking Tamil Iyer 35 B.E. Industrialist very high income boy unencumbered Innocent Divorcee few day's

சித்திரைப் பெண்ணே! சித்திரைப் பெண்ணே! — நீ
நித்திரை கலைந்திங்கு வந்ததன் பின்னே
பத்தரை மாற்றுத் தங்கமாய் வழங்கணும் மண்ணே — இந்த
முத்திரைச் சொல் பலிக்கணும் கண்ணே.

— கவிஞர் நல்முத்து

திருமணமலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 75/- தொகையை, 'மங்கையர் மலர்' பெயருக்குச் சென்னையில் மாற்றலாகக் கூடிய MICR டிமாண்ட் டிராப்டாக அனுப்ப வேண்டும். அல்லது மணியார்டர் மூலமாக அனுப்பலாம். போஸ்டல் ஆர்டர் ஒத்துக் கொள்வதில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தரவேண்டும். திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் பதில் அனுப்புபவர்கள், 'விளம்பரதாரர், பெட்டி எண் : C/o. மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097 என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தனிப்பட்ட எந்தக் கடிதப் போக்கு வரத்தும் கிடையாது.

marriage teetotaller Excellent affluent family no demands registered simple marriage send truthful details girl family no cheating please. Box No.10933.

* Alliance from poor but pretty girls for Iyer, Vadama, Bharathwaja Ailyam,35, 160 cms, 4000/- public Ltd, Unencumbered legal divorcee. Horo-secope optional. Box No.10934.

* Vaniar chettiar, 31, 167cms, 6000/-, fair employed as Senior Regional Manager in reputed Company, Coimbatore, seeks graduate, fair, homely girl reply with horoscope details. Box No:10935.

* Alliance invited for a boy, Vadakalali, Rohini employed as an executive in a reputed Export Company. Salary Rs. 2.500/- (Plus Incentive) girl must be employed in Government or Private.No Dowry. Box No: 10936.

* Vadagalai, Kousikam, Hastham, 33, 170cms, 2000/- Stenographer/Pvt Ltd Co/Madras, employed ,willing to go for employment, subsect no bar. Decent alliance invited with Horoscope. Box No:10937.

* Kallar, Widower with one son, 35, 168 cms, 7000/- Exe. Engr. in Govt Undertaking, seeks graduate, good looking girl from good family. widow no issue upto 28 also can apply. Reply with details Horocope to. Box No: 10938.

* Allicance invited from Iyer, intercaste parents girls (Iyer with other) Iyer divorcee without encumberances for pure Vegetarian 168cms, 37, 5000/- Management Cadre in Oil Sector. Box No: 10939.



* Alliance invited from employed girls for Vadama boy, Deaf, good-looking, fair, Kousika Gothram, Anusham, 31, 5'4" employed in Private Computer in Madras, Son of Retired General Manager, Write to Box No:10940.

* Alliance for Iyer Vadama Srivatsa widower Kirutigal 42, girl's willing to take care children in same, sub-sect. Reply with Horescope & Family Details to Box No:10941.

★ 31, ஈரோடு வேளாள கவுண்டர் உயரம் 167, M.Sc, LIC மேல்நிலை உதவியாளர் 4200/- படித்த பெண் தேவை உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்புகொள்ளவும். பெட்டி எண்: 10942.

★ வன்னிய குல க்ஷத்திரியர், என்ஜினியர், 28, B.Sc, B.E, 5000/-, மத்திய அரசாங்க நிறுவனம், ஒரே மகன் சகோதரிகள் இல்லை. தாயை இழந்தவர். நல்ல குடும்பத்தைச் சார்ந்த இதே இன படித்த குணவதியான மணமகள் தேவை. பெட்டி எண்: 10943.

★ சௌராஷ்ட்ரகுலம் ஜாபாலி கோத்திரம், 33 வயது, அரும் தமிழக அரசு நிறுவனத்தில் வேலை பார்க்கும் பி.ஏ. பட்டதாரி மணமகனுக்கு வேலையிலுள்ள, படித்த மணமகள் தேவை. ஜாதகக் குறிப்புடன் தொடர்பு கொள்ளவும். மணமகள் இந்தியில் மேல்படிப்பு முடித்தவர். பெட்டி எண்: 10944.

★ ஐயர், ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடமாள், கிருத்திகை, 32, 5'5", பி.காம். சென்னையில் தனியார் நிறுவனத்தில் பணிபுரிபவர் சம்பளம் ரூ.2000/- வேலையில் உள்ள பெண்தேவை. ஜாதகத்துடன் அனுகவும். பெட்டி எண்: 10945.

★ சேலம், செங்குந்த முதலியார் 27, M.A.BEd, கிருத்திகை பாரத் ஸ்டேட் வங்கியில் பணிபுரியும் நல் வரனுக்கு இதே வகுப்பில் வங்கித் துறையில் பணிபுரியும் சிறப்பான நற்பண்புள்ள மணப் பெண் தேவை. பெட்டி எண் : 10946.

★ "திருநெல்வேலி கார்காத்த சைவப்பிள்ளை தளவாருடைய கோத்திரம். 27, 4500/-, D.M.E. (A.M.I.E) 169 செ.மீ. விசாகம். மத்திய அரசில் பணி புரியும் BARC மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த, குடும்பப்பாங்கான, அழகான, வேலை யில் உள்ள, இல்லாத பட்டப்படிப்பு படித்த மண மகள் தேவை" பெட்டி எண்: 10947.

